பரீஸ் வஸீலியெவ்

# அதிகாலையின் அமைதியில்



பரீஸ் வஸீலியெவ்

# அதிகாலையின் அமைதியில்

# 1

171வது இருப்புப் பாதைக் கிளை நிலையத்தில் பன்னிரண்டு வீடுகளும் தீயணைப்புக் கொட்டிலும் உயரம் அற்ற நீண்ட பண்டகசாலையும் எஞ்சி இருந்தன. பண்டகசாலை, கற்பாளங்களால் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பட்டது. கடைசி விமானத் தாக்கில் நீர்த்தொட்டிக் கோபுரம் இடிந்து விழுந்துவிட்டது. ஆகவே ரயில் வண்டிகள் இப்போது இங்கே நிற்பதில்லை. ஜெர்மானியர் விமானத் தாக்குகளை நிறுத்திவிட்டார்கள். ஆனால் அவர்களுடைய விமானங்கள் கிளை நிலையத்துக்கு மேலே நாள்தோறும் வட்டமிட்டன. எனவே, இராணுவத் தலைமை அலுவலகம் எதற்கும் இருக்கட்டும் என்று இரண்டு விமான எதிர்ப்புப் பீரங்கிகளைக் கொண்ட படைகளை இங்கே வைத்திருந்தது.

1942ம் ஆண்டு மே மாதம் நடந்து கொண்டிருந்தது. மேற்கே (ஈரித்த இரவுகளில் பீரங்கிகளின் பெரு முழக்கம் அங்கிருந்து வந்தது) இரண்டு தரப்பினரும் இரண்டு மீட்டர் ஆழம் தரையைத் தோண்டிக் காப்பு அகழ்கள் அமைத்துக் கொண்டு முடிவாக நிலைத்த போரில் ஈடுபட்டிருந்தார்கள். கிழக்கே ஜெர்மானியர் கால்வாயையும் மூர்மன்ஸ்க் சாலையையும் இரவும் பகலும் இடைவிடாது குண்டுகளால் தாக்கிய வண்ணம் இருந்தார்கள். வடக்கே கடல் வழிகளுக்காக உக்கிரமான போர் நடந்து கொண்டிருந்தது. தெற்கே, முற்றுகைக்கு உள்ளான

லெனின்கிராத் விடாப்பிடியான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந்தது.

இங்கேயோ, ஒரே அமைதி நிலவியது. நிசப்த மான, வேலையற்ற சூழ்நிலையில் படைவீரர்கள் செய லின்றிக் குமைந்தார்கள். நிலையத்தின் பன்னிரண்டு வீடுகளிலோ, இளம் பெண்களும் விதவைகளும் நிறைய இருந்தார்கள். வெறும் காற்றிலிருந்து கூட மது தயாரிக்க வல்லவர்கள் இவர்கள். படையினர் மூன்று நாட்கள் உறங்கிக் களையாறினார்கள், நில வரத்தை உற்று நோட்டம் இட்டார்கள். நான்காம் நாள் ஒருவருடைய பிறந்த நாள் கொண்டாட்டம் தொடங்கியது. அதன் பிறகு உள்ளூர்ச் சரக்கின் மணம் கிளை நிலையத்தில் இடையருது கமழலாயிற்று.

கிளை நிலையக் கமாண்டர் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ் கடுகடுத்த முகத்தினன். அவன் படை யினரின் நடத்தை பற்றி இராணுவத் தலைமை அலு வலகத்துக்கு அறிக்கைகள் அனுப்பினன். அறிக்கை களின் எண்ணிக்கை பத்து ஆனதும் தலைமை அதி காரிகள் வஸ்கோவுக்கு மறுபடி கண்டனம் தெரி வித்துவிட்டு, களியாட்டத்தால் உப்பிப்போயிருந்த பாதிப்பலமுள்ள பிளாட்டூன் நபர்களை மாற்றினார் கள். புதிய படைவீரர்கள் வந்த பிறகு ஒரு வாரம் வரை கமாண்டர் எப்படியோ சமாளித்தான். பிற் பாடு பழைய கதை மறுபடி தொடங்கியது. இது முந்திய கதையை அப்படியே ஒத்திருந்தபடியால் கமாண்டர் வேறு வழியின்றிப் பழைய அறிக்கை களையே தேதியையும் பெயர்களையும் மட்டும் மாற்றிப் பெயர்த்து எழுதி அனுப்பினன்.

இந்த அறிக்கை பற்றி விவரம் அறிவதற்காக வந்த மேஜர் சீறினார். ''வெட்டி வேலையில் நேரம்

போக்குகிறீர். வரிந்து தள்ளுகிறீர். பெரிய எழுத்தாளர் என்ற நினைப்பு போலிருக்கிறது'' என்று இரைந்தார்.

''குடிப் பழக்கம் இல்லாதவர்களை அனுப்புங்கள்'' என்று பிடிவாதமாகத் திரும்பச் சொன்னான் வஸ்கோவ். பெருங்குரல் மேலதிகாரிகளிடம் அவனுக்கு பயம் தான். ஆனாலும் மந்திரம் செபிப்பவன் போலத் தன் கருத்தை மறுபடி மறுபடி சொன்னான்: ''குடிப் பழக்கம் இல்லாதவர்களையும் அதோடு இந்த... பெண்பிள்ளை விவகாரத்தில் தலையிடாதவர்களையும்.''

''அலிகளை அனுப்பச் சொல்லுகிறீரா?''

''உங்களுக்குத் தெரியாதது இல்லை'' என்று ஜாக்கிரதையாகச் சொன்னான் வஸ்கோவ்.

''சரி, வஸ்கோவ்!'' என்று தம் கண்டிப்பினால் முகம் சிவப்பேறக் கூறினார் மேஜர். ''குடிப் பழக்கம் இல்லாதவர்களை உன்னிடம் அனுப்புவோம். பெண்கள் விஷயத்திலும் எல்லாம் ஒழுங்காய் இருக்கும். ஆனால் ஒன்று. இவர்களையும் உன்னால் சமாளிக்க முடியாவிட்டால், ஆமாம்...''

''நல்லது'' என்று உணர்ச்சி இன்றி இசைவு தெரிவித்தான் கமாண்டர்.

ஆசைகளை அடக்கிக்கொள்ள முடியாத படை வீரர்களை மேஜர் அழைத்துச் சென்றார். பெண்கள் விஷயத்திலும் மதுபான விஷயத்திலும் சார்ஜண்டு மேஜரைவிடக் கண்டிப்பான ஒழுங்கு கடைப்பிடிப்பவர்களான படைவீரர்களை அனுப்புவதாகப் போகு முன் மறுபடி வாக்களித்தார். ஆனால் இந்த வாக்குறுதியை நிறைவேற்றுவது அவ்வளவு எளிதாக

இல்லை போலும். ஏனென்றால் மூன்று நாட்கள் ஆகியும் ஒருவரும் வரவில்லை.

''விஷயம் சிக்கலானது'' என்று தான் குடியிருந்த வீட்டுச் சொந்தக்காரி மரீயா நிக்கீபரவ்னாவுக்கு விளக்கினான் வஸ்கோவ். ''இரண்டு படைப்பிரிவுகள் என்னும் போது குடிப் பழக்கம் இல்லாத கிட்டத் தட்ட இருபது ஆட்கள் ஆயிற்றே. போர் முனை நெடுகிலும் துருவிப் பார்த்தால் கிடைக்கலாம். அது கூட சந்தேகந்தான்...''

ஆனால் அவனுடைய சந்தேகம் ஆதாரம் அற்றது ஆகிவிட்டது. விமான எதிர்ப்புப் படையினர் வந்து விட்டதாக மறு நாள் காலையிலேயே வீட்டுக்காரி தெரிவித்தாள். அவளுடைய குரலில் ஏதோ குத்த லாக ஒலித்தது. ஆனால் தூக்கக் கலக்கத்தில் அது என்ன என்று சார்ஜண்டு மேஜர் புரிந்து கொள்ள வில்லை. தனக்குக் கவலை அளித்த விஷயத்தைப் பற்றி யே அவன் கேட்டான்:

''கமாண்டரோடு வந்திருக்கிறார்களோ?''

''அப்படித் தெரியவில்லை.''

''ஆண்டவன் காப்பாற்றினான்! அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வதைவிட மோசமானது எதுவும் இல்லை.'' சார்ஜண்டு மேஜர் தன் கமாண்டர் பத வியை உயர்வாக மதித்தான்.

''அதற்குள் மகிழ்ந்து விடாதீர்கள், பொறுங் கள்'' என்று மர்மப் புன்னகை செய்தாள் வீட்டுக் காரி.

''மகிழ்வது எல்லாம் சண்டை முடிந்த பிறகு தான்'' என்று தர்க்கப் பொருத்தமாகச் சொல்லி விட்டுத் தொப்பியை மாட்டிக்கொண்டு வெளியே சென்றான் வஸ்கோவ்.

சென்றவன் மலைத்து நின்றுவிட்டான்: வீட்டுக்கு முன்னே இரண்டு வரிசைகளாக நின்றார்கள் உறக்க மயக்கத்தில் இருந்த பெண்கள். தூக்கக் கலக்கத்தில் தனக்கு அப்படித் தோன்றுவதாக எண்ணிக் கண்களைக் கொட்டினான் சார்ஜண்டு மேஜர். ஆனால் படைவீரர்களின் சட்டைகள் இராணுவ விதிகளில் குறிக்கப்படாத இடங்களில் முன்போலவே விரைப்பாகத் துருத்தி இருந்தன. தொப்பிகளின் அடியில் எல்லா வண்ணங்களிலும் மோஸ்தர்களிலும் நீட்டிக் கொண்டிருந்தன குழல் கற்றைகள்.

''தோழர் சார்ஜண்டு மேஜர், தனி விமான எதிர்ப்பு இயந்திரத் துப்பாக்கிப் பட்டாளத்தின் ஐந்தாவது கம்பெனியைச் சேர்ந்த மூன்றாவது பிளாட்டூனின் முதலாவது, இரண்டாவது பிரிவுகள் இலக்கைக் காப்பதற்காக உங்கள் தலைமையில் பணியாற்ற வந்திருக்கின்றன'' என்று கம்மிய குரலில் அறிக்கை செய்தாள் முதுநிலையினள். ''அறிக்கை செய்பவள் பிளாட்டூன் உதவிக் கமாண்டர் சார்ஜண்டு கிரியானவா.''

''அப்படியா'' என்று இராணுவ விதிகளுக்கு முற்றிலும் பொருந்தாத விதத்தில் கூறினான் கமாண்டர். ''குடிப் பழக்கம் இல்லாதவர்கள் கிடைத்து விட்டார்கள் போலிருக்கிறது...''

அன்று பகல் நேரம் முழுவதும் அவன் தீயணைப்புக் கொட்டிலில் பலகைக் கட்டில்கள் அமைத்துக் கொண்டிருந்தான், ஏனென்றால் படைவீரப் பெண்கள் வீடுகளில் இடம் பிடித்துக் கொண்டு வசிக்க இசையவில்லை. பெண்கள் பலகைகளைச் சுமந்து சென்றார்கள், அவன் சொன்ன இடத்தில் பிடித்துக் கொண்டார்கள், வாய் ஓயாமல் சளசளத்தார்கள். சார்

ஜண்டு மேஜர் சுளித்த முகத்துடன் பேசாதிருந்தான். தன் அதிகாரத்துக்குப் பழுது நேர்ந்துவிடுமோ என்று அஞ்சினுன்.

எல்லாம் தயாரானதும், ''என் உத்தரவு இல்லாமல் முகாமை விட்டு எங்கும் போகக் கூடாது'' என்று அறிவித்தான்.

''காட்டுப் பழங்கள் பறிக்கக் கூடவா?'' என்று துடுக்காகக் கேட்டாள் செம்பட்டைத் தலையள். வஸ்கோவ் அவளை வெகு நேரமாகவே கவனித்திருந்தான்.

''காட்டுப் பழங்கள் இன்னும் பழுக்கவில்லை'' என்றுன்.

''புளியாரைக் கீரை கொய்து வரலாமா? வாய்க்கு ருசியாக ஏதாவது பண்ணிச் சாப்பிடா விட்டால் எங்களுக்குக் கஷ்டமாய் இருக்கும், தோழர் சார்ஜண்டு மேஜர்'' என்றுள் கிரியானவா.

வஸ்கோவ் இறுக்கமான சட்டைகளைச் சந்தேகத்துடன் பார்வையிட்டான். ஆனுல் அனுமதி கொடுத்தான்:

''ஆற்றுக்கு அப்பாலே போகக் கூடாது. இக்கரைப் படுகையில் புளியாரை ஏராளம்.''

கிளை நிலையத்தில் அமைதி குடி கொண்டது. ஆனுல் கமாண்டரின் நிலைமை இதனுல் எளிதாகி விடவில்லை. படைவீரப் பெண்கள் கூச்சலும் கும்மாளமும் நிறைந்த மகளிர். சார்ஜண்டு மேஜருக்கு சொந்த வீட்டிலேயே அன்னியன் ஆகிவிட்ட உணர்வு ஒவ்வொரு நிமிடமும் ஏற்பட்டது. ஏதேனும் வாய்தவறிச் சொல்லிவிடுவோமோ, கை தவறிச் செய்துவிடுவோமோ என்று ஓயாமல் நடுங்கினுன். கதவைத் தட்டாமல் ஏதேனும் அறைக்குள்

நுழைவது என்ற பேச்சுக்கே இப்போது இடம் இல்லே. எப்போதாவது அவன் இதை மறந்து விட்டால் கீச்சொலி அக்கணமே அவனை முந்திய இடத்துக்குத் தள்ளிவிடும். எல்லாவற்றையும் விட அவனுக்கு அச்சம் ஊட்டியது, எவளுடனுவது தான் சரசமாடுவதாகச் சாடைமாடையான பேச்சுக்களும் கேலிகளும் கிளம்பிவிடுமோ என்பதுதான். அதனுல், முந்திய மாதச் சம்பளப் பணத்தைத் தொலேத்து விட்டுத் தேடுபவன்போல எப்போதும் தரையை உற்றுப் பார்த்தவாறு நடந்தான்.

அவன் தன் கீழ் வேலே செய்தவர்களிடம் பழகுவதைச் சில நாட்களாகக் கவனித்துவந்த வீட்டுக்காரி, ''அட நீங்கள் சங்கடப்படாதீர்கள். இவர்கள் உங்களேக் கிழவனுர் என்றே தங்களுக்குள் சொல்லிக் கொள்ளுகிருர்கள். அதற்குத் தக்கபடி நடந்து கொள்ளுங்கள்'' என்ருள்.

வஸ்கோவுக்கு இந்த இளவேனிலில் முப்பத்திரண்டு வயது நிறைந்திருந்தது. தான் கிழவன் என்று நினேக்க அவன் இசையவில்லே. சற்று சிந்தனே செய்தபின், தன் சொந்த நிலேயை வலுப்படுத்திக் கொள்வதற்காக வீட்டுச் சொந்தக்காரி எடுத்துக் கொள்ளும் நடவடிக்கையே இதெல்லாம் என்ற முடிவுக்கு அவன் வந்தான். இளவேனில் கால இரவு ஒன்றில், கமாண்டரின் இதய உறைபனியை இளக்குவதில் அவள் வெற்றி அடைந்திருந்தாள். இப்போது அந்த வெற்றியை உறுதிப்படுத்திக் கொள்ள அவள் முயன்றது இயல்புதானே.

விமான எதிர்ப்புப் படைப் பிரிவினர் இரவு நேரங்களில் வழியே பறந்த ஜெர்மன் விமானங்களே இரண்டு பீரங்கிகளாலும் உற்சாகமாகத் தாக்

கிஞர்கள். பகல் நேரங்களிலோ ஓயாமல் துணி துவைத்த வண்ணமாய் இருந்தார்கள். தீயணைப்புக் கொட்டிலைச் சுற்றி அவர்களுடைய துணிகள் எப் போதும் காய்ந்துகொண்டிருந்தன. இந்த அலங்கா ரம் பொருத்தம் அற்றது என்று சார்ஜண்டு மேஜர் கருதிஞன். சார்ஜண்டு கிரியானவாவிடம் இதைச் சுருக்கமாகக் கூறிஞன்:

''உரு மறைப்பை நீக்கி விடுகிறது.''

''உத்தரவு இருக்கிறதே'' என்று தயங்காமல் சொன்ஞள் அவள்.

''என்ன உத்தரவு?''

''இந்த விஷயம் பற்றியது. படைத் தொண்டு புரியும் பெண்பாலாருக்கு எல்லாப் போர் முனை களிலும் உள்ளாடைகளைக் காயப்போட அனுமதி உண்டு என்று அதில் சொல்லி இருக்கிறது.''

கமாண்டர் பேசாதிருந்தான்: எக்கேடும் கெட்டுப் போகட்டும் இந்தப் பெண்கள். வாயைக் கொடுத் தோமோ, மாதக் கணக்கில் ஹிஹிஹி என்று இளித்துக் கொண்டிருப்பார்கள்...

வெக்கை வரவர ஏறிற்று. காற்று வீசவில்லை. கொசுக்கள் அளவு சங்கை இல்லாமல் பல்கிப் பெ ருகிவிட்டன. கொசுக்களை விரட்டுவதற்காகச் சிறு கிளை ஒன்றை எடுத்துக் கொள்ளாமல் ஓர் அடி கூட நகர முடியவில்லை. கிளையை வைத்துக் கொள்வதா வது பெரிய விஷயம் இல்லை. அது படைவீரனுக்கு அனுமதிக்கக் கூடியதுதான். ஆஞல் விரைவில் கமாண்டர் அடிக்கு ஒருமுறை உண்மையான கிழ வன்போலக் கமறவும் இருமவும் தொடங்கிவிட் டான் என்பதுதான் படுமோசமாய் இருந்தது.

இந்தத் தொல்லை ஆரம்பித்தது இப்படி: மே

மாதம் வெக்கை மிகுந்த ஒரு நாள் அவன் பண்டகசாலேயின் பின்னே திரும்பியவன் அப்படியே திகைத்து நின்றுவிட்டான். இளமை முறுக்கேறிய எட்டு மேனிகளின் பளிச்சிடும் வெண் நிறம் அவனுடைய கண்களேச் சுரீர் என்று தாக்கியது. அவன் உடம்பு அனலாய்க் கொதிப்பு அடைந்தது. முதல் பிரிவைச் சேர்ந்த எட்டு மங்கையரும் ஜூனியர் சார்ஜண்டு ரீதா அஸ்யானிஞுவின் தலேமையில் அரசாங்கத் தார்ச்சீலே மேல் பிறந்த மேனியராகப் படுத்து வெயில் காய்ந்து கொண்டிருந்தார்கள். மரியாதைக்காகக் கீச்சிடவாவது செய்தார்களா என்ருல் அதுவும் இல்லே: தார்ச்சீலேயில் மூக்குகளே நுழைத்துக் கொண்டு அசையாமல் கிடந்தார்கள். வஸ்கோவ் பிறத்தியார் தோட்டத்துக்குள் புகுந்து விட்ட சிறுவன் போலப் பின்வாங்க வேண்டியதாயிற்று. அன்று முதல்தான் அவன் கக்குவான் வந்தவன்போல இருமத் தொடங்கிஞன்.

இந்த அஸ்யானிஞு தனி வகையானவள் என்பதை வஸ்கோவ் முன்பே கவனித்திருந்தான்: கண்டிப்பானவள். வாய்விட்டுச் சிரிப்பதே கிடையாது. உதடுகளேக் கொஞ்சம் நெளிப்பாள், அவ்வளவுதான். கண்கள் முன்போலவே ஆழ்ந்த தோற்றம் கொண்டிருக்கும். விசித்திரப் பேர்வழி இந்த அஸ்யானிஞு. அதஞல்தான் வஸ்கோவ் அவளேப் பற்றிய தகவல்களே விசாரித்து அறியும்படி தன் வீட்டுக்காரியை ஏவிஞன்—வீட்டுக்காரிக்கு இந்த வேலே அறவே பிடிக்காது என்று தெரிந்திருந்துங் கூட.

''அவள் விதவை. ஆகவே பெண்பிள்ளே என்ற பட்டத்துக்கு முழுக்க முழுக்க ஏற்றவள். நீங்கள்

உங்கள் விளையாட்டைத் தொடங்கலாம்'' என்று இரண்டாவது நாள் குத்தலாகத் தகவல் தெரிவித்தாள் வீட்டுக்காரி.

சார்ஜண்டு மேஜர் பேசாதிருந்தான். பெண் பிள்ளைக்கு உண்மையை நிரூபித்துக் காட்ட முடியுமா எங்காவது? கோடரியை எடுத்துக் கொண்டு வெளியே போனான். சிந்தனை செய்வதற்கு விறகு வெட்டும் நேரத்தை விட ஏற்றது வேறு கிடையாது. எண்ணங்கள் ஏராளமாகச் சேர்ந்திருந்தன. அவற்றை முறைப்படுத்துவது அவசியமாய் இருந்தது.

முதலாவது, கட்டுப்பாடு. படையினர் குடிப்பதில்லை, உள்ளூர்ப் பெண்களோடு காதல் விளையாட்டு நடத்துவதில்லை என்பதெல்லாம் சரிதான். ஆனால் உள்ளுக்குள் ஒழுங்கீனம்:

''லீயூதா, வேரா, காத்தியா, காவலுக்கு நில்லுங்கள்! காத்தியா காவல் குழுத் தலைவி.''

இதுவும் ஒரு இராணுவ உத்தரவா? காவல் குழுவினரை இடங்களில் நிறுத்துவது கண்டிப்பான ஒழுங்குடன், விதிப்படி செய்யப்பட வேண்டும். இவர்கள் செய்வதோ, ஒரே கேலிக்கூத்து. இவர்களுக்குக் கற்பிக்க வேண்டும், ஆனால் எப்படி? கிரியானவாவிடம் பேசிப் பார்த்தான். அவளிடமோ, எல்லாவற்றுக்கும் ஒரே பதில்தான்:

''எங்களுக்கு அனுமதி இருக்கிறது, தோழர் சார்ஜண்டு மேஜர். படைத் தலைவர் தாமே கொடுத்திருக்கிறார்.''

சிரிக்கிறதுகள், பிசாசுகள்...

''ரொம்பப் பாடுபடுகிறாய் போலிருக்கிறதே, வஸ்கோவ்!''

வஸ்கோவ் திரும்பினான். பக்கத்து வீட்டுக்காரி முகப்புக்குள் எட்டிப் பார்த்தாள். ஊர்க்காரர்கள் எல்லோரிலும் ஒழுக்கம் கெட்டவள் இவள். போன மாதம் நான்கு தடவை பிறந்த நாள் கொண்டாடினாள்.

''நீ ரொம்பத்தானே சிரமப்படாதே, வஸ்கோவ். ஊரிலே ஆண்பிள்ளை நீ ஒருவன்தான் பாக்கி இருக்கிறாய், எல்லாப் பெண்களுக்கும் பொலிகாளை போல.''

கெக்கலித்தாள்.

''இனிமேல் நீ மேய்ப்பனைப் போல ஒவ்வொரு வீடாக முறை வைத்துக்கொண்டு போ. ஒரு வாரம் ஒரு வீட்டில், அடுத்த வாரம் இன்னொரு வீட்டில். நாங்கள் பெண்டுகள் உன்னைப் பற்றி இப்படித் தான் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறோம்.''

''இந்தா, பலீனா யெகோரவா, கொஞ்சமாவது வெட்கப்படு. நீ படைவீரன் பெண்சாதியா, இல்லை, யாரேனும் சீமாட்டியா? உன் தகுதிக்கு ஏற்றபடி நடந்து கொள்.''

''யுத்தம் எல்லோரையும் மன்னித்துவிடும், வஸ்கோவ். படைவீரர்களையும் அவர்களுடைய பெண்சாதிகளையும்.''

அடி நாசகாலி! இவளை விரட்ட வேண்டும் இங்கிருந்து, ஆனால் எப்படி? எங்கே அவர்கள், சிவில் அதிகாரிகள்? வஸ்கோவுக்கு இவள் கீழ்ப்பட்டவள் அல்ல: அந்த எக்காளக் குரல் மேஜரிடம் அவன் இந்த விஷயம் பற்றித் தன் கருத்தைத் தெரிவித்திருந்தான்.

ஆமாம், எண்ணங்கள் மலையாய்க் குவிந்திருந்

தன. ஒவ்வொரு எண்ணத்தையும் முற்றிலும் தனிப் பட்ட விதத்தில் புரிந்து கொள்ள வேண்டி இருந் தது. முற்றிலும் தனிப்பட்டவிதத்தில்...

அவன் அனேகமாகக் கல்விப் பயிற்சி பெருத வன் என்பது, எப்படியும் பெரிய தடைதான். அட எழுதப் படிக்க அவனுக்குத் தெரியும், நான்கு வகுப்பு வரை கணக்கும் போட முடியும் அவனுல். இந்த நான்காம் வகுப்பின் முடிவில் தான் அவனு டைய தகப்பனுரைக் கரடி அடித்துப் போட்டு விட் டது. கரடி விஷயம் தெரிந்தால் பெண்களுக்கு ஒரே சிரிப்பாய் இருக்கும்! இப்படியா வந்து வாய்க்க வேண்டும்: உலக யுத்தத்தில் விஷ வாயுவாலோ, உள்நாட்டுப் போரில் பகைவனின் கட்டாரியாலோ, பணக்கார விவசாயியின் துப்பாக்கியாலோ, வெறுமே நோய்வாய்ப்பட்டோ கூட இல்லே, கரடி அடித்து மாண்டார் தகப்பனுர்! இவர்களோ, கரடியை விலங்குக் காட்சிசாலேயில் வேண்டுமாளுல் பார்த் திருப்பார்கள்...

நாகரிக வாடையே அடிக்காத காட்டுப் பிரதே சத்தில் பிறந்து வளர்ந்த நீ, கமாண்டர் பதவியில் தொற்றிக் கொண்டிருக்கிருய், வஸ்கோவ். இவர் களோ, வெறும் சிப்பாய்கள் என்று நினேக்காதே, விஞ்ஞானம் கற்றவர்கள்: முன் உணர்ந்து தடுப் பது, கோணமானி, காற்றுப்போக்குக் கோணம். ஏழு வகுப்புக்கள் படித்திருப்பார்கள், இல்லாவிட் டால் இன்னும் அதிகம், ஒன்பதாவது வகுப்பு முடிய. பேச்சிலேயே தெரிகிறதே. ஒன்பதில் நான்கு போ ஞல் ஐந்து. அதாவது, நீ படித்த அளவைவிட அதிகமாக அவர்களிடமிருந்து பின் தங்கி இருக் கிருய்...

எண்ணங்கள் இன்பம் அற்றவையாக இருந்தன. எனவே வஸ்கோவ் தனிப்பட்ட வன்மத்துடன் விறகு பிளந்தான். யாரைக் குற்றம் சொல்வது? அந்த மரியாதை கெட்ட கரடியை வேண்டுமானுல் சொல்லலாம்...

வேடிக்கை என்னவென்ருல் அதுவரை அவன் தன் வாழ்க்கை அதிர்ஷ்டம் உள்ளது என்று எண்ணி வந்தான். எடுத்த காரியம் எல்லாம் பலித்துவிட்டது என்பதல்ல, ஆனுல் குறை சொல்லும்படி ஒன்றும் இல்லை. முற்றுப் பெருத நான்கு வகுப்புப் படிப்பை வைத்துக்கொண்டு அவன் இராணுவப் பள்ளிப் பயிற்சியை முடித்தான், பத்து ஆண்டுகளில் சார் ஜண்டு மேஜர் பதவியை உரிமையுடன் அடைந்து விட்டானே. இந்த வகையில் நஷ்டம் ஒன்றும் இல்லைதான். ஆனுல் வேறு வகைகளில் விதி அவனை நான்கு புறத்திலும் நெருக்கிச் சூழ்ந்து, அருகிலி ருந்து இரண்டு தடவை மடாரென்று தாக்கிற்று. அப்படியும் அவன் கலங்காமல் நிலைத்து நின்ருன். ஆம், நிலைத்து நின்ருன்...

பின்லாந்துப் போர் தொடங்குவதற்குச் சற்று முன்பு அவன் நகர்க் காவல் படை மருத்துவமனை யைச் சேர்ந்த ஒரு மருத்துவத் தாதியை மணந்து கொண்டான். துடியான பெண்பிள்ளை அவள். எப் போதும் பாட்டும் ஆட்டமும் குடியும். ஆனுலும் ஒரு மகனைப் பெற்ருள். ஈகர் என்று பெயரிட்டார் கள். ஈகர் வஸ்கோவ். அதற்குள் பின்லாந்துப் போர் துவங்கி விட்டது. வஸ்கோவ் போர்முனை சென்ருன். இரண்டு பதக்கங்களுடன் அங்கிருந்து திரும்பினுன். அப்போதுதான் விதி முதல் முறை திடீர் அடி கொடுத்தது. அவன் அங்கே வெண்பனி

யில் உயிரைப் பணயம் வைத்துப் போராடிக் கொண்டிருந்த சமயத்தில் அவன் மனைவி ரெஜிமெண்டு விலங்கு மருத்துவனோடு நிலையாகத் தொடுப்பு வைத்துக் கொண்டு தெற்குப் பிரதேசங்களுக்குப் போய்விட்டாள். வஸ்கோவ் உடனே அவளுடன் மண முறிவு செய்து கொண்டு, மகனை நீதி மன்றத்தில் வழக்காடிப் பெற்று, கிராமத்தில் தன் தாயாரிடம் அனுப்பி வைத்தான். ஓர் ஆண்டு கழிந்ததும் மகன் இறந்து போனான். அதன் பின் வஸ்கோவ் மூன்றே தடவைகள் தான் புன்னகை செய்தான்: தனக்கு விருது கொடுத்த ஜெனரலைப் பார்த்து ஒரு முறை, தன் தோளிலிருந்து குண்டுச் சிதரை எடுத்த அறுவை மருத்துவரை நோக்கி இரண்டாவது முறை, தன் வீட்டுச் சொந்தக்காரி மரீயா நிக்கீபரவ்னா புரிவுடன் நடந்து கொண்டதற்காக மூன்றாவது தடவை.

இந்த குண்டுச் சிதர் காரணமாகத்தான் அவனுக்கு இப்போதையப் பதவி கிடைத்தது. பண்டக சாலையில் சில பொருள்கள் எஞ்சி இருந்தன. அவற்றுக்குக் காவல்காரர்கள் நியமிக்கப்படவில்லை. அதிகாரிகள் கமாண்டர் பதவியை ஏற்படுத்தி, பண்டக சாலையைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தார்கள். சார்ஜண்டு மேஜர் தினந்தோறும் மூன்று முறை இந்த இலக்கைச் சுற்றி வருவான், பூட்டுக்களைச் சரி பார்ப்பான், தானே வைத்துக் கொண்டிருந்த பதிவுப் புத்தகத்தில், ''இலக்கு பார்வையிடப்பட்டது. முறைகேடு இல்லை'' என்று ஒரே குறிப்பையும் பார்வையிட்ட நேரத்தையும் எழுதுவான்.

வஸ்கோவின் படைத் தொண்டு அமைதியாக

நடந்து கொண்டிருந்தது. அனேகமாக அன்றுவரை அமைதியாய் இருந்தது. இப்போதோ...

சார்ஜண்டு மேஜர் பெருமூச்செறிந்தான்.

## 2

போருக்கு முந்திய நிகழ்ச்சிகளில் ரீதாவுக்கு எல்லாவற்றையும் விடப் பசுமையாக நினைவில் பதிந்திருந்தது, எல்லைக் காவல் வீரர்களைச் சந்திப்பதற்காகப் பள்ளியில் நடந்த மாலைக் கொண்டாட்டம் தான். புகழ் பெற்ற சோவியத் எல்லைக் காவல் வீரர் கராத்ஸுப்பா என்பவரோ, இந்தூஸ் என்ற பெயர் கொண்ட அவருடைய நாயோ இந்தக் கொண்டாட்டத்தில் இல்லைதான். ஆயினும் இந்த மாலை நிகழ்ச்சி அப்போதுதான் நடந்தேறியது போலவும் சங்கோசியான லெப்டினண்டு அஸ்யாவின், எல்லைப்புறச் சிற்றூரின் ஓசை மிக்க பலகை நடைபாதையில் தன் அருகே இன்னும் நடப்பது போலவும் அவ்வளவு தெளிவாக ரீதா அதை நினைவு வைத்திருந்தாள். லெப்டினண்டு இன்னும் எவ்வித வீரச் செயலும் புரியவில்லை. வீரர் குழுவில் தற்செயலாகச் சேர்க்கப் பட்டிருந்தான், ஒரேயடியாகக் கூசிக் குறுகினன்.

ரீதாவும் கலகலப்பாகப் பழகும் சுபாவம் உள்ளவள் அல்ல. வரவேற்பிலோ கலை நிகழ்ச்சிகளிலோ கலந்து கொள்ளாமல் ஹாலில் உட்கார்ந்திருந்தாள். எல்லா மாடிகளையும் ஊடுருவிக் கொண்டு எலி வளைகள் நிறைந்த நிலவறையில் விழுவதற்கு வேண்டுமானல் இசைந்திருப்பாளே தவிர, முப்பது வயதுக்குக் குறைந்த விருந்தினர் யாருடனுவது

முதலில் பேச்சு தொடங்க ஒருப்பட்டிருக்க மாட்டாள். தற்செயலாக அவள் லெப்டினண்டு அஸ்யானின் பக்கத்தில் உட்கார நேர்ந்தது. இருவரும் அசைவதற்குக் கூட அஞ்சியவர்களாய், கண்டிப்பாக எதிரே நோக்கியவாறு அமர்ந்திருந்தார்கள். பிறகு கொண்டாட்ட அமைப்பாளர்கள் விளையாட்டுகள் நடத்தினுர்கள். அவற்றிலும் ரீதாவும் லெப்டினண்டும் சேர்ந்து இருக்க வேண்டி வந்தது. பிறகு சேர்ந்து வால்ட்ஸ் நடனம் ஆடும் முறை வந்தது, அவர்கள் நடனம் ஆடினுர்கள். பிற்பாடு ஜன்னல் ஓரமாக நின்ருர்கள். பின்பு... பின்பு அவன் அவளை வீடுவரை கொண்டு விட்டான்.

ரீதா பெருத்த தந்திரம் செய்தாள். அவனை மிகுந்த சுற்று வழியில் நடத்திச் சென்ருள். அப்போதும் அவன் பேசாதிருந்தான். சிகரெட்டுகளை ஒன்றன் பின் ஒன்ருகப் புகைக்க மட்டுமே செய்தான்: ஒவ்வொரு தடவையும் தயக்கத்துடன் அவளிடம் அனுமதி கேட்டான். அவனுடைய இந்தத் தயக்கத்தால் அவள் உளம் சோர்ந்தாள்.

அவர்கள் பிரிகையில் கை குலுக்கக் கூட இல்லை. ஒருவரை ஒருவர் பார்த்துத் தலையை மட்டும் ஆட்டினுர்கள். லெப்டினண்டு எல்லைக் காவல் நிலையத்துக்குப் போய்விட்டான். சனிக் கிழமை தோறும் அவளுக்கு மிகச் சுருக்கமான கடிதங்கள் எழுதினுன். அவள் ஞாயிறுதோறும் நீண்ட பதில் கடிதங்கள் எழுதினுள். கடிதப் போக்குவரத்து கோடை காலம் வரை தொடர்ந்தது. ஜூன் மாதம் அவன் மூன்று நாள் விடுமுறையில் சிற்றூருக்கு வந்தான். எல்லையில் அமைதியின்மை நிலவுவதாகவும் மேற்கொண்டு விடுமுறை கிடைக்காது என்றும் ஆகையால் உடனே

மணப் பதிவகம் செல்ல வேண்டும் என்றும் சொன்ஞன்.

ரீதா கொஞ்சங்கூட ஆச்சரியப் படவில்லே. ஆனல் மணப் பதிவகத்தில் உட்கார்ந்திருந்தார்கள் வறட்டுச் சடங்கு பாராட்டுபவர்கள். ரீதாவுக்குப் பதினெட்டு வயது நிறைவதற்கு ஐந்தரை மாதங்கள் குறைவதால் மணப் பதிவு செய்ய முடியாது என்ருர்கள் இவர்கள். மண மக்கள் நகர இராணுவத் தலேவரிடமும் பின்பு ரீதாவின் பெற்ருேரிடமும் போய் எப்படியோ காரியத்தைச் சாதித்துக் கொண்டார்கள்.

தன் வகுப்புப் பெண்களில் எல்லோருக்கும் முன் மணம் செய்துகொண்டவள் ரீதா தான். மணமகனும் யாரோ எவரோ அல்ல, செம்படைக் கமாண்டர், அதிலும் எல்லேக் காவலன். ஆகவே அவளேவிட அதிர்ஷ்டசாலி உலகில் இருக்கவே முடியாது என்று தோன்றியது.

எல்லேக் காவல் நிலேயத்தில் அவள் மாதர் ஆலோசனே மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டாள், எல்லா வட்டங்களிலும் உறுப்பினள் ஆக்கப்பட்டாள். காயங்களுக்குக் கட்டுப் போடவும் துப்பாக்கி சுடவும் குதிரை சவாரி செய்யவும் கைக்குண்டுகள் எறியவும் விஷ வாயுக்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும் பயின்ருள் ரீதா. ஓர் ஆண்டில் அவள் ஒரு மகனேப் பெற்றெடுத்தாள் (அவனுக்கு ஆல்பெர்ட் என்று பெயரிடப்பட்டது). இன்னும் ஓர் ஆண்டில் போர் மூண்டு விட்டது.

யுத்தம் மூண்ட முதல் நாள் மனம் தடுமாருமலும் கலவரம் அடையாமலும் இருந்த வெகு சிலரில் ரீதா அஸ்யாணிஞவும் ஒருத்தி. அவள் அமைதியாகவும் விவேகத்துடனும் நடந்து கொண்

டாள். அவள் தன் மகனை மே மாதமே தன் பெற்ேறாரிடம் அனுப்பி விட்ட படியால் மற்றவர்களின் குழந்தைகளைக் காப்பாற்றுவதில் ஈடுபட முடிந்தது என்று அப்போது அவளுடைய அமைதிக்கு விளக்கம் தரப்பட்டது.

எல்லைக் காவல் நிலையம் பதினேழு நாட்கள் தாக்குப் பிடித்தது. தூரத்தில் பீரங்கிக் குண்டுகள் முழங்குவது ரீதாவுக்கு இரவும் பகலும் கேட்டுக் கொண்டிருந்தது. காவல் நிலையம் வாழ்ந்தது. கணவன் நலமாய் இருக்கிறான், படைப் பகுதிகள் வரும் வரை எல்லைக் காவலர்கள் உறுதியாய் நிற்பார்கள், பின்பு அவற்றுடன் சேர்ந்து பகைவனுடைய அடிக்குப் பதில் அடி கொடுப்பார்கள் என்ற நம்பிக்கையும் அதோடு உயிர்த்திருந்தது. ''இரவு வந்தது, இருள் எல்லையை மறைத்தது, ஆனால் அதை எவராலும் தாண்ட முடியாது, நம் சோவியத் தோட்டத்தில் பகைவன் தலையை நுழைக்க விட மாட்டோம்'' என்று பொருள்படும் பாட்டு காவல் நிலையத்தில் விருப்புடன் பாடப்பட்டது. ஆனால் நாட்கள் கழிந்தன. உதவி வரவில்லை. பதினேழாம் நாள் எல்லை நிலையத்தில் ஓசை அடங்கிவிட்டது.

அதிகாரிகள் ரீதாவைப் பின்புலத்துக்கு அனுப்ப விரும்பினார்கள். அவளோ போர்முனைக்கு அனுப்பும் படி கேட்டுக் கொண்டாள். அவளை ரயில் பெட்டிக்குள் தள்ளினார்கள். ஆனால் காவல் நிலைய உதவிக் கமாண்டர் சீனியர் லெப்டினண்டு அஸ்யானினுடைய பிடிவாதக்கார மனைவி. இரண்டாவது நாள் வட்டாரத் தற்காப்பு அலுவலகத்துக்கு மறுபடி வந்து விட்டாள். வேறு வழி இல்லாமல் அவள் மருத்துவத்தாதியாக நியமிக்கப்பட்டாள். அரை

ஆண்டுக்குப் பின் ரெஜிமெண்டு விமான எதிர்ப்புப் பயிற்சிப் பள்ளிக்கு அனுப்பப்பட்டாள்.

சீனியர் லெப்டினண்டு அஸ்யானின், போர் மூண்ட இரண்டாவது நாள் காலே எதிர்த் தாக்கின் போது கொல்லப்பட்டான். பகைவர் வசம் ஆன எல்லே நிலேயத்திலிருந்து எல்லேக் காவல் படை சார் ஜண்டு ஒருவன் ஜூலே மாதம் எப்படியோ தப்பி வந்த போதுதான் ரீதாவுக்குக் கணவன் கொல்லப் பட்ட செய்தி கிடைத்தது.

வீர எல்லேக் காவலனின் புன்னகைக்காத வித வையை இராணுவ அதிகாரிகள் உயர்வாக மதித் தார்கள். ஆணேகளில் அவள் பெயரைக் குறித்தார் கள், உதாரணமாகக் காட்டினுர்கள். எனவே பயிற்சி முடிந்ததும், எல்லேக் காவல் நிலேயம் இருந்த பகுதிக்கு, உக்கிரமான துப்பாக்கிக் குத்தீட்டிப் போரில் தன் கணவன் கொல்லப்பட்ட இடத்துக்குத் தன்னே அனுப்பும்படி அவள் வேண்டிக் கொண்ட தற்கு அவர்கள் இடங்கிஞர்கள். அங்கே போர்முனே சற்றுப் பின்னே நகர்ந்திருந்தது: ஏரியின் மறுகரை யை ஒட்டியும், காடுகளில் மறைந்தும் தரைக்குள் புகுந்தும் சென்று, முந்திய காவல் நிலேயத்துக்கும் லெப்டினண்டு அஸ்யானின் ஒன்பதாம் வகுப்பு மாணவி ரீதாவை அறிமுகம் செய்துகொண்ட சிற்றூ ருக்கும் நடுவே ஓர் இடத்தில் நிலேத்திருந்தது அது...

இப்போது ரீதா மனநிறைவுடன் இருந்தாள். அவள் விரும்பியதைச் சாதித்து விட்டாள். கண வன் கொல்லப்பட்டது கூட நினேவில் மறைவான மூலேயில் ஒதுங்கி விட்டது. அவளுக்கு வேலேயும் பொறுப்புக்களும் வெறுப்பைக் காட்டுவதற்கு

ஏற்ற இலக்குகளும் கிடைத்திருந்தன. அமைதியாகவும் இரக்கம் இன்றியும் வெறுக்க அவள் பழகி இருந்தாள். பகை விமானத்தை வீழ்த்த அவளுடைய பிரிவுக்கு இன்னும் வாய்க்கவில்லை, ஆனால் பறக்கும் ஜெர்மன் புகைக் கூண்டைத் துளைக்க அவளுக்கு வாய்ப்பு கிடைத்தது. புகைக் கூண்டு வெடித்துச் சுருங்கியது. செலுத்துவோன் கூடையிலிருந்து பாரஷூட்டுடன் குதித்துக் கீழ் நோக்கி விரைவாகப் பறந்தான்.

''சுடு ரீதா, சுடு!'' என்று மற்ற விமான எதிர்ப்புப் படையினர் கத்தினார்கள்.

ரீதாவோ, விழும் புள்ளியைச் சந்திக்கும் வரையை விட்டுப் பார்வையை அகற்றாமல் காத்திருந்தாள். தரையை நெருங்கியதும் ஜெர்மானியன் தன் ஜெர்மன் கடவுளுக்கு நன்றி செலுத்தி விட்டுப் பாரஷூட்டைக் கிழித்தான். அக்கணமே ரீதா இயந்திரத் துப்பாக்கி விசையை லாகவமாக அழுத்தினாள். நான்கு குழல்களிலிருந்து வெளிப்பட்ட குண்டு வரிசை கரிய உருவத்தைக் கூறுகள் ஆக்கி விட்டது. மற்றப் பெண்கள் களிப்பு ஆரவாரம் செய்து அவளை முத்தமிட்டார்கள். அவளோ உணர்ச்சியின்றி முறுவலித்தாள். அன்று இரவு முழுவதும் அவள் உறக்கம் பிடிக்காமல் தவித்தாள். உதவிக் கமாண்டர் கிரியானவா அவளுக்குத் தேநீர் பருகக் கொடுத்துத் தேற்றினாள்:

''இது சரியாய்ப் போய்விடும், ரீதா. நான் முதல் ஜெர்மானியனைக் கொன்றதும் அனேகமாகச் சாகத் தெரிந்தேன், கடவுள் ஆணையாக. ஒரு மாதம் அவன் கனவில் வந்து கொண்டிருந்தான், அசிங்கம் பிடித்தவன்...''

கிரியானவா துடியான பெண். பின்லாந்துப் போரின் போதே மருத்துவ சாதன மூட்டையுடன் எத்தனேயோ கிலோமீட்டர் தூரம் முன்னணியில் ஊர்ந்து சென்று அதற்காக விருது பெற்றிருந்தாள். அவளுடைய சித்த உறுதிக்காக ரீதா அவளிடம் மரியாதை செலுத்திஞள், ஆஞல் நிரம்ப நெருங்கிப் பழகவில்லே.

பொதுவாகவே ரீதா யாருடனும் கலகலப்பாகப் பழகாமல் தனித்தே இருந்தாள். அவளுடைய பிரிவில் இருந்த மற்ற எல்லாப் பெண்களும் கன்னிகள், இளங் கம்யூனிஸ்டு கழகத்தின் உறுப் பினர்கள். வயதில் சிறியவர்கள் என்பது அல்ல, வாழ்க்கை அனுபவம் இல்லாதவர்கள். காதலேயோ தாய்மையையோ துன்பத்தையோ இன்பத்தையோ பட்டு அறியாதவர்கள். லெப்டினண்டுகளேயும் முத் தம் கொஞ்சுவதையும் பற்றி வெறுமே சளசளத் தார்கள், ரீதாவுக்கு இது இப்போது எரிச்சல் ஊட்டியது.

ஒரு பெண் தனக்கு நேர்ந்ததைப் பற்றிச் சொன்ன கதையைக் கேட்டுவிட்டு, ''உறங்கு!'' என்று அதட்டிஞள் ரீதா. ''இந்த மாதிரி முட்டாள் பேச்சை இன்னெரு தரம் கேட்டேனே, உன்னே மணிக் கணக்கில் நிற்க வைத்து விடுவேன்.''

''வீணுகக் கோபிக்கிருய், ரீதா. அவர்கள் பாட் டுக்கு அரட்டை அடிக்கட்டுமே. சுவாரசியமாக இருக்கிறதே'' என்று சோம்பலுடன் சொன்ஞள் கிரியானவா.

''காதலிக்கட்டும், தாராளமாக. ஒரு வார்த் தை சொல்ல மாட்டேன். ஆஞல் இந்த மாதிரி மூலே

முடுக்குகளில் முத்தம் கொஞ்சுவது எனக்குப் புரியவில்லை.''

''செய்து காட்டு'' என்று புன்னகை செய்தாள் கிரியானவா.

ரீதா உடனே மௌனத்தில் ஆழ்ந்தாள். தன்னுல் காதலிக்க முடியும் என்பதைக் கற்பனை செய்து பார்க்கவே அவளுக்கு இயலவில்லை. அவள் வரையில் ஆண்கள் நிலவவே இல்லை. ஒரே ஆண் மகன் இருந்தான்—போர் மூண்ட இரண்டாம் நாள், எண்ணிக்கையில் குறைந்துவிட்ட எல்லைக் காவல் படையினரைத் துப்பாக்கிக் குத்தீட்டிகளுடன் சண்டையிட இட்டுச் சென்ருனே அவன். இப்போது அவள் ஆசைகளுக்குப் பூட்டு போட்டு வைத்திருந்தாள். இரட்டைப் பூட்டு.

மே மாதத்துக்கு முன் அவர்களது படைப் பிரிவு தாக்குக்கு உள்ளாயிற்று: விரைந்து இயங்கும் ஜெர்மன் மெஸ்ஸர் ஷ்மித் விமானங்களுடன் அவர்கள் இரண்டு மணி நேரம் போரிட்டார்கள். ஜெர்மன் விமானங்கள் சூரியன் இருந்த பக்கத்திலிருந்து வந்து விமான எதிர்ப்பு பீரங்கிகளை இலக்குப் பார்த்து நெருப்பு மழை பொழிந்தன. உதவிப் படையினள் ஒருத்தி—இவள் சற்று மேலே தூக்கிய மூக்கினள், அழகற்றவள், பருத்தவள், எப்போதும் எதையாவது ஓசையின்றி மென்றுகொண்டிருப்பாள் — கொல்லப்பட்டாள். இன்னும் இருவர் லேசாகக் காயமடைந்தார்கள். இறந்தவள் அடக்கம் செய்யப்பட்ட போது இராணுவக் கமிஸார் வந்திருந்தார். பெண்கள் உரத்த குரலில் முழங்கினுர்கள். புதை குழிக்கு மேல் துப்பாக்கிகளால் வானில் சுட்டு இராணுவ மரியாதை செய்தார்கள்.

பின்பு கமிஸார் ரீதாவை ஒரு புறம் அழைத்துச் சென்றார்.

''பிரிவில் புது ஆளைச் சேர்க்க வேண்டும்.''

ரீதா பேசாதிருந்தாள்.

''உங்கள் குழு ஒழுங்கானது. போர்முனையில் பெண், ஒரு வகையில் சொன்னால், எல்லோருடைய கூர்ந்த கவனத்துக்கும் ஆளாகிறாள், இது உங்களுக்கே தெரியும். சில சந்தர்ப்பங்களில் பெண்களால் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிவதில்லை.''

ரீதா இப்போதும் பேசாதிருந்தாள். கமிஸார் கால்களை மாற்றி மாற்றி வைத்தார், புகைத்தார், தணிந்த குரலில் சொன்னார்:

''இராணுவ அலுவலகக் கமாண்டர்களில் ஒருவன்—பிள்ளை குட்டிக்காரன்—ஒரு பெண்ணைத் தோழியாக வைத்துக்கொண்டான். இராணுவ ஆலோசனை மன்ற உறுப்பினர் இதை அறிந்ததும் அந்தக் கர்னலை விளாசினார், இந்தத் தோழியை ஏதாவது வேலையில் அமர்த்தும் படி எனக்கு உத்தரவிட்டார். ஏதேனும் நல்ல குழுவில்.''

''அனுப்புங்கள்'' என்றாள் ரீதா.

மறு நாள் காலை அந்தப் பெண்ணைப் பார்த்தவள் பார்த்துக் கொண்டே இருந்தாள்: உயரமான மேனி, செம்பழுப்புக் கேசம், வெண் நிறம். குழந்தை விழிகள்: பசியவை, வட்டமானவை.

''படையினள் ழேனியா கமெல்கோவா உங்கள் கீழ் பணியாற்ற வந்திருக்கிறேன்...''

அன்று வெந்நீர்க் குளியல் நாள். அவர்களுடைய முறை வந்து முன்னறையில் அவர்கள் உடைகளைந்

தும் மற்ற பெண்கள் புதியவளை வியந்து நோக்கினார்கள்.

''ழேனியா, நீ தெய்வ மங்கைபோல் இருக்கிறாய்!''

''ழேனியா, உன் தோல் பட்டுப்போல் இருக்கிறது!''

''ழேனியா, உன்னை அப்படியே சிலையாக வடிக்கலாம்!''

''ழேனியா, உனக்கு மார்க் கச்சு வேண்டியதில்லை!''

''ஆகா, ழேனியா, உன்னைக் காட்சிச்சாலையில் வைக்க வேண்டும்! கண்ணாடி அலமாரியில் கறுப்பு வெல்வெட்டுக்கு மேல்...''

''ஆக்கம் கெட்டவள்!'' என்று பெருமூச்செறிந்தாள் கிரியானவா. ''இவ்வளவு வடிவமைந்த மேனியை இராணுவச் சீருடையால் மூடி வைக்கவேண்டி இருக்கிறதே. இதை விடச் சாவது லேசு!''

''இவள் அழகி. அழகிகள் அதிர்ஷ்டம் உள்ளவர்களாக இருப்பது அபூர்வம் தான்'' என்று ஜாக்கிரதையாகத் திருத்தினாள் ரீதா.

''உன்னையே சாடையாகக் குறித்துக் காட்டுகிறாயோ?'' என்று சிரித்துக் கொண்டாள் கிரியானவா.

ரீதா மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்தாள். இல்லை, உதவிக் கமாண்டர் கிரியானவாவுக்கும் அவளுக்கும் ஒத்து வரவில்லை. கொஞ்சங்கூட ஒத்துவரவில்லை.

ஆனால் ழேனியாவுடன் நட்பு ஏற்பட்டுவிட்டது. தானாகவே, முன்னேற்பாடு இல்லாமலே, ஒருவரை ஒருவர் நோட்டம் பார்க்காமலே. ரீதா ழேனியாவுக்குத் தன் கதையைச் சொன்னாள். ஓரளவு ழேனி

யாவைக் கண்டனம் செய்யவும் ஓரளவு தன்னை உதாரணமாகக் காட்டிப் பெருமை அடித்துக் கொள்ளவும் விரும்பினுள். ழேனியாவோ பதிலுக்கு வருத்தப்படவோ பரிவு காட்டவோ முற்படவில்லை.

''அப்படியானல் நீயும் பழி தீர்த்துக் கொள்ள வேண்டி இருக்கிறதோ?'' என்று சுருக்கமாகக் கூறினுள்.

அவள் சொன்ன மாதிரியைக் கவனித்த ரீதா, கர்னல் விவகாரத்தை முழுக்க முழுக்க அறிந்திருந் தாலும், ''நீயும் பழி தீர்த்துக்கொள்ள வேண்டு மோ?'' என்று கேட்டாள்.

''நான் இப்போது தனியள். அம்மா, தங்கை, தம்பி எல்லோரும் மெஷீன்கன் குண்டுகளுக்கு இலக் காகிவிட்டார்கள்.''

''தாக்கு நடந்ததோ?''

''துப்பாக்கிச் சூடு. ஜெர்மானியர்கள் கமாண் டர்களின் குடும்பத்தாரைப் பிடித்து இயந்திரத் துப் பாக்கிக் குண்டுகளுக்கு இரையாக்கி விட்டார்கள். என்னை எஸ்தோனியமாது ஒருத்தி எதிர் வீட்டில் மறைத்து வைத்திருந்தாள். அங்கிருந்து நான் எல்லா வற்றையும் பார்த்தேன். எல்லாவற்றையும்! என் தங்கை கடைசியாக விழுந்தாள்—ஜெர்மானியர் வேண்டுமென்றே அப்படிச் செய்தார்கள்...''

''கேள், ழேனியா. அந்தக் கர்னல் விவகாரம் எப்படி நேர்ந்தது? உன்னல் எப்படி முடிந்தது, ழேனியா?'' என்று காதோடு கேட்டாள் ரீதா.

''முடிந்தது, அதற்கு என்ன?'' என்று சவால் விடுபவள் போலச் செம்பழுப்புக் கேசத்தைச் சிலுப்பினுள் ழேனியா. ''இப்போதே உபதேசம்

தொடங்கப் போகிருயா அல்லது வேலே நேரம் முடிந்த பிறகா?''

ழேனியாவின் பழக்கத்தால் ரீதாவின் தனித் தன்மைப் போக்கி விட்டது. வேடிக்கை என்னவென்ருல் ரீதா ஓரளவு இளகிவிட்டாள் போலவும் அவளது உறுதி ஓரளவு தளர்ந்துவிட்டது போலவும் அவள் மென்மை அடைந்துவிட்டாள் போலவும் தோன்றியது. சில வேளேகளில் அவள் சிரிக்கக் கூடச் செய்தாள். மற்றப் பெண்களோடு சேர்ந்து பாடிஞள். ஆஞல் ழேனியா ஒருத்தியோடு மட்டுமே விரும்பி உறவாடிஞள்.

ழேனியா எவ்வளவோ துயரத்துக்கு உள்ளாயிருந்தாலும் மிகவும் கலகலப்பானவள், குறும்புக் காரி. சில வேளேகளில் எவஞவது லெப்டினண்டைப் பேச்சிழந்து போகும் அளவுக்குப் புரளி செய்து படைப் பிரிவினர் எல்லோருக்கும் வேடிக்கை காட்டுவாள். சில சமயம் இடை நேரத்தில் பெண்கள் ''லா-லா-லா'' என்று பாட அற்புதமாக ஜிப்ஸி நடனம் ஆடுவாள். வேறு சமயங்களில் ஏதேனும் காதல் கதை சொல்லத் தொடங்குவாள்—கேட்கக் கேட்க அலுக்காது.

''ழேனியா, நீ நடிகை ஆகி இருக்க வேண்டும்! எப்பேர்ப்பட்ட பெண் வீஞகிருள்!'' என்று பெருமூச்செறிந்தாள் கிரியானவா.

ரீதா முயற்சியுடன் கடைப்பிடித்து வந்த தனிமை இவ்வாறு முடிவடைந்தது. ழேனியா எல்லோரையும் மாற்றிவிட்டாள். அவர்களுடைய படைப் பிரிவில் காலியா செத்வெர்த்தாக் என்ற ஓர் அழகற்றவள் இருந்தாள். ஒல்லியான உடம்பு, கோணல் மூக்கு, சணல் கூளம் போன்ற தலேமுடி,

பையனுடையது போன்ற தட்டை மார்பு. மேனியா இவளைக் குளியறையில் நன்ருகத் தேய்த்துக் குளிப் பாட்டி, கூந்தலை வாரி ஒழுங்கு படுத்தி, சீருடையை அளவுக்குப் பொருந்த மாற்றித்தைத்துப் போட் டாள். அவ்வளவு தான், காலியா புதுமலர்ச்சி பெற்று விட்டாள். அவளுடைய விழிகள் ஒளி வீசின. முகத்தில் புன்னகை மலர்ந்தது. மார்பகங்கள் குடைக்காளான்கள் போல வளர்ந்துவிட்டன. அதன்பின் இந்த காலியா மேனியாவை விட்டு விலகுவதே இல்லை. ஆகவே, ரீதா, மேனியா, காலியா மூவரும் இப்போது ஒன்ருக இருக்கலானூர்கள்.

முனைமுகத்திலிருந்து கிளை நிலையத்துக்கு மாற் றல் பற்றிய செய்தியை விமான எதிர்ப்புப் படைப் பெண்கள் கடுமையாக எதிர்த்தார்கள். ரீதா மட் டும் பேசாதிருந்தாள். தலைமை அலுவலகம் சென்று வரைபடத்தைப் பார்வையிட்டாள்.

''என்னுடைய பிரிவை அனுப்புங்கள்'' என்ருள். மற்ற பெண்கள் வியப்பு அடைந்தார்கள். மேனி யா மூர்க்கமாக எதிர்த்தாள். ஆனுல் மறு நாள் காலை திடீரென்று மாறிவிட்டாள். கிளை நிலையம் செல்வதற்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யலா னுள். எதனுல், ஏன் என்பது ஒருவருக்கும் விளங்க வில்லை, ஆனுல் எல்லோருடைய எதிர்ப்பும் அடங்கி விட்டது. மேனியாவை எல்லோரும் நம்பினுர்கள். அவள் இசைகிருள் என்ருல் அது அவசியம் போலும் என்று நினைத்தார்கள். பேச்சுக்கள் அக் கணமே நின்றுவிட்டன. எல்லோரும் புறப்பட ஏற் பாடு செய்யலானுர்கள். கிளை நிலையம் சேர்ந்ததுமே ரீதா, மேனியா, காலியா, மூவரும் இனிப்பு இல் லாத தேநீர் பருகினுர்கள்.

மூன்று இரவுகளுக்குப் பிறகு ரீதா அஸ்யானினு முகாமிலிருந்து மறைந்துவிட்டாள். தீயணைப்புக் கொட்டிலிலிருந்து ஓசைப்படாமல் நழுவி, உறக்கத்தில் ஆழ்ந்திருந்த கிளை நிலையத்தை நிழலோடு நிழலாகக் கடந்து, பனித்துளிகளால் நனைந்திருந்த ஆல்டர் மரச் சோலையில் புகுந்து கரைந்து விட்டாள். புதர் மண்டிய காட்டுப் பாதை வழியே சென்று நெடுஞ்சாலையை அடைந்து முதல் இராணுவ லாரியை நிறுத்தினுள்.

''ரொம்ப தூரம் போக வேண்டுமா, அழகுராணி?'' என்று கேட்டான் மீசைக்கார சார்ஜண்டு மேஜர். இரவு நேரத்தில் இராணுவ லாரிகள் தளவாடங்கள் ஏற்றி வருவதற்காகப் பின்புலம் செல்லும். படைக்கும் விதிகளுக்கும் முற்றிலும் அயலான மனிதர்கள் அவற்றில் பயணம் செய்வது உண்டு.

''ஊர் வரை கொண்டு விடுவீர்களா?''

லாரியின் பின்பகுதியிலிருந்து கைகள் அவளை நோக்கி நீண்டன. சார்ஜண்டு மேஜரின் அனுமதிக்காகக் காத்திராமலே ரீதா சக்கரத்தின் மேல் காலை வைத்து லாரியில் தொற்றிக்கொண்டாள். ஆட்கள் அவளைத் தார்ச்சீலை மீது உட்கார்த்தி, பஞ்சு வைத்துத் தைத்த போர்வையை அவளுக்குப் போர்த்தினுர்கள்.

''உறங்கு, பெண்ணே, ஒரு மணி நேரம் போல...''

காலையில் அவள் முகாமில் இருந்தாள்.

''லீதா, ராயா, வேலைக்குப் புறப்படுவோம்!''

அவள் முகாமிலிருந்து வெளியேறியதையும் திரும்பியதையும் ஒருவரும் பார்க்கவில்லை போல் இருந்தது. ஆனுல் கிரியானவாவுக்குத் தெரிந்துவிட்

டது அவள் ஒன்றும் பேசாமல் மனதுக்குள் சிரித்துக் கொண்டாள்:

''யாரையாவது கொண்டுவிடப் போயிருப்பாள், ராங்கிக் காரி. போகட்டும், ஒருவேளை இவள் மனம் இளகலாம்...''

வஸ்கோவிடம் இதைப்பற்றி ஒருவரும் சொல்ல வில்லை. உண்மையில் வஸ்கோவிடம் பெண்களில் ஒருவருக்கும் பயம் கிடையாது. ரீதா அஸ்யானி னுவுக்கோ, அறவே கிடையாது. ஏதோ பாசி பிடித்த துண்டுக் கட்டைபோல வளையவருகிறன்: தெரிந்த தெல்லாம் இருபதே வார்த்தைகள், அவையும் இராணுவ விதிகளிலிருந்து பொறுக்கியவை. இவனை யார் மதிப்பார்கள்?

ஆனாலும் ஒழுங்குமுறை ஒழுங்குமுறை தான், சிறப்பாக இராணுவத்தில். ரீதாவின் இரவுப் பய ணங்கள் பற்றிய தகவல் ழேனியாவையும் காலியா வையும் தவிர வேறு ஒருவருக்கும் தெரியக் கூடாது என்று இந்த ஒழுங்குமுறை கோரியது.

சர்க்கரையும் ரஸ்குகளும் தினைச்சத்தும், முடிந்த போது டப்பியிலிட்ட இறைச்சியும் ஊருக்கு எடுத்துச் செல்லப்பட்டன. வெற்றியால் களி வெறி கொண்ட ரீதா, வாரத்தில் இரண்டு, மூன்று முறை இரவில் ஊருக்குப் போய்வரலானுள். கறுத்து, வாடிப் போனுள். ழேனியா தணிந்த குரலில் அவளைக் கண்டித்தாள்:

''இந்தா, தாயே. குழந்தைக்காக நீ மட்டு மீறி ஆபத்தை மேற்கொள்ளுகிருய். ரோந்துப் படை யினரிடம் சிக்கிக் கொள்வாய், இல்லாவிட்டால் எவ னுவது கமாண்டர் மோப்பம் கண்டுகொள்வான். தொல்லைக்கு உள்ளாவாய்.''

''நீ சும்மா இரு, ழேனியா. நான் அதிர்ஷ்டக்காரி!''

அவளுடைய விழிகளில் மகிழ்ச்சி சுடர்ந்தது. இப்படிப்பட்டவளுடன் ஆழ்ந்த முறையில் பேச முடியுமா? ழேனியா மனக் கலக்கம் அடைந்தாள்.

''ஜாக்கிரதை, ரீதா!''

தன் பயணங்கள் பற்றிக் கிரியானவா அறிவாள் என்பதை அவளுடைய பார்வையிலும் விஷமச் சிரிப்பிலுமிருந்து ரீதா விரைவில் தெரிந்து கொண்டாள். காலஞ்சென்ற கணவனுக்கு அவள் துரோகம் செய்கிருள் என்பது போலக் குறிப்பால் உணர்த்திய இந்த விஷமச் சிரிப்பு ரீதாவின் நெஞ்சில் சூட்டுக் கோல் பாய்ச்சியது. அவள் முகம் கறுத்தது. கிரியானவாவைக் கண்டித்துத் திருத்துகிறேன் என்று கிளம்பினுள். ழேனியா அதற்கு விடவில்லை. அவளை இறுகப் பிடித்து ஒரு புறம் இட்டுச் சென்ருள்.

''அட அவள் என்ன வேண்டுமானுலும் நினைத்துக் கொள்ளட்டுமே ரீதா!'' என்ருள்.

ரீதா சுய நிதானத்துக்கு வந்தாள்: ஆமாம், சரிதான். என்ன ஆபாசத்தை வேண்டுமானுலும் கற்பனை செய்துகொள்ளட்டும், பேசாதிருந்தால் போதும். இடைஞ்சல் செய்யாமல், வஸ்கோவுக்குத் தெரியப்படுத்தாமல் இருந்தால் போதும். அவனுக்குத் தெரிந்தால் என்ன நடக்கும் என்பதற்கு உதாரணம் இருந்தது: இரண்டு பெண்களை அவன் ஆற்றின் அக்கரையில் கண்டு, கையும் மெய்யுமாகப் பிடித்துவிட்டான். அவ்வளவுதான், நான்கு மணி நேரம்—மதியச் சாப்பாட்டு நேரம் முதல் மாலைச் சாப்பாட்டு நேரம்வரை — நீதிநெறி உபதேசம்

செய்தான். இராணுவ விதிகளையும் உத்தரவுகளையும் செயல் குறிப்புக்களையும் மனப்பாடமாக மேற்கோள் காட்டினான். பாவம், அந்தப் பெண்களைத் தேம்பித் தேம்பி அழ வைத்துவிட்டான். ஆற்றின் மறு கரைக்கு அல்ல, இருப்பிட முகப்புக்கு வெளியே கூட இனிப் போக மாட்டோம் என்று ஆணையிட்டார்கள் அவர்கள்.

கிரியானவா இதுவரை அவனிடம் ஒன்றும் சொல்லவில்லை.

காற்று வீசாத வெளிர் இரவுகள் வந்தன. மாலையின் மங்கிய ஒளிர்வு வைகறைவரை நீடித்தது. பூக்கத் தொடங்கியிருந்த புற்களின் நறுமணம் காற்றில் கமழ்ந்தது. விமான எதிர்ப்புப் படைப் பிரிவைச் சேர்ந்த பெண்கள் தீயணைப்புக் கொட்டில் அருகே காலைவரை பாட்டுக்கள் பாடினார்கள். இப்போது ரீதா இரண்டு இரவுகளை முகாமில் கழிப்பதும் மூன்றாவது இரவில் மறைவதுமாக ஊருக்குள் போய்வரலானாள். இந்த விஷயம் வஸ்கோவ் ஒருவனுக்குத்தான் தெரியாது. மாலைச் சாப்பாடு முடிந்த சிறிது நேரத்தில் புறப்படுவாள். மற்றவர்கள் படுக்கை விட்டு எழு முன் திரும்பிவிடுவாள்

இப்படித் திரும்பி வருவது ரீதாவுக்கு எல்லாவற்றிலும் அதிக இன்பம் அளித்தது. ரோந்துப் படையினர் கண்களில் படும் அபாயம் அப்போது நீங்கியிருக்கும். இனி சோடுகளைக் கழற்றி, நாடாக்களை முடிந்து முதுகுமீது போட்டுக் கொண்டு, வலியுண்டாக்கும் அளவுக்குச் சில்லிட்ட பனித்துளிகள் மேல் வெறுங்கால்களால் சளப்புச் சளப்பென்று அடித்தவாறு நிம்மதியாக நடக்கலாம். நடந்தவாறே சந்திப்புக்களையும் தாயாரின் குறைகளையும்

அடுத்த தன்னிச்சையான பயணத்தையும் பற்றிச் சிந்தனை செய்யலாம். மற்றவர்களின் விருப்பத்தைச் சார்ந்திராமல் அல்லது அனேகமாகச் சார்ந்திராமல் அடுத்த சந்திப்பைத் தன்னால் திட்டம் இட முடியும் என்ற எண்ணமும் ரீதாவுக்கு மகிழ்ச்சி அளித்தது.

ஆனால் யுத்தம் நடந்து கொண்டிருந்தது. மனிதர்களுடைய வாழ்க்கைகளைத் தன் சௌகரியப்படி திட்டப்படுத்தியது அது. மனிதர்களின் விதிகள் விசித்திரமாக, விளங்காத வகையில் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தன. 171வது கிளை நிலையக் கமாண்டரை ஏமாற்றியபோது ஜூனியர் சார்ஜண்டு ரீதா அஸ்யானினா ஒரு விஷயத்தை அறிந்திருக்கவில்லை. ஜெர்மன் அரசு பாதுகாப்பு அலுவலகத்தின் "**தலைமை நிலையங்களுக்கு மட்டும்**" என்ற மகுடமிட்ட உத்தரவு எண் C219/702 கையெழுத்தாகி, செயல்படுத்த ஏற்கப்பட்டு விட்டது என்பதே அந்த விஷயம்.

## 3

இங்கே காலை வேளையில் ஒரே அமைதி நிலவியது.

ரீதா வெறுங்கால்களுடன் நடை போட்டாள். சோடுகள் முதுகுக்குப் பின் ஊசலாடின. சதுப்பு நிலத்திலிருந்து அடர் மூடுபனி கிளம்பி ஊர்ந்து வந்தது. அது கால்களைச் சில்லிடச் செய்தது, ஆடைமீது படிந்தது. கிளை நிலையத்துக்கு முன் இருந்த பழக்கமான வெட்டு மரக் கட்டைமேல் உட்கார்ந்து உலர்ந்த காலுறைகளை அணிந்துகொண்டு சோடுகளை மாட்டிக் கொள்ளலாம் என்று ரீதா மன நிறை

வுடன் நினைத்துக் கொண்டாள். சாலையில் இந்தப் பக்கம் வரும் லாரிக்காக அவள் வெகு நேரம் காத்திருக்க நேர்ந்தது. எனவே இப்போது அவசரப் பட்டாள். சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ் பல பல வென்று விடியுமுன்பே எழுந்து, உடனே பண்டக சாலைப் பூட்டுக்களைச் சரி பார்க்கக் கிளம்பிவிடுவான். ரீதா அமரும் வெட்டு மரக் கட்டை பண்டக சாலையின் மரச் சுவருக்கு இரண்டு அடி தூரத்தில் புதர்களின் பின்னே இருந்ததால் அவள் பண்டக சாலைப் பக்கம் போக வேண்டி இருந்தது.

இரண்டு திருப்பங்களுக்குப் பின் ஆல்டர் மரச் சோலை வழியே நேராகப் போனால் வெட்டுமரக் கட்டையை அடைந்து விடலாம். முதல் திருப்பத்தைக் கடந்த ரீதா அப்படியே திகைத்து நின்று விட்டாள்: வழியில் நின்றான் ஒரு மனிதன்.

அந்த நெட்டையன் திரும்பிப் பார்த்தவாறு நின்றான். தலையை மூடி அவன் அணிந்திருந்த புள்ளிகளிட்ட மழைக்கோட்டு முதுகில் திமில்போலப் புடைத்திருந்தது. வாரால் இறுகக் கட்டிய நீள் சதுரப் பொட்டலம் ஒன்றை அவன் வலது கையில் பிடித்திருந்தான். அவனுடைய மார்பு மீது தொங்கியது தானியங்கித் தானியங்கித் துப்பாக்கி.

ரீதா புதருக்குள் புகுந்தாள். அது திடீரென அசைந்து, பனிநீரை அவள்மேல் தெளித்தது. ரீதாவோ அதை உணரவில்லை. தன் வழியில் கனவுத் தோற்றம் போன்று அசைவின்றி நின்ற வேற்றானை, இன்னும் அடர்த்தியாக வளராத இலைகளின் ஊடாக, அனேகமாக மூச்சுவிடாமல் உற்று நோக்கினாள்.

காட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தான் இன்

ஞெருவன். அவன் முன்னவனை விட ஒரு சொல் லுக்குக் குட்டையானவன். அவன் மார்பில் தானி யங்கித் துப்பாக்கியும் கையில் முன்னவனதே போன்ற சிப்பமும் இருந்தன. இருவரும் மௌன மாக நேரே அவளை நோக்கி வந்தார்கள். முழங்கால் உயரத்துக்கு நாடாக்களால் இறுக்கப்பட்டிருந்த நீள்சோடுகளைப் பனித்துளி படிந்த புல் மீது ஓசை யின்றி வைத்தவாறு நடந்தார்கள் அவர்கள்.

ரீதா முட்டியை வாய்க்குள் நுழைத்து வலி யெடுக்கும்படி பற்களால் கவ்விக்கொண்டாள். அசையவோ, கத்தவோ, புதர்களின் ஊடாகப் பாய்ந்து ஓடவோ மட்டும் கூடாது! அவர்கள் அரு காகக் கடந்து சென்ருர்கள். ஓரத்தில் நடந்தவன் அவள் மறைந்திருந்த புதரைத் தோளால் உராய்ந் தான். இருவரும் நிழல்கள்போல மௌனமாக, ஓசை செய்யாமல் நடந்து புதர்களுக்கு அப்பால் மறைந்துவிட்டார்கள்.

ரீதா சற்று நேரம் காத்திருந்தாள். ஒருவரை யும் காணவில்லை, ஜாக்கிரதையாகப் புதருக்கு வெ ளியே வந்து பாதையைத் தாண்டி, செடி மறைவில் ஒளிந்துகொண்டு உற்றுக் கேட்டாள்.

நிசப்தம்.

மூச்சிரைக்கப் பாய்ந்து ஓடினுள். சோடுகள் முதுகுப் புறம் தொங்கின. ஒளியாமல் குடியிருப்புக் குள் ஓடி, அடைத்துத் தாழிடப்பட்டிருந்த கதவைத் தடதடவென்று இடித்தாள்.

''தோழர் கமாண்டர்! தோழர் சார்ஜண்டு மே ஜர்!''

கடைசியில் கதவு திறக்கப்பட்டது. குறுங்கால் சட்டையும் உறைகள் மாட்டாத கால்களில் மிதியடி

களும் நீண்ட உள்சட்டையும் அணிந்து நிலையில் நின்முன் வஸ்கோவ். உறக்கக் கலக்கம் போகாத கண்களைக் கொட்டினுன்.

''என்ன?''

''காட்டில் ஜெர்மானியர்கள்!''

''அப்படியா...''வஸ்கோவ் சந்தேகம் தோன்றக் கண்களை இடுக்கிக்கொண்டான்: வேறு ஒன்றும் இல்லை, பெண்கள் கிண்டல் செய்கிருர்கள் என்று நினைத்தான். ''எப்படித் தெரியும்?''

''நானே பார்த்தேன். இரண்டு பேர். தானி யங்கித் துப்பாக்கிகளுடன். உரு மறைப்பு அங்கிகள் அணிந்திருந்தார்கள்.''

இல்லை. இவள் பொய் சொல்லுவதாகத் தெரிய வில்லை. கண்களில் திகில்...

''இங்கேயே இரு.''

சார்ஜண்டு மேஜர் வீட்டுக்குள் ஆலை பாய்ந் தான். தீ விபத்து நேர்ந்து விட்டது போன்று மளமவென்று நீள் சோடுகளையும் சீருடுப்பையும் போட்டுக்கொண்டான். வீட்டுக்காரி ஒரு சட்டை மட்டும் அணிந்து கட்டிலில் உட்கார்ந்து திறந்த வாயுடன் வியந்து நோக்கிஞள்.

''என்ன விஷயம், வஸ்கோவ்?''

''ஒன்றும் இல்லை. உங்களுக்கு சம்பந்தம் இல் லாதது.''

கைத்துப்பாக்கி வாரை இடுப்பில் இறுக்கிய வாறு வெளியே பாய்ந்தான். ரீதா அஸ்யானிஞ சோடுகளை முன்போலவே தோளுக்குப்பின் பிடித்துக் கொண்டு அதே இடத்தில் நின்ருள். சார்ஜண்டு மேஜர் இயந்திர ரீதியாக அவளுடைய கால்களை நோட்டமிட்டான். அவை சிவந்து ஈரமாய் இருந்

தன. ஒரு கட்டைவிரலில் இலேச் சருகு ஒட்டிக் கொண்டிருந்தது. ஆகவே இவள் சோடுகளை முதுகில் சுமந்தவாறு வெறுங்கால்களுடன் காட்டில் நடந் திருக்கிருள். இப்போது படைவீரர்கள் இப்படித் தான் சண்டை செய்கிருர்கள் போலிருக்கிறது.

''படைப் பிரிவு ஆயுதம் ஏந்தித் தயாராகட் டும். போர் எச்சரிக்கை செய்யப் படட்டும்! கிரி யானவாவை என்னிடம் வரச் சொல்லு, ஓடு!''

இருவரும் வெவ்வேறு புறமாகப் பாய்ந்து ஓடி ஞர்கள். ரீதா தீயணைப்புக் கொட்டிலுக்கும் அவன் ரயில் நிலைய டெலிபோன் நிலையத்துக்கும். தொடர்பு கிடைத்தால் நல்லது!

'' 'தேவதாரு'! 'தேவதாரு'!.. அட என்னைப் பெற்ற தாயே!.. உறங்குகிருர்கள், இல்லாவிட்டால் தொடர்பு அறுபட்டு விட்டது... 'தேவதாரு'! 'தேவ தாரு'!..''

'' 'தேவதாரு' கேட்கிறது.''

''பதினேழு பேசுகிறது. மூன்றைக் கூப்பிடு. அவசரமாகக் கூப்பிடு. நெருக்கடி நிலைமை!..''

''கூப்பிடுகிறேன், கத்தாதே. இவனுக்கு நெருக் கடி நிலைமையாம்...''

டெலிபோன் குழாயில் கரகரப்பு ஓசையும் கிரீச் சொலியும் நெடு நேரம் கேட்டன. பின்பு தொலே விலிருந்து ஒரு குரல் வினவியது:

''நீயா, வஸ்கோவ்? அங்கே என்ன சேதி?''

''நான்தான் தோழர் மூன்று. முகாமின் பக்கத்துக் காட்டில் ஜெர்மானியர்கள். இன்றைக்குக் காணப் பட்டார்கள். இரண்டுபேர்...''

''யாரால் காணப்பட்டார்கள்?''

''ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானினுவால்...''

கிரியானவா உள்ளே வந்தாள்—தொப்பி இல்லாமல். தலையசைப்பால் முகமன் தெரிவித்தாள், மாலைக் கொண்டாட்டத்தில் செய்வது போல.

''நான் எச்சரிக்கை அறிவிப்பு செய்திருக்கிறேன், தோழர் மூன்று. காட்டைத் துருவிப் பார்க்கலாம் என்று நினைக்கிறேன்...''

''துருவிப் பார்க்க அவசரப்படாதே, வஸ்கோவ். இது யோசனை செய்ய வேண்டிய விஷயம். நிலையத்தைக் காவல் இல்லாமல் விட்டாலும் மேலதிகாரிகள் பாராட்ட மாட்டார்கள். ஆமாம், பார்ப்பதற்கு எப்படி இருக்கிறார்கள், உன்னுடைய ஜெர்மன்காரர்கள்?''

''உருமறைப்பு அங்கி அணிந்து, தானியங்கித் துப்பாக்கிகள் வைத்திருக்கிறார்களாம். வேவுப் படையினர்...''

''வேவுப் படையினரா? உங்களிடம் அவர்கள் எதை வேவு பார்ப்பார்கள்? நீ வீட்டுக்காரியைத் தழுவிக்கொண்டு உறங்குவதையா?''

எப்போதும் இப்படித்தான். எப்போதும் குற்றம் வஸ்கோவ் மேல் தான். எல்லோரும் வஸ்கோவைப் பொறுப்பாளி ஆக்கி விட்டுத் தாங்கள் தப்பப் பார்க்கிறார்கள்.

''என்ன பேசாதிருக்கிறாய், வஸ்கோவ்? என்ன நினைக்கிறாய்?''

''பிடிக்க வேண்டும் என்று நினைக்கிறேன், தோழர் மூன்று. அவர்கள் வெகு தூரம் போவதற்குள்.''

''நீ நினைப்பது சரி, வஸ்கோவ். பிரிவிலிருந்து ஐந்து பெயரை அழைத்துக் கொண்டு தேடப் புறப்படு, தடங்கள் அழிந்து போகு முன்னே. கிரியானவா இருக்கிறாளா?''

''இருக்கிறுள், தோழர்...''

''போன் குழாயை அவளிடம் கொடு.''

கிரியானவா சுருக்கமாகப் பேசினுள். இரண்டு தரம் 'ஆகட்டும்' என்று சொன்னுள், ஒரு ஐந்து தரம் ஆமாம் போட்டாள். பின்பு குழாயை வைத்து விட்டுத் திரும்பினுள்.

''ஐந்து பேரை உங்கள் தலைமையில் அனுப்பும் படி உத்தரவு.''

''பார்த்தாளே, அவளைக் கொடு.''

''அஸ்யானினு குழுத் தலைவியாக வருவாள்.''

''நல்லது. ஆட்களை வரிசைப் படுத்துங்கள்.''

''வரிசைப்படுத்தி ஆயிற்று, தோழர் சார்ஜண்டு மேஜர்.''

வரிசையின் ஒழுங்கை வருணித்து மாளாது. ஒருத்தியின் கூந்தல் குதிரைப் பிடரிமயிர்போல இடுப் புவரை தொங்கிற்று. இன்னொருத்தியின் தலையில் காகிதச் சுருள்கள். படைவீரர்களாம்! இவர்களை வைத்துக்கொண்டு காட்டைத் துருவிப் பார்த்து, தானியங்கித் துப்பாக்கிகள் வைத்திருக்கும் ஜெர் மானியரைப் பிடிக்க வேண்டுமாம்! இவர்களிடம் இருப்பவையோ, 1891-1930ம் ஆண்டு மாதிரித் துப்பாக்கிகள்...''

''விட்டாற்றியாக நில்லுங்கள்!''

''ழேனியா, காலியா, லீஸா...''

சார்ஜண்டு மேஜர் முகம் சுளித்தான்.

''இருங்கள், அஸ்யானினு! நாம் பிடிக்கப் போவது ஜெர்மானியர்களை, மீன்களை அல்ல. ஆகவே துப்பாக்கி சுடவாவது தெரிந்தவர்களாக இருக் கட்டும்...''

''தெரிந்தவர்கள்தான்.''

வஸ்கோவ் தொலையட்டும் என்று கைவிட நினைத்தான், ஆனால் ஒன்றை நினைவுபடுத்திக் கொண்டான்.

''ஆமாம் இன்னொரு விஷயம். ஜெர்மன் மொழி அறிந்தவர் யாராவது இருக்கலாமே?''

''நான் அறிவேன்.''

மெல்லிய கீச்சுக் குரல் நேரே வரிசையிலிருந்து வந்தது. இதனால் வஸ்கோவின் நிதானம் குலைந்தது.

''நான் என்றால் என்ன? நானாவது, நான்? முறையாக அறிவிக்க வேண்டும்.''

''படையினள் குர்விச்.''

''ஓஹ்-ஹோ ஹ்-ஹோ! கைகளை உயர்த்து என்பதற்கு அவர்கள் பேச்சில் என்ன சொல்ல வேண்டும்?''

''ஹெண்டே ஹோ ஹ்.''

''சரி,'' என்று கையை ஆட்டினான் சார்ஜண்டு மேஜர். ''நல்லது, குர்விச்...''

இந்த ஐந்து பேரும் அணி வகுத்து நின்றார்கள். ஆழ்ந்த முகத் தோற்றம் கொண்டிருந்தார்கள், குழந்தைகள் போல. ஆனால் பயம் தென்படவில்லை இதுவரை.

''நாம் திரும்பி வர இரண்டு நாட்கள் ஆகும் என்று கணக்கிட வேண்டும். உணவுப் பண்டங்களும் தோட்டாக்களும் எடுத்துக்கொள்ள வேண்டும். தோட்டாக்கள் தலைக்கு ஐந்து சட்டங்கள் வீதம் எடுத்துக் கொள்ளுங்கள். நிமிர இரை எடுங்கள்... அதாவது, வந்து, வயிறு நிறையச் சாப்பிடுங்கள். சோடுகளை மனிதர்களாக லட்சணமாகப் போட்டுக் கொள்ளுங்கள். எல்லாவற்றையும் சீர்படுத்திக் கொள்ளுங்கள், தயார் ஆகுங்கள். எல்லாவற்றுக்கும் நாற்பது நிமிட நேரம். கலையுங்கள்!... கிரியான

வாவும் அஸ்யானினுவும் என்னோடு வாருங்கள்.''

படையினர் சாப்பிட்டுப் பயணத்துக்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கையில் சார்ஜண்டு மேஜர் இரண்டு சார்ஜண்டுகளையும் அழைத்துக் கொண்டு ஆலோசனை நடத்தச் சென்றான். நல்ல வேளையாக வீட்டுக்காரி எங்கேயோ போய்விட்டாள். ஆனால் படுக்கையைச் சீர்படுத்தாமல் விட்டுச் சென்றிருந்தாள். இரண்டு தலையணைகள் அக்கம் பக்கமாக அன்புடன் பொருந்தியிருந்தன... வஸ்கோவ் சார்ஜண்டுகளுக்கு சூப் சாப்பிடக் கொடுத்து உபசரித்தான், பின்பு, மடிப்புக்களில் அழிந்து போயிருந்த பழைய வரைபடத்தைப் பார்வையிடலானான்.

''அப்படியானால் இந்தப் பாதையில் சந்தித்தாயாக்கும்?''

''இதோ இங்கே,''—அஸ்யானினுவின் விரல் வரைபடத்தை லேசாக இழுத்து நேராக்கிற்று. ''அவர்கள் என்னைக் கடந்து நெடுஞ்சாலையின் திக்கில் போனார்கள்.''

''நெடுஞ்சாலையின் திக்கிலா?... ஆமாம், காலை நான்கு மணிக்கு நீ காட்டில் என்ன செய்துகொண்டிருந்தாய்?''

அஸ்யானினு பேசாதிருந்தாள்.

''வெறுமே இரவுத் தேவைகளுக்காக'' என்று வஸ்கோவைப் பார்க்காமல் சொன்னாள் கிரியானவா.

''இரவுத் தேவைகளுக்கா?'' வஸ்கோவ் கடுங்கோபம் அடைந்தான். 'புளுகுகிறார்கள் பார்! ''இரவுத் தேவைகளுக்கு வேண்டியதை எல்லாம் நானே உங்களுக்காக வைத்தேனே. ஒருவேளை இடம் பற்றவில்லையோ?''

இருவரும் முகம் சுளித்தார்கள்.

''இதோ பாருங்கள், தோழர் சார்ஜண்டு மேஜர், சில கேள்விகளுக்குப் பெண்கள் பதில் சொல்ல வேண்டியதில்லை'' என்று மறுபடி கூறினாள் கிரியானவா.

''இங்கே பெண்கள் கிடையாது!'' என்று இரைந்து மேஜை மேல் அங்கையால் அடிக்கக் கூடச் செய்தான் கமாண்டர். ''கிடையாது! படையினரும் கமாண்டர்களும் தாம் உண்டு, புரிகிறதா? சண்டை நடக்கிறது. அது முடியும் வரை எல்லோரும் பொதுப் பாலார் தாம்...''

''அதனால்தான் உங்கள் அறையில் படுக்கை இன்னும் விரித்தபடியே கிடக்கிறதோ, தோழர் பொதுப்பால் சார்ஜண்டு மேஜர்...''

அப்பா, தேள்தான் இந்தக் கிரியானவா! ஒரே வார்த்தையில் சொன்னால், கழுத்தறுப்பு!

''சாலைக்கா போனார்கள் என்கிறாய்?''

''அந்தத் திக்கில்...''

''நெடுஞ்சாலையின் பக்கம் அவர்களுக்கு வேலையே கிடையாதே: அங்கே இரண்டு பக்கங்களிலும் இருந்த காடு பின்லாந்துப் போர் நடந்தபோதே அழிக்கப்பட்டுவிட்டதே. அங்கே அவர்களுக்கு உடனே தண்டனை கிடைத்து விடுமே. இல்லை, துணைக் கமாண்டர்களே, அவர்கள் போனது நெடுஞ் சாலைக்கு அல்ல... நீங்கள் சாப்பிடுங்கள், சாப்பிடுங்கள்.''

''அங்கே புதர்களும் மூடுபனியும் இருக்கின்றன'' என்றாள் அஸ்யானினா. ''எனக்குத் தோன்றியது...''

''தோற்றங்கள் தென்பட்டால் சிலுவைக் குறி இட்டுக் கொண்டிருக்க வேண்டும்'' என்று வாய்க்

குள் முணுமுணுத்தான் கமாண்டர். ''அவர்களிடம் சிப்பங்கள் இருந்ததாகவா சொல்லுகிருய்?''

''ஆமாம். கனத்தவையாய் இருக்கும். வலது கையில் பிடித்திருந்தார்கள். அவை பாங்காகக் கட்டப்பட்டிருந்தன.''

சார்ஜண்டு மேஜர் சிகரெட்டு சுருட்டிப் புகைத்துக் கொண்டே குறுக்கும் நெடுக்கும் நடந்தான். திடீரென்று அவனுக்கு எல்லாம் தெளிவாக விளங்கிவிட்டது. இவ்வளவு தெளிவான விஷயத்தை அது வரை புரிந்து கொள்ளாததால் அவனுக்கு வெட்கமாகக் கூட இருந்தது.

''அவர்கள் சிப்பங்களில் கொண்டுபோனது வெடிமருந்து என்று நினைக்கிறேன். வெடிமருந்து என்முல் அவர்கள் போனது சாலைக்கு அல்ல, இருப்புப் பாதைக்கு. அதாவது கீரவ் இருப்புப் பாதைக்கு.''

''கீரவ் இருப்புப் பாதை கிட்டத்தில் இல்லையே'' என்று நம்பிக்கை இல்லாமல் கூறினுள் கிரியானவா.

''ஆனல் காடுகளின் வழியே போகலாம் அதற்கு. இங்கே காடுகள் அடர்ந்தவை. பெரிய சைனியமே அவற்றுக்குள் மறைந்து கொள்ளலாம். இரண்டு ஆட்கள் எம்மாத்திரம்?''

''அப்படி என்முல்...'' அஸ்யானினு கிளர்ச்சி அடைந்தாள். ''அப்படி என்முல் இருப்புப் பாதைக் காவல் படையினருக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும்.''

''கிரியானவா தகவல் கொடுப்பாள்'' என்முன் வஸ்கோவ். ''நான் சொல்வது இதுதான்: தினந்தோறும் மாலை எட்டு முப்பதுக்குத் தகவல் கொடு. அழைப்புக் குறி 'பதினேழு'. நீ சாப்பிடு, சாப்பிடு,

அஸ்யாணிஞ. நாள் பூராவும் நடக்க வேண்டி இருக்குமே...''

நாற்பது நிமிடங்களில் தேட்டக் குழு அணி வகுத்தது. ஆனுல் ஒன்றரை மணி கழிந்த பிறகே அது புறப்பட்டது. ஏனென்ருல் சார்ஜண்டு மேஜர் கண்டிப்புடன் பார்வையிட்டு நுட்பமாகக் குறைகள் கண்டுபிடித்தான்.

''எல்லோரும் சோடுகளேக் கழற்றுங்கள்!..''

அவன் நினைத்தது சரிதான். பாதிப் பெயர் மெல்லிய காலுறைகளுக்கு மேல் சோடுகளே மாட்டியிருந்தார்கள். மறு பாதிப்பெயர் கால் துணிகளே மப்ளர்கள் போலச் சுற்றிக் கொண்டிருந்தார்கள். இந்த மாதிரிக் காலணிகளுடன் பிரமாதச் சண்டை போட்டுவிட முடியாது, ஏனென்ருல் மூன்று கிலோ மீட்டர்கள் நடந்ததும் இந்தப் போர் வீரர்களின் கால்களில் கொப்புளங்கள் கிளம்பி இரத்தம் கசியும். இவர்களுடைய கமாண்டர் அஸ்யாணிஞ காலுறைகளேயும் சோடுகளேயும் சரியாகப் போட்டுக் கொண்டிருந்தாள், உண்மை. ஆனுல் தனக்குக் கீழே உள்ளவர்களுக்கு ஏன் கற்றுத் தரவில்லே?..

கால் துணிகளே எப்படிச் சுற்றிக்கொள்ள வேண்டும் என்று நாற்பது நிமிடங்களில் கற்பித்தான் வஸ்கோவ். இன்னும் நாற்பது நிமிடங்கள் துப்பாக்கிகளேச் சுத்தம் செய்யச் சொன்ஞன். அவர்கள் அவற்றில் மரவட்டைகள் தொற்ருதபடி வைத்திருந்தால் சரிதான். ஆனுல் சுட வேண்டி வந்தால் எல்லாம் கச்சிதமாய் இருக்க வேண்டுமே.

எஞ்சிய நேரத்தை ஒரு குட்டிப் பிரசங்கம் செய்வதில் கழித்தான் சார்ஜண்டு மேஜர். படை

யினருக்கு வேலையின் நுட்பங்களை அது விளக்கியது என்று அவன் எண்ணினான்:

''பகைவனிடம் பயப்படாதீர்கள். அவன் நமது பின்புலத்தில் நடக்கிறான், ஆகவே தானே திகில் அடைந்திருப்பான். ஆனால் அவனைக் கிட்டத்தில் நெருங்க விடாதீர்கள். ஏனென்றால் என்ன இருந்தாலும் பகைவன் பலசாலியான ஆள், கிட்டத்துச் சண்டைக்கு வேண்டிய ஆயுதங்கள் வைத்திருக்கிறான். தப்பித் தவறி அவன் பக்கத்தில் வந்துவிட நேர்ந்தால் இன்னும் நன்றாக மறைந்து கொள்ளுங்கள். ஓட மட்டும் செய்யாதீர்கள், சொல்லிவிட்டேன்: ஓடுபவனைத் தானியங்கித் துப்பாக்கியால் சுட்டு வீழ்த்துவது பகைவனுக்கு இன்பமாய் இருக்கும். இரண்டு இரண்டு பேராகச் சேர்ந்தே நடமாடுங்கள். வழி நடையின் போது பின்தங்கவோ, உரையாடவோ கூடாது. பாதை எதிர்ப்பட்டால் என்ன செய்ய வேண்டும்?''

''தெரியும்'' என்றாள் செம்பழுப்புத் தலையள். ''ஒருத்தி வலப் புறமாகவும் மற்றவள் இடப் புறமாகவும் போக வேண்டும்.''

''மறைவாக'' என்று திருத்தினான் சார்ஜண்டு மேஜர். நடை ஒழுங்கு இந்த விதமாக இருக்கும்: முன்னால், ஜூனியர் சார்ஜண்டும் ஒரு படையினளும் கொண்ட முன்னணிப் பிரிவு. அடுத்தபடி ஒரு நூறு மீட்டர் தொலைவில் தலைமை மையம்: நானும் —அவன் தன் படைப்பிரிவு மீது கண்ணோட்டினான்— மொழிபெயர்ப்பாளியும். எங்களுக்கு நூறு மீட்டர் பின்னே கடைசி இணை. அக்கம் பக்கமாக நடக்கக் கூடாது, ஒருவருக்கு ஒருவர் பார்வையில் படும் தூரத்தில் முன் பின்னாக நடக்க வேண்டும். பகை

வன் தென்பட்டாலோ, ஏதேனும் புரியாதது நடந்தாலோ... விலங்கு போலவோ பறவை போலவோ கத்த யாருக்கு முடியும்?''

களுக்கென்று நகைத்தார்கள் பெண்கள், அசடுகள்...

''நான் மெய்யாகவே கேட்கிறேன்! காட்டில் மனிதக் குரலில் குறி அறிவிக்கக் கூடாது. ஜெர்மானியர்களுக்கும் காதுகள் இருக்கின்றன.''

பெண்களின் சிரிப்பு அடங்கிற்று.

''எனக்குக் கத்த வரும்'' என்று கூச்சத்துடன் சொன்னுள் குர்விச். ''கழுதைபோல: இயா-அ, இயா-அ!''

''காட்டிலே கழுதைகள் கிடையாது'' என்று அதிருப்தியுடன் கூறினுன் சார்ஜண்டு மேஜர். ''நல்லது, குவாக் குவா என்று கத்தப் பழகுங்கள், வாத்துக்கள் போல.''

அவன் கத்திக் காட்டினுன். அவர்கள் கலீரென்று சிரித்தார்கள். இதில் சிரிப்பதற்கு என்ன இருந்தது! வஸ்கோவுக்குப் புரியவில்லை. ஆனுல் அவனுலும் புன் சிரிப்பை அடக்க முடியவில்லை.

''ஆண் வாத்து பெண் வத்தை இப்படிக் கத்தி அழைக்கும்'' என்று விளக்கி விட்டு, ''எங்கே, கத்திப் பாருங்கள்'' என்ருன்.

எல்லோரும் சந்தோஷமாகக் கத்திஞர்கள். அதிலும் இந்தச் செம்பழுப்புத் தலையள் ழேனியா (ஓ, அழகான பெண், இவள் மேல் காதல் ஏற்படாமல் கடவுள் காப்பாராக, அழகான பெண்!) உற்சாகமாக முயன்ருள். ஆனுல் அஸ்யானினுவுக்குத் தான் எல்லோரையும் விட நன்ருக வாய்த்தது. புரிந்த விஷயம்: அவள் திறமைசாலி, தெரிகிறது.

இன்னும் ஒருத்தி—லீஸாவோ யாரோ—சுமாராகக் கத்தினாள். கட்டுக் குட்டானவள். தோள்களா, பிட்டமா, எங்கே அதிக அகலம் என்று சொல்ல முடியவில்லை. குரலை அருமையாக மாற்றிக் கொண்டாள். மொத்தத்தில் மோசமில்லாதவள். இந்த மாதிரிப் பெண் எப்போதும் பயன்படுவாள். பலசாலி, ஏரில் பூட்டி உழலாம் போல.

நகரத்து நோஞ்சான்கள் காலியா செத்வெர்த்தாக், மொழிபெயர்ப்பாளி சோனியா குர்விச், இவர்கள் மாதிரி இல்லை இவள்.

''வோப் ஏரிக் கரைக்குப் போவோம். இங்கே பாருங்கள்'' என்று வரைபடத்தைக் காட்டினான் வஸ்கோவ். பெண்கள் வரைபடத்தைச் சூழ்ந்து மொய்த்தார்கள், அவனுடைய பின் மண்டையிலும் காதுகளிலும் அவர்களுடைய மூச்சுக் காற்று பட்டது. வேடிக்கை. ''ஜெர்மானியர் இருப்புப் பாதைக்குப் போகிறார்கள் என்றால் ஏரிப் பக்கம் போகாமல் தீராது. குறுக்கு வழி அவர்களுக்குத் தெரியாது, ஆகையால் நாம் அவர்களுக்கு முன்பு அங்கே இருப்போம். நாம் சேர வேண்டிய இடம் ஒரு இருபது கிலோமீட்டர் இருக்கும். மதியச் சாப்பாட்டுக்கு அங்கே இருப்போம். முன்னேற்பாடுகள் செய்யவும் நமக்கு நேரம் கிடைக்கும். ஏனென்றால் ஜெர்மானியர்கள் சுற்று வழியாக, ஒளிந்து மறைந்த வாறு குறைந்தது ஐம்பது கிலோமீட்டர் தூரம் நடக்க வேண்டி இருக்கும். எல்லாம் புரிந்ததா, படைவீரத் தோழர்களே?''

படையினர் ஆழ்ந்த தோற்றம் கொண்டார்கள்:

''புரிந்தது...''

பிறந்த மேனியாக வெயில் காய்வதும் விமானங்

களில் பீரங்கிக் குண்டுகளைச் செலுத்துவதும் இவர்களுக்குப் பழக்கமானவை—அட பாழும் யுத்தமே...

''ஜூனியர் சார்ஜண்டு ஆஸ்யானின்று தளவாட சாதனங்களையும் முஸ்தீப்பையும் சரிபார்க்க வேண்டும். பதினைந்து நிமிடங்களில் புறப்படுவோம்.''

படையினரை விட்டுவிட்டு வீடு சென்றான் வஸ்கோவ். பயணப் பையைத் தயாராக வைக்கும்படி வீட்டுக்காரியிடம் முன்பே சொல்லியிருந்தான். அதையும் தேவைப்படும் வேறு சில சாதனங்களையும் எடுத்துக்கொள்ள வேண்டி இருந்தது. ஜெர்மானியர் மூர்க்கமாகச் சண்டை போடுபவர்கள். அவர்கள் கூட்டம் கூட்டமாகக் கொல்லப்படுவது கேலிப் படங்களில்தான். ஆகவே தக்க முன்னேற்பாடு தேவைப்பட்டது.

வீட்டுக்காரி அவன் சொல்லியிருந்த சாமான்கள் எல்லாவற்றையும் சேகரித்து வைத்திருந்தாள். மேற்கொண்டு கொழுப்புத் துண்டும் கருவாடும் வேறு வைத்திருந்தாள். இதற்காக அவளைக் கோபிக்க நினைத்த வஸ்கோவ் எண்ணத்தை மாற்றிக் கொண்டான்: கூட்டமோ மணவிருந்துக் கூட்டம் போல. உணவுப் பண்டங்கள் நிறைய வேண்டித் தான் இருக்கும். துப்பாக்கிக்கும் கைத்துப்பாக்கிக்கும் தேவையான தோட்டாக்களை அதிகமாகவே பையில் போட்டுக்கொண்டான். இரண்டு கைக்குண்டுகளையும் எதற்கும் இருக்கட்டும் என்று எடுத்துக் கொண்டான்.

வீட்டுக்காரி சந்தடி செய்யாமல் அச்சத்துடன் நோக்கினாள். விழிகளில் நீர் மல்கியது. நின்ற இடத்திலேயே அசையாமல் நின்றாள். ஆனாலும் அவனைப் பாய்ந்து தழுவிக் கொள்ள ஆசை கொண்டு துடித்

தாள். வஸ்கோவால் தாங்க முடியவில்லை. அவளுடைய தலையை வருடி.

''நாளைக் கழித்துத் திரும்பி வருவேன். ரொம்பச் சுணக்கம் ஏற்பட்டாலும் புதன் கிழமை திரும்பி விடுவேன்'' என்றான்.

அழத் தொடங்கினாள். அட பெண்களா, பெண்களா, அவலப் பிறவிகள் நீங்கள்! ஆண்களுக்கே இந்த யுத்தம் நச்சுப் பூண்டு போல. உங்களுக்குக் கேட்க வேண்டுமா...

வஸ்கோவ் வெளியே போனான். நிலைய எல்லையில் குழுமியிருந்த தனது ''காவல்படையினர்'' மீது பார்வை செலுத்தினான். துப்பாக்கிக் கட்டைகள் அனேகமாகத் தரையைத் தொட்டுக்கொண்டிருந்தன.

வஸ்கோவ் பெருமூச்சுவிட்டான்.

''தயாரா?''

''தயார்'' என்றாள் ரீதா அஸ்யானினா.

''நடவடிக்கைக் காலம் முழுதும் துணைத் தலைவியாக ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானினாவை நியமிக்கிறேன். குறிகளை நினைவுபடுத்துகிறேன்: இரண்டு வாத்துக் கத்தல்கள் 'எச்சரிக்கை, பகைவனைக் காண்கிறேன்' என்று பொருள்படும். மூன்று வாத்துக் கத்தல்களுக்கு அர்த்தம், 'எல்லோரும் என்னிடம் வாருங்கள்' என்பதாகும்.''

பெண்கள் கொல்லென்று நகைத்தார்கள். 'இரண்டு வாத்துக் கத்தல்கள்', 'மூன்று வாத்துக் கத்தல்கள்' என்று அவன் வேண்டுமென்றே கூறினான், பெண்கள் குதூகலம் அடைவதற்காக, அவர்கள் சிரிப்பதற்காக.

''முன்னணிப் பிரிவு, விரைவாக நடக்க!''

புறப்பட்டார்கள்.

முன்னே அஸ்யானினுவும் பருத்த பெண் லீஸாவும். வஸ்கோவ் அவர்கள் புதர்களில் மறையும் வரை காத்திருந்து, பிறகு வாய்க்குள் நூறுவரை எண்ணிவிட்டு, அவர்களைத் தொடர்ந்து சென்றான். அவனோடு நடந்தாள் மொழிபெயர்ப்பாளி சோனியா. துப்பாக்கி, தோட்டாப் பை, சுருட்டிய மேல் கோட்டு, பயணப்பை ஆகியவற்றின் சுமை காரணமாக நாணல் போல் வளைந்தாள்... பின்னணியில் வந்தார்கள் ழேனியாவும் காலியாவும்.

## 4

வோப் ஏரிக்கு விரைவாகச் செல்ல வேண்டும் என்று வஸ்கோவ் கவலைப்படவில்லை: அங்கே போவதற்கான நேர் வழி ஜெர்மானியருக்குத் தெரிந்திருக்க முடியாது. ஏனென்றால் இந்த வழியை அவனேதான் கண்டுபிடித்திருந்தான், பின்லாந்துப் போர்க் காலத்திலேயே. எல்லா வரைபடங்களிலும் இந்த இடம் புதை சேறாகக் குறிக்கப்பட்டிருந்தது. ஆகவே ஜெர்மானியருக்கு இருந்தது ஒரு வழிதான்: காடுகள் வழியே சுற்றுப் பாதையில் போய், சினியூஹின் குன்றுத் தொடர் அருகே இருந்த ஏரியை அடைவதே அந்த வழி. இந்தக் குன்றுத் தொடரை விட்டு விலகிப் போவது அவர்களுக்கு அறவே முடிந்திராது. வஸ்கோவின் படையினர் எவ்வளவுதான் மெதுவாக, எவ்வளவுதான் ஆடி அசைந்து நடந்தாலும் ஜெர்மானியர் அவர்களை விட அதிக நேரம் நடக்க வேண்டி இருக்கும். மாலைக்குமுன் ஜெர்மானியர் அங்கே போய்ச் சேர மாட்டார்கள். அதற்குள்

வஸ்கோவ் உள் வரவும் வெளியேறவுமான எல்லா வழிகளையும் கண்காணிக்க ஏற்பாடு செய்து விட முடியும். அவன் தன் படைவீரப் பெண்களைப் பாறைகளின் பின்னே அமர்த்தி, நல்ல மறைப்பு ஏற்படுத்திக் கொடுப்பான், உற்சாகம் ஊட்டுவதற். காக ஒரு தரம் சுடுவான், அப்புறம் பேசுவான் ஒரு ஜெர்மானியனைக் கொன்று விடலாமே. மற்ற ஜெர்மானியனுடன் தனியாகச் சண்டைபோட வஸ் கோவுக்கு பயமாய் இல்லை.

அவனுடைய படையினர் உற்சாகமாக, நிலைமைக்கு முற்றிலும் ஏற்ற விதத்தில் நடந்தார்கள். சிரிப்பும் பேச்சுக்களும் கமாண்டர் காதில் பட வில்லை. அவர்கள் எப்படி அவதானிக்கை செய்தார் கள் என்பதை அவன் அறிய முடியவில்லை. ஆனால் அவன் கரடி வேட்டையின் போது செய்வது போலத் தரையை உற்றுப் பார்த்தவாறு நடந்தான். வேற்றுக் காலணி வரைகளின் லேசான தடம் அவன் கண்ணில் பட்டு விட்டது. இந்தத் தடம் மிக நீளமாக இருந்தது. அந்தத் தடத்தை ஏற்படுத்திய ஆள் இரண்டு மீட்டர் உயரமும் சுமார் நூறு கிலோ கிராம் நிறையும் கொண்டவனாக இருப்பான் என்று அனுமானித்தான் வஸ்கோவ். இந்த மாதிரிப் பெருந்தடியனை எதிர்ப்படுவது பெண்களுக்கு, அவர் கள் என்னதான் ஆயுதங்கள் வைத்திருந்தாலும், சரியாகாது. விரைவில் சார்ஜண்டு மேஜர் இன் னொரு தடத்தைக் கண்டான். ஜெர்மானியன் புதை சேற்றைச் சுற்றிச் செல்லும் பாதையில் நடந்திருக் கிறான் என்று இந்த இரண்டு தடங்களையும் கொண்டு அவன் முடிவு செய்தான். எல்லாம் அவன் எண்ணி யது போலவே நடந்திருந்தது.

''ஜெர்மன்காரன் நல்ல நடை நடப்பான்'' என்று தன் துணைப் படையினளிடம் சொன்னுன் வஸ்கோவ். ''ரொம்ப நல்ல நடை, ஒரு நாற்பது கிலோமீட்டர், நடப்பான்.''

மொழிபெயர்ப்பாளி இதற்கு ஒன்றும் சொல்ல வில்லை. ஏனென்ருல் அவள் ஒரேயடியாகக் களைத்துச் சோர்ந்து இருந்தாள். அவளுடைய துப்பாக்கியின் அடிக்கட்டை தரையில் இழுபட்டது. சார்ஜண்டு மேஜர் பல முறை அவள் பக்கம் பார்வை செலுத்தினுன். அவளுடைய கூரிய, அழகற்ற, ஆனுல் மிகுந்த ஆழ்ந்த தோற்றம் கொண்ட முகம் அவ்வப்போது அவன் கண்களில் பட்டது. தற்போது ஆண்கள் எண்ணிக்கையில் குறைந்திருக்கும் நிலையில் இவளுக்கு மணவாழ்க்கை கிடைக்காது என்று வருத்தத்துடன் எண்ணினுன்.

''உனக்கு அப்பா அம்மா உயிரோடு இருக்கிருர்களா, இல்லை, நீ அனுதைதானு?'' என்று திடீரென வினவினுன்.

''அனுதைதானுவா?..'' அவள் புன்னகை செய்தாள். ''ஒருவேளை நான் அனுதைதான் போலும்.''

''உனக்கே நிச்சயமாகத் தெரியாதா என்ன?''

''யாருக்குத்தான் இப்போது இது நிச்சயமாகத் தெரியும், தோழர் சார்ஜண்டு மேஜர்?''

''அதுவும் சரி தான்...''

''என் தாயார் தகப்பனுர் மீன்ஸ்க் நகரில் இருக்கிருர்கள்.'' அவள் மெலிந்த தோளைக் குலுக்கித் துப்பாக்கியைச் சரிப்படுத்திக் கொண்டாள். ''நான் மாஸ்கோவில் படித்தேன். தேர்வுக்குத் தயாராகிக் கொண்டிருந்தேன், அதற்குள்...''

''ஏதாவது தகவல் கிடைத்ததா?''

வஸ்கோவ் உள் வரவும் வெளியேறவுமான எல்லா வழிகளையும் கண்காணிக்க ஏற்பாடு செய்து விட முடியும். அவன் தன் படைவீரப் பெண்களைப் பாறைகளின் பின்னே அமர்த்தி, நல்ல மறைப்பு ஏற்படுத்திக் கொடுப்பான், உற்சாகம் ஊட்டுவதற். காக ஒரு தரம் சுடுவான், அப்புறம் பேசுவான் ஒரு ஜெர்மானியனைக் கொன்று விடலாமே. மற்ற ஜெர்மானியனுடன் தனியாகச் சண்டைபோட வஸ் கோவுக்கு பயமாய் இல்லை.

அவனுடைய படையினர் உற்சாகமாக, நிலைமைக்கு முற்றிலும் ஏற்ற விதத்தில் நடந்தார்கள். சிரிப்பும் பேச்சுக்களும் கமாண்டர் காதில் பட வில்லை. அவர்கள் எப்படி அவதானிக்கை செய்தார் கள் என்பதை அவன் அறிய முடியவில்லை. ஆனால் அவன் கரடி வேட்டையின் போது செய்வது போலத் தரையை உற்றுப் பார்த்தவாறு நடந்தான். வேற்றுக் காலணி வரைகளின் லேசான தடம் அவன் கண்ணில் பட்டு விட்டது. இந்தத் தடம் மிக நீளமாக இருந்தது. அந்தத் தடத்தை ஏற்படுத்திய ஆள் இரண்டு மீட்டர் உயரமும் சுமார் நூறு கிலோ கிராம் நிறையும் கொண்டவனாக இருப்பான் என்று அனுமானித்தான் வஸ்கோவ். இந்த மாதிரிப் பெருந்தடியனை எதிர்ப்படுவது பெண்களுக்கு, அவர் கள் என்னதான் ஆயுதங்கள் வைத்திருந்தாலும், சரியாகாது. விரைவில் சார்ஜண்டு மேஜர் இன்னொரு தடத்தைக் கண்டான். ஜெர்மானியன் புதை சேற்றைச் சுற்றிச் செல்லும் பாதையில் நடந்திருக் கிறான் என்று இந்த இரண்டு தடங்களையும் கொண்டு அவன் முடிவு செய்தான். எல்லாம் அவன் எண்ணியது போலவே நடந்திருந்தது.

''ஜெர்மன்காரன் நல்ல நடை நடப்பான்'' என்று தன் துணைப் படையினளிடம் சொன்னுன் வஸ்கோவ். ''ரொம்ப நல்ல நடை, ஒரு நாற்பது கிலோமீட்டர், நடப்பான்.''

மொழிபெயர்ப்பாளி இதற்கு ஒன்றும் சொல்ல வில்லே. ஏனென்ருல் அவள் ஒரேயடியாகக் களைத்துச் சோர்ந்து இருந்தாள். அவளுடைய துப்பாக்கியின் அடிக்கட்டை தரையில் இழுபட்டது. சார்ஜண்டு மேஜர் பல முறை அவள் பக்கம் பார்வை செலுத் தினுன். அவளுடைய கூரிய,அழகற்ற, ஆனுல் மிகுந்த ஆழ்ந்த தோற்றம் கொண்ட முகம் அவ்வப்போது அவன் கண்களில் பட்டது. தற்போது ஆண்கள் எண்ணிக்கையில் குறைந்திருக்கும் நிலேயில் இவ ளுக்கு மணவாழ்க்கை கிடைக்காது என்று வருத்தத் துடன் எண்ணினுன்.

''உனக்கு அப்பா அம்மா உயிரோடு இருக்கிருர் களா, இல்லே, நீ அனுதைதானு?'' என்று திடீரென வினவினுன்.

''அனுதைதானுவா?..'' அவள் புன்னகை செய் தாள். ''ஒருவேளே நான் அனுதைதான் போலும்.''

''உனக்கே நிச்சயமாகத் தெரியாதா என்ன?''

''யாருக்குத்தான் இப்போது இது நிச்சயமாகத் தெரியும், தோழர் சார்ஜண்டு மேஜர்?''

''அதுவும் சரி தான்...''

''என் தாயார் தகப்பனுர் மீன்ஸ்க் நகரில் இருக் கிருர்கள்.'' அவள் மெலிந்த தோளேக் குலுக்கித் துப்பாக்கியைச் சரிப்படுத்திக் கொண்டாள். ''நான் மாஸ்கோவில் படித்தேன். தேர்வுக்குத் தயாராகிக் கொண்டிருந்தேன், அதற்குள்...''

''ஏதாவது தகவல் கிடைத்ததா?''

''எப்படிக் கிடைக்கும், நீங்களே சொல்லுங்கள்...''

''ஆமாம்...'' வஸ்கோவ் இன்னொரு முறை ஓரக் கண்ணுல் பார்த்தான். அவளுக்கு மனத்தாங்கல் ஏற்படுமோ என்று சிந்தித்தான்.

''தாயார் தகப்பனுர் யூதர்களோ?''

''அதுதான் தெரிகிறதே.''

''தெரிகிறதேயாம்...'' கமாண்டர் கோபத்துடன் முகம் சுளித்தான். ''தெரிந்த விஷயமாய் இருந்தால் கேட்டிருக்கவே மாட்டேனே.''

மொழிபெயர்ப்பாளி பேசாதிருந்தாள். கரடு முரடான கித்தான் காலணிகளை ஈரப் புல்மேல் அடித்தவாறு நடந்து கொண்டே புருவத்தை நெரித்தாள். ஓசையின்றிப் பெரு மூச்சு விட்டாள்.

''ஒரு வேளை தப்பி வெளியேறி இருப்பார்கள்...''

அந்தப் பெருமூச்சு வஸ்கோவின் இதயத்தைத் தாக்கியது. ஐயோ, சிட்டுக்குருவி, மாய்ந்து போவாய் நீ. இந்தத் துயரத்தைத் தாங்க உனக்கு வலு ஏது? இந்தப் பாழும் யுத்தத்தை வாய்கொண்ட மட்டும் ஆபாச வசவுகளைப் பொழிந்து திட்டினுல் அப்பாடா என்று இருக்கும். அதே கையோடு, பெண்களைத் தேட்டக் குழுவில் நியமித்த அந்த மேஜரையும் சவர்க்காரக் கரைசலில் போட்டு அலசி எடுத்தால் மனதுக்கு இதமாய் இருக்கும். அதற்குப் பதிலாக எப்பாடு பட்டாவது புன்சிரிப்பை உதடுகளுக்குக் கொண்டுவர வேண்டி இருக்கிறது.

''குர்விச் எங்கே, மூன்று தரம் வாத்துக் கத்தல் கத்து!''

''எதற்காக?''

''போர் ஆயத்தத்தைச் சரிபார்ப்பதற்காக. எங்

கே, கற்றுக் கொடுத்தேனே, மறந்துவிட்டாயா?''

சட்டென்று அவள் புன்னகைத்தாள். விழிகளில் உயிரொளி சுடர்ந்தது.

''இல்லை, மறக்கவில்லை!''

வாத்துக் கத்தல் என்னவோ வாய்க்கவே இல்லை தான்: வெறும் குறும்புச் சேட்டை. நாடக மன்றத்தில் போல. ஆனாலும் முன்னணிப் பிரிவினரும் பின்னணிப் பிரிவினரும் அவனிடம் வரவேண்டும் என்பதைப் புரிந்து கொண்டார்கள். அஸ்யானினாவோ, துப்பாக்கியைக் கையில் பிடித்தவாறு ஓட்டமாக ஓடி வந்தாள்:

''என்ன நடந்தது?''

''ஏதாவது நடந்திருந்தால் இதற்குள் தேவதைகள் உங்களை மறு உலகில் சந்தித்திருப்பார்கள். என்னவோ கன்றுக் குட்டி போலத் துள்ளி வருகிறாயே, வாலைக் கிளப்பிக் கொண்டு?'' என அவளைக் கடிந்துகொண்டான் கமாண்டர்.

அவள் மனத்தாங்கல் அடைந்தாள். அடேயப்பா, அவள் முகம் குப்பென்று சிவப்பேறித் தகதகத்தது—மேமாதக் காலைபோல. ஆனால் வேறு வழி என்ன: கற்பித்தாக வேண்டுமே.

''களைத்துப் போனீர்களோ?''

''நன்றாய்க் கேட்டீர்களே!''

இப்படி வெடுக்கென்று பதில் சொன்னவள் செம்பட்டைத் தலையள். அஸ்யானினாவை அவன் கடிந்து கொண்டதில் அவளுக்குக் கோபம்.

''அப்படியானால் நல்லது'' என்று சமாதானப்படுத்தும் குரலில் கூறினான் வஸ்கோவ். ''வழியில் என்ன கவனித்தீர்கள்? ஒவ்வொருவராகச் சொல்லுங்கள். முதலில் ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானினா சொல்லட்டும்.''

''எப்படிக் கிடைக்கும், நீங்களே சொல்லுங்கள்...''

''ஆமாம்...'' வஸ்கோவ் இன்னொரு முறை ஓரக் கண்ணால் பார்த்தான். அவளுக்கு மனத்தாங்கல் ஏற்படுமோ என்று சிந்தித்தான்.

''தாயார் தகப்பனார் யூதர்களோ?''

''அதுதான் தெரிகிறதே.''

''தெரிகிறதேயாம்...'' கமாண்டர் கோபத்துடன் முகம் சுளித்தான். ''தெரிந்த விஷயமாய் இருந்தால் கேட்டிருக்கவே மாட்டேனே.''

மொழிபெயர்ப்பாளி பேசாதிருந்தாள். கரடு முரடான கித்தான் காலணிகளை ஈரப் புல்மேல் அடித்தவாறு நடந்து கொண்டே புருவத்தை நெரித்தாள். ஓசையின்றிப் பெரு மூச்சு விட்டாள்.

''ஒரு வேளை தப்பி வெளியேறி இருப்பார்கள்...''

அந்தப் பெருமூச்சு வஸ்கோவின் இதயத்தைத் தாக்கியது. ஐயோ, சிட்டுக்குருவி, மாய்ந்து போவாய் நீ. இந்தத் துயரத்தைத் தாங்க உனக்கு வலு ஏது? இந்தப் பாழும் யுத்தத்தை வாய்கொண்ட மட்டும் ஆபாச வசவுகளைப் பொழிந்து திட்டினால் அப்பாடா என்று இருக்கும். அதே கையோடு, பெண்களைத் தேட்டக் குழுவில் நியமித்த அந்த மேஜரையும் சவர்க்காரக் கரைசலில் போட்டு அலசி எடுத்தால் மனதுக்கு இதமாய் இருக்கும். அதற்குப் பதிலாக எப்பாடு பட்டாவது புன்சிரிப்பை உதடுகளுக்குக் கொண்டுவர வேண்டி இருக்கிறது.

''குர்விச் எங்கே, மூன்று தரம் வாத்துக் கத்தல் கத்து!''

''எதற்காக?''

''போர் ஆயத்தத்தைச் சரிபார்ப்பதற்காக. எங்

கே, கற்றுக் கொடுத்தேனே, மறந்துவிட்டாயா?''

சட்டென்று அவள் புன்னகைத்தாள். விழிகளில் உயிரொளி சுடர்ந்தது.

''இல்லே, மறக்கவில்லே!''

வாத்துக் கத்தல் என்னவோ வாய்க்கவே இல்லே தான்: வெறும் குறும்புச் சேட்டை. நாடக மன்றத் தில் போல. ஆனுலும் முன்னணிப் பிரிவினரும் பின் னணிப் பிரிவினரும் அவனிடம் வரவேண்டும் என் பதைப் புரிந்து கொண்டார்கள். அஸ்யானிஞவோ, துப்பாக்கியைக் கையில் பிடித்தவாறு ஓட்டமாக ஓடி வந்தாள்:

''என்ன நடந்தது?''

''ஏதாவது நடந்திருந்தால் இதற்குள் தேவதை கள் உங்களே மறு உலகில் சந்தித்திருப்பார்கள். என்னவோ கன்றுக் குட்டி போலத் துள்ளி வரு கிருயே, வாலேக் கிளப்பிக் கொண்டு?'' என அவளேக் கடிந்துகொண்டான் கமாண்டர்.

அவள் மனத்தாங்கல் அடைந்தாள். அடேயப்பா, அவள் முகம் குப்பென்று சிவப்பேறித் தகதகத்தது —மேமாதக் காலேபோல. ஆனுல் வேறு வழி என்ன: கற்பித்தாக வேண்டுமே.

''களேத்துப் போனீர்களோ?''

''நன்ருய்க் கேட்டீர்களே!''

இப்படி வெடுக்கென்று பதில் சொன்னவள் செம் பட்டைத் தலேயள். அஸ்யானிஞவை அவன் கடிந்து கொண்டதில் அவளுக்குக் கோபம்.

''அப்படியாஞல் நல்லது'' என்று சமாதானப் படுத்தும் குரலில் கூறிஞன் வஸ்கோவ். ''வழியில் என்ன கவனித்தீர்கள்? ஒவ்வொருவராகச் சொல் லுங்கள். முதலில் ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானிஞ சொல்லட்டும்.''

''அப்படி ஒன்றும் இல்லை'' என்று முணுமுணுத்தாள் அஸ்யானிஞ. ''திருப்பத்தில் ஒரு கிளை முறிந்திருந்தது.''

''சபாஷ், சரி. நல்லது, பின்னணிப் பிரிவினர் சொல்லுங்கள். கமெல்கோவா.''

''ஒன்றும் கண்ணில் படவில்லை. எல்லாம் ஒழுங்காகத்தான் இருந்தது.''

''புதர்களில் இருந்த பனித்துளிகள் சிந்தி இருந்தன'' என்று அவசரமாகக் கூறிஞள் லீஸா. ''வலப்புறம் அப்படியே இருந்தன. ஆஞல் பாதையின் இடப்புறம் சிந்தி இருந்தன.''

''இது அல்லவா பார்வை!'' என்று மன நிறைவுடன் பாராட்டிஞன் சார்ஜண்டு மேஜர். ''சபாஷ், செம்படைவீரப் பெண் பிரீச்கிஞ. இவை தவிர, பாதையில் இரண்டு தடங்கள் தெரிந்தன. ஜெர்மன் பாரஷூட் படையினர் போட்டுக் கொள்ளும் வகையான ரப்பர் பூட்சுகளின் தடங்கள். பூட்சு நுனிகளைக் கொண்டு பார்த்தால் அவர்கள் சதுப்பு நிலத்தைச் சுற்றிப் போகிருர்கள் என்று தெரிகிறது. போகட்டும் தாராளமாக, ஏனென்ருல் நாம் இந்தச் சதுப்பு நிலத்தைக் குறுக்காகக் கடப்போம். இப்போது ஒரு பதினைந்து நிமிடம் சிகரேட்டு புகைக்கலாம், ஒழுங்குபடுத்திக் கொள்ளலாம்...''

பெண்கள் கெக்கலித்தார்கள், அவன் ஏதோ அசட்டுத் தனமாகப் பேசிவிட்டது போல. இதுவோ உத்தரவு. விதிகளில் பதியப் பட்டிருந்தது. வஸ்கோவ் முகம் சுளித்தான்.

''இளிக்க வேண்டாம்! இங்கும் அங்கும் ஓடிச் சாடவும் கூடாது! அவ்வளவுதான்!''

சாமான் மூட்டைகளை எங்கு வைக்க வேண்டும்,

சுருட்டிக் கட்டிய மேல் கோட்டுக்களை எங்கே வைக்க வேண்டும், துப்பாக்கிகளை எங்கே நிறுத்த வேண்டும் என்று காட்டிவிட்டுப் படையினரைக் கலைந்துபோக அனுமதித்தான். எல்லோரும் விர்ட் டென்று புதர் மறைவில் பாய்ந்தார்கள், சுண்டெலி கள் போல.

சார்ஜண்டு மேஜர் கோடரியை எடுத்து, பட்ட மரங்களிலிருந்து ஆறு வலுவான கொம்புகளை வெட்டி வீழ்த்திய பின்னரே சாமான்களின் பக் கத்தில் உட்கார்ந்து புகை பிடித்தான். விரைவில் எல்லோரும் அங்கே குழுமினார்கள். ஏதோ கசமுச வென்று பேசிக் கொண்டார்கள், கண் சாடைகள் செய்து கொண்டார்கள்.

''இப்போது கவனமாய் இருக்க வேண்டும்'' என்றான் கமாண்டர். ''நான் முன்னே நடப்பேன். நீங்கள் ஒன்றாக என் பின்னே அடியொற்றி நடக்க வேண்டும். இங்கே இடப்புறமும் வலப்புறமும் புதைசேறு. அம்மா என்பதற்குள் மூழ்கிவிடுவீர்கள். ஆளுக்கு ஒரு கொம்பை எடுத்துக்கொள்ளுங்கள். அடி எடுத்து வைப்பதற்கு முன்னே கொம்பினால் சேற்றுத் தரையைச் சரி பார்த்துக் கொள்ளுங்கள். கேள்வி உண்டா?''

இந்தத் தடவை பேசாதிருந்தார்கள். செம் பழுப்பு முடியள் தலையை மட்டும் குலுக்கினாளே தவிர வாய் திறக்கவில்லை. சார்ஜண்டு மேஜர் எழுந்து சிகரெட்டுத் துணுக்கைப் பாசியில் போட்டுக் காலால் அழுத்தி அணைத்தான்.

''நல்லது, யாருக்கு பலம் அதிகம்?''

''எதற்கு?'' என்று தயக்கத்துடன் கேட்டாள் லீஸா பிரீச்கினா.

''பிரீச்கிஞ மொழிபெயர்ப்பாளியின் சாமான் மூட்டையை எடுத்துக்கொள்வாள்.''

''எதற்காக?'' என்று கீச்சிட்டாள் சோனியா.

''எதற்காக, என்ன என்று கேட்கக்கூடாது!.. கமெல்கோவா!''

''இதோ இருக்கிறேன்.''

''காலியா செத்வெர்த்தாக்கின் சாமான் மூட்டையை எடுத்துக் கொள்க!''

''காலியா, கையோடு துப்பாக்கியையும் கொடு...''

''வாயாடிகளா! சொன்னதைச் செய்யுங்கள். சொந்தத் துப்பாக்கியை அவரவர் தாமே எடுத்து வர வேண்டும்...''

இப்படிக் கத்திய வஸ்கோவ் வருத்தம் அடைந்தான். கூடாது, இப்படிச் செய்திருக்கக் கூடாது! கூச்சல் போட்டு உணர்வு ஏற்படுத்த முடியுமா? தொண்டை கிழிய வீரிடலாம், ஆனுல் அதனுல் வேலே நடந்து விடாது. எனினும் பெண்கள் மட்டு மீறிப் பேசத் தலேப்பட்டார்கள். காச்சுமூச்சென்று. படைவீரனுக்கு இந்தக் காச்சுமூச்சு வயிற்றில் குத்திட்டி பாய்வதில் முடியும். இது மட்டும் நிச்சயம்...

''திருப்பிச் சொல்லுகிறேன், தவறு ஏற்படாமல் இருப்பதற்காக. என் பின்னே அடியொற்றி நடக்க வேண்டும். கொம்பால் சேற்றை...''

''ஒரு கேள்வி கேட்கலாமா?''

அட கடவுளே, நீயே சரண்! கொஞ்சம் பொறுக்க முடியாது இவர்களால்.

''என்ன வேண்டும், கமெல்கோவா?''

''கொம்பால் என்றீர்களே, எந்தக் கொம்பால்?''

கேலி செய்கிறாள் செம்பட்டைத் தலைச்சி. கண்களைப் பார்த்தாலே தெரிகிறது. ஆபத்தான கண்கள், கசங்கள் போல.

''உங்கள் கைகளில் இருப்பது என்ன?''

''ஏதோ தடி...''

''இதுவேதான் கொம்பு. புரிகிறதா?''

''இப்போது புரிந்து விட்டது. தால்.''

''என்ன அது, தால்?''

''அப்படி ஓர் அகராதி, தோழர் சார்ஜண்டு மேஜர். வழக்குச் சொல் அகராதி.''

''மேனியா, நிறுத்து!'' என்று கத்தினாள் அஸ்யாணினா.

''ஆமாம், வழி ஆபத்தானது இங்கே கேலியும் கிண்டலும் உதவாது. நடை வரிசை இப்படி: நான் முன்னே. என்னை அடுத்து குர்விச், பிரீச்கினா, கமெல் கோவா, செத்வெர்த்தாக். ஜூனியர் சார்ஜண்டு அஸ்யாணினா எல்லோருக்கும் பின்னே. கேள்விகள் உண்டா?''

''அங்கே ஆழமோ?''

காலியா செத்வெர்த்தாக் கேட்டாள். புரியக் கூடியதுதான். இவள் இருக்கும் உயரத்துக்கு வாளி கூடக் கிணற்றுக்குச் சமானம்.

''சில இடங்களில் இதுவரை இருக்கும்.... அதாவது, இதுவரை. உங்களுக்கு இடுப்புவரை என்று வைத்துக் கொள்ளுங்களேன். துப்பாக்கிகளை ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ளுங்கள்.''

மளமளவென்று முழங்கால் ஆழத்தில் இறங்கி நடந்தான். புதைசேறு நளுக்கிட்டது. வில் வைத்த மெத்தை மேல் நடப்பவன் போல அசைந்தாடிய

வாறு மெதுவாக நகர்ந்தான். படையினர் உடன் வருவதை அவர்கள் மூச்சிழுப்பதையும் பயத்துடன் கிசுகிசுப்பதையும் கொண்டு உணர்ந்தவாறு திரும்பிப் பாராமல் நடந்தான்.

ஈரிப்புள்ள, ஓட்டம் அற்ற காற்று சதுப்பு நிலத்துக்கு மேலே பரவி நின்றது. விரட்ட விரட்டப் போகாத வசந்தகாலக் கொசுக்கள் படையினரின் சூடேறிய மேனிகளுக்கு உயரே படலம் படலமாக வட்டமிட்டன. அழுகிய புல், மட்கும் நீர்ப்பூண்டுகள், சதுப்பு நிலம் ஆகியவற்றின் கடுமையான துர் நாற்றம் அடித்தது.

தடியின் மீது முழு பாரத்துடன் சாய்ந்தவாறு, உள்ளிழுக்கும் குளிர்ந்த புதை சேற்றிலிருந்து கால்களைச் சிரமப்பட்டு வெளியில் எடுத்தார்கள் பெண்கள். நனைந்த ஸ்கர்ட்டுகள் பிட்டங்களில் ஒட்டிக் கொண்டன, துப்பாக்கி அடிக்கட்டைகள் சேற்றில் இழுபட்டன. ஒவ்வோர் அடி எடுத்து வைப்பதும் அரும் பாடாய் இருந்தது. வஸ்கோவ், சிறு மேனியளான காலியாவுக்கு இசைய வேகத்தை மட்டுப் படுத்திக் கொண்டு மெதுவாக நகர்ந்தான்.

புதை சேற்றின் நடுவே இருந்த திட்டை நோக்கி நடந்தான் வஸ்கோவ். திட்டின் மேல் உயரம் குறைந்த, ஈரிப்பால் கரடு தட்டிய இரண்டு தேவதாரு மரங்கள் வளர்ந்திருந்தன. கமாண்டர் அவற்றின் மீதிருந்து பார்வையை அகற்றவில்லை. கோணிய அடி மரங்களின் ஊடே தென்பட்ட மங்கிய ஒளியில் அப்பால் இருந்த பிர்ச் மரத்தைக் கண்டவாறு நடந்தான். ஏனென்றால் வலப்புறமும் இடப்புறமும் கடவை வழி இல்லை.

''தோழர் சார்ஜண்டு மேஜர்!''

அட பீடை!.. கமாண்டர் தடியை இன்னும் உறுதியாக ஊன்றி, சிரமத்துடன் திரும்பிப் பார்த்தான்: அவன் எண்ணியது சரிதான். பெண்கள் ஒரு வரிடமிருந்து ஒருவர் விலகி நின்ருர்கள்.

''நிற்கக் கூடாது! நிற்கக் கூடாது, உள்ளே இழுத்து விடும்!..''

''தோழர் சார்ஜண்டு மேஜர், சோடு காலிலிருந்து கழன்று விட்டது!..''

வால் புறம் இருந்து இப்படிக் கத்திஞள் காலியா. அவளுடைய உடல் சிறு திட்டுப் போலத் துருத்தியிருந்தது, ஸ்கர்ட் தெரியவில்லே. அஸ்யானிஞ பக்கத்தில் போய் அவளேத் தாங்கலாகப் பிடித்துக் கொண்டாள். தடியால் புதை சேற்றைத் துழாவினுள். சோட்டைத் தேடிஞளோ?

''கிடைத்ததா?''

''இல்லே!''

ழேனியா தடியை மாற்றிப் போட்டு, விலாப் புறம் அசைந்தாள். நல்ல வேளேயாக வஸ்கோவ் சமயத்தில் பார்த்துவிட்டான். நெற்றி நரம்புகள் புடைக்கக் கூச்சல் இட்டான்:

''எங்கே? நில்லு!''

''நான் உதவிக்கு...''

''கூடாது, நில்லு! பின்னே திரும்ப வழி கிடையாது!''

அட கடவுளே, இவர்களோடு மல்லுக்கட்டியதில் அவனே ஒரேயடியாகத் தடுமாறிப் போனுன், ஒரு சமயம் நிற்கக் கூடாது என்பதும் மறு சமயம் நில்லு என்பதுமாக. இவர்கள் மிரண்டு போய்க் கிலி கொள்ளாமல் இருக்க வேண்டுமே. புதை சேற்றில் கிலி கொள்வது சாவுக்குச் சமம் ஆயிற்றே.

''அமைதியாக நடவுங்கள், பதற்றம் மட்டும் கொள்ளாதீர்கள். திட்டு இதோ கிட்டத்தில் வந்து விட்டது. அங்கே இளைப்பாறுவோம். சோடு கிடைத்ததா?''

''இல்லை!.. கீழே இழுக்கிறது, தோழர் சார் ஜண்டு மேஜர்!''

''நடக்க வேண்டும்! இது கெட்டி இல்லாத தரை. வெகு நேரம் நிற்கக் கூடாது.''

''அப்புறம் சோடு என்ன ஆகும்?''

''இப்போது அதைக் கண்டுபிடிக்க முடியுமா? முன்னே நடவுங்கள்! முன்னே, என்னைத் தொடர்ந்து!..'' அவன் திரும்பி, பின்னே பார்க்காமலே நடந்தான். ''அடி மேல் அடிவைத்து நடவுங்கள்! பின் தங்காதீர்கள்!..''

அவன் இப்படிக் கத்தியது வேண்டும் என்றே, படையினரை உற்சாகப்படுத்துவதற்காக. படையினர் உத்தரவைக் கேட்டு உற்சாகம் அடைவார்கள். இதை அவன் சொந்த அனுபவத்தால் அறிந்திருந்தான். மெய்யாகவே.

முடிவில் திட்டை அடைந்தார்கள். கடைசிச் சில மீட்டர் தூரத்தைக் கடந்த போது அவன் வெகுவாக அஞ்சினான்: அங்கே ஆழம் அதிகம். அடிகள் எடுத்து வைப்பது முடியாது. இந்தப் பாழும் குழம்பல் சேற்றை உடலால் விலக்கித் தள்ளிக் கொண்டு முன்னேற வேண்டும். இதற்கு பலமும் தேவை, திறமையும் தேவை. ஆனால் எல்லாம் நன்கு முடிந்தது.

திட்டின் அருகே நிற்க முடிந்த இடத்தில் வஸ்கோவ் தாமதித்தான். தன் படையினர் எல்லோரையும் கடந்து செல்லவிட்டு, திடமான தரையில் ஏறுவதற்கு உதவினான்.

''அவசரம் மட்டும் படாதீர்கள். அமைதியாக இருங்கள். இங்கே கொஞ்சம் இளைப்பாறுவோம்.''

பெண்கள் தீவை அடைந்து கரடு முரடான முந்திய ஆண்டுப் புல் மேல் விழுந்தார்கள். அவர்கள் மேனிகள் நனைந்து, சேறு அப்பி இருந்தன. மூச்சு திணறியது. காலியா செத்வெர்த்தாக் சோட்டை மட்டும் அல்ல, காலில் கட்டிக்கொள்ளும் பட்டித் துணியையும் சதுப்பு நிலத்துக்கு அர்ப்பணம் செய்திருந்தாள். ஒரு காலுறை மட்டும் அணிந்து சேற்றிலிருந்து வெளி வந்திருந்தாள். அதிலிருந்த ஓட்டையில் பெருவிரல் துருத்திக் கொண்டிருந்தது. குளிரால் அது நீலம் பாரித்திருந்தது.

''என்ன, படைவீரத் தோழர்களே, களைத்துப் போனீர்களோ?''

படையினர் பேசாதிருந்தார்கள். லீஸா மட்டும், ''ஆமாம், களைத்துப் போனேம்'' என்றாள்.

''நல்லது, கொஞ்சம் இளைப்பாறுங்கள். மேலே லேசாய் இருக்கும். உலர்ந்த பிர்ச் மரம் வரை போய் விட்டால் பாடு தீர்ந்தது.''

''உடம்பு கழுவிக்கொண்டால் நன்றாய் இருக்கும்'' என்றாள் அஸ்யாணிஞ.

''ஆற்றின் மறு பக்கம் சுத்தமான மணல் கரை. வேண்டுமானால் நீந்திக் குளியுங்கள். ஆடைகளை நடக்கும்போதே உலர்த்திக் கொள்ள வேண்டி இருக்கும்.''

காலியா பெருமூச்செறிந்தாள்.

''நான் சோடு இல்லாமல் என்ன செய்வேன்?'' என்று தயக்கத்துடன் கேட்டாள்.

''உனக்குக் மரப்பட்டைச் செருப்பு செய்து தருகிறேன். சதுப்பு நிலத்தைக் கடந்த பிறகு, இங்கே

''அமைதியாக நடவுங்கள், பதற்றம் மட்டும் கொள்ளாதீர்கள். திட்டு இதோ கிட்டத்தில் வந்து விட்டது. அங்கே இளைப்பாறுவோம். சோடு கிடைத்ததா?''

''இல்லே!.. கீழே இழுக்கிறது, தோழர் சார் ஜண்டு மேஜர்!''

''நடக்க வேண்டும்! இது கெட்டி இல்லாத தரை. வெகு நேரம் நிற்கக் கூடாது.''

''அப்புறம் சோடு என்ன ஆகும்?''

''இப்போது அதைக் கண்டுபிடிக்க முடியுமா? முன்னே நடவுங்கள்! முன்னே, என்னைத் தொடர்ந்து!..'' அவன் திரும்பி, பின்னே பார்க்காமலே நடந்தான். ''அடி மேல் அடிவைத்து நடவுங்கள்! பின் தங்காதீர்கள்!..''

அவன் இப்படிக் கத்தியது வேண்டும் என்றே, படையினரை உற்சாகப்படுத்துவதற்காக. படையினர் உத்தரவைக் கேட்டு உற்சாகம் அடைவார்கள். இதை அவன் சொந்த அனுபவத்தால் அறிந்திருந்தான். மெய்யாகவே.

முடிவில் திட்டை அடைந்தார்கள். கடைசிச் சில மீட்டர் தூரத்தைக் கடந்த போது அவன் வெகுவாக அஞ்சினுன்: அங்கே ஆழம் அதிகம். அடிகள் எடுத்து வைப்பது முடியாது. இந்தப் பாழும் குழம்பல் சேற்றை உடலால் விலக்கித் தள்ளிக் கொண்டு முன்னேற வேண்டும். இதற்கு பலமும் தேவை, திறமையும் தேவை. ஆனுல் எல்லாம் நன்கு முடிந்தது.

திட்டின் அருகே நிற்க முடிந்த இடத்தில் வஸ்கோவ் தாமதித்தான். தன் படையினர் எல்லோரையும் கடந்து செல்லவிட்டு, திடமான தரையில் ஏறுவதற்கு உதவினுன்.

''அவசரம் மட்டும் படாதீர்கள். அமைதியாக இருங்கள். இங்கே கொஞ்சம் இளைப்பாறுவோம்.''

பெண்கள் தீவை அடைந்து கரடு முரடான முந்திய ஆண்டுப் புல் மேல் விழுந்தார்கள். அவர்கள் மேனிகள் நனைந்து, சேறு அப்பி இருந்தன. மூச்சு திணறியது. காலியா செத்வெர்த்தாக் சோட்டை மட்டும் அல்ல, காலில் கட்டிக்கொள்ளும் பட்டித் துணியையும் சதுப்பு நிலத்துக்கு அர்ப்பணம் செய்திருந்தாள். ஒரு காலுறை மட்டும் அணிந்து சேற்றிலிருந்து வெளி வந்திருந்தாள். அதிலிருந்த ஓட்டையில் பெருவிரல் துருத்திக் கொண்டிருந்தது. குளிரால் அது நீலம் பாரித்திருந்தது.

''என்ன, படைவீரத் தோழர்களே, களைத்துப் போனீர்களோ?''

படையினர் பேசாதிருந்தார்கள். லீஸா மட்டும், ''ஆமாம், களைத்துப் போனோம்'' என்றாள்.

''நல்லது, கொஞ்சம் இளைப்பாறுங்கள். மேலே லேசாய் இருக்கும். உலர்ந்த பிர்ச் மரம் வரை போய் விட்டால் பாடு தீர்ந்தது.''

''உடம்பு கழுவிக்கொண்டால் நன்றாய் இருக்கும்'' என்றாள் அஸ்யானிறு.

''ஆற்றின் மறு பக்கம் சுத்தமான மணல் கரை. வேண்டுமானால் நீந்திக் குளியுங்கள். ஆடைகளை நடக்கும்போதே உலர்த்திக் கொள்ள வேண்டி இருக்கும்.''

காலியா பெருமூச்செறிந்தாள்.

''நான் சோடு இல்லாமல் என்ன செய்வேன்?'' என்று தயக்கத்துடன் கேட்டாள்.

''உனக்குக் மரப்பட்டைச் செருப்பு செய்து தருகிறேன். சதுப்பு நிலத்தைக் கடந்த பிறகு, இங்கே

அல்ல. பொறுப்பாயா?'' என்று இள நகை செய்தான் வஸ்கோவ்.

''பொறுப்பேன்.''

''கூர்கெட்டவள் நீ, காலியா'' என்று கோபத்துடன் சொன்னுள் ழேனியா. ''காலே எடுக்கும்போது விரல்களே மேற்புறம் வளேக்க வேண்டும்.''

''வளேக்கத்தான் செய்தேன். அப்படியும் சோடு கழன்று விட்டது.''

''குளிர்கிறது, பெண்களா.''

''நான் தொப்பலாக நனேந்துவிட்டேன்.''

''நான் நனேயவில்லே என்று நினேக்கிருயோ? ஒரு தரம் கால் பிசகிவிட்டது, சளப்பென்று உட்கார்ந்தேன் பாரு!..''

எல்லோரும் சிரித்தார்கள். அப்படியானுல் ஒன்றும் மோசமில்லே, சமாளித்துக் கொள்வார்கள் என்று அர்த்தம். பெண்பாலர் தாம் என்ருலும் இளமையுள்ளவர்கள். உடம்பிலே வலு ஏதோ இருக்கத்தான் செய்கிறது. காய்ச்சல் மட்டும் வராமல் இருக்க வேண்டும். தண்ணீர் பனிக் கட்டியாய்க் குளிர்கிறது...

வஸ்கோவ் இன்ஞெரு தரம் புகையை இழுத்தான், சிகரெட்டுத் துண்டைச் சேற்றில் எறிந்து விட்டு எழுந்தான்.

''அவரவர் கொம்புகளே எடுத்துக் கொள்ளுங்கள், படைவீரத் தோழர்களே. முந்திய வரிசையில் என் பின்னே நடவுங்கள். உடம்பு கழுவிக்கொள்வதும் வெயில் காய்வதும் எல்லாம் கரை சேர்ந்த பிறகு'' என்று உற்சாகமாகக் கூறிஞன்.

பின்பு வேரிலிருந்து நேரே பழுப்புச் சேற்றுக் குழம்பில் இறங்கிஞன்.

சதுப்பு நிலத்தின் இந்தப் பகுதியும் கடப்பதற்கு மிகக் கடினமாய் இருந்தது. இங்கே சேற்றுக் குழம்பு கூழ்போல இருந்தது. அது காலை வைத்தால் தாங்க வில்லை, அதில் நீந்தவும் முடியவில்லை. உடம்பால் அழுத்தி விலக்கிக்கொண்டு முன்னே போவதற்குள் தாவு தீர்ந்து போய்விட்டது.

''எப்படி, தோழர்களே?''

இவ்வாறு அவன் உற்சாகப்படுத்துவதற்காக, திரும்பிப் பாராமலே கத்தினான்.

''இங்கே அட்டைகள் உண்டோ?'' என்று மூச் சிரைக்கக் கேட்டாள் சோனியா.

அவள் அவனைத் தொடர்ந்து அவன் ஏற்படுத் திய வழியில் சென்றாள். எனவே அவளுக்கு முன் னேறுவது அவனை விட எளிதாய் இருந்தது.

''இங்கே ஒன்றும் கிடையாது. இது உயிர் இல் லாத இடம், சாவு மையம்'' என்றான் வஸ்கோவ்.

இடப்புறம் நீர்க் குமிழி கிளம்பியது. அது வெடித்தது. அதே சமயம் சதுப்பு நிலம் ஓசையுடன் மூச்சு விட்டது. பின்னால் எவளோ பயந்துபோய் ''ஐயோ'' என்று வீரிட்டாள். வஸ்கோவ் விளக் கினான்:

''சதுப்பு நில வாயு வெளி வருகிறது, பயப் படாதீர்கள். நாம் அதைக் கலவரப்படுத்தி விட் டோம்...'' சற்று சிந்தித்த பின் அவன் மேலும் சொன்னான்: ''இந்த மாதிரி இடங்களில் சொந்தக் காரன், அதாவது காட்டேரி, வசிப்பதாகக்கிழவர் கள் கதைப்பார்கள். இது வெறும்பொய்க் கதை என்பது தெரிந்த சேதி...''

அவனுடைய ''காவல் படையினர்'' ஒன்றும் பேசவில்லை. அவர்கள் திணறினார்கள், ஐயோ அப்பா

என்றார்கள், திக்கு முக்காடினார்கள். ஆனாலும் முன்னேறினார்கள். பிடிவாதமாக, வன்மத்துடன் முன்னேறினார்கள்.

சற்று நேரத்தில் முன்னேற்றம் எளிதாயிற்று. குழம்பல் அதிக நீர்ப்பும் தரை அதிக உறுதியும் கொண்டவை ஆயின. சில இடங்களில் சிறு திட்டுக்கள் கூடத் தென்பட்டன. சார்ஜண்டு மேஜர் வேண்டுமென்றே நடையை விரைவுபடுத்தாமல் இருந்தான். பிரிவினர் நெருங்கி வந்தார்கள். அவனை ஒட்டி நடந்தார்கள். பிர்ச் மரத்தை அனேகமாக ஒரே எட்டில் அடைந்துவிட்டார்கள். அப்பால் காடு தொடங்கிற்று. திட்டுக்களும் பாசித்திடல்களும் காணப்பட்டன. இது அற்ப வேலையாகத் தோன்றியது. தவிரவும் அடித்தரை வர வர உயர்ந்து கொண்டு போய், முடிவில் உலர்ந்த வெண்பாசி படர்ந்த பைன் மரச் சோலையாக அவர்கள் அறியாமலே மாறி விட்டது. அங்கே அவர்கள் எல்லோரும் சளசளக்கத் தொடங்கினார்கள், களிப்பு அடைந்தார்கள், கொம்புகளை வீசி எறிந்தார்கள். ஆனால் வஸ்கோவ் கொம்புகளை எடுத்து, சட்டென்று பார்வையில் பட்ட ஒரு தேவதாரு மரத்தின்மேல் எல்லாவற்றையும் சார்த்தி வைக்கச் சொன்னான்:

''வேறு யாருக்காவது பயன்படும்'' என்றான்.

அவன் அவர்களைக் களையாற விடவில்லை. வெறுங் காலுடன் இருந்த காலியாவிடம் கூட அவன் இரக்கம் காட்டவில்லை.

''செம்படைத் தோழர்களே, இன்னும் கொஞ்சந்தான் பாக்கி. சிரமத்தைப் பாராமல் முன்னேறுங்கள். ஆற்றின் கரையில் இளைப்பாறுவோம்.''

எல்லோரும் திட்டின் மேல் ஏறினார்கள். தேவ

தாரு மரங்களின் ஊடாக ஆற்றுப் பெருக்கு பார் வையில் பட்டது. பொன் மணல் கரைகளின் நடுவே கண்ணீர் போன்று தெளிந்த நீரோட்டம்.

''ஹுர்ரா!'' என்று ஆர்ப்பரித்தாள் செம் பழுப்பு முடியள் ழேனியா. ''மணல் கரை, பெண் களா!''

பெண்கள் ஏதோ உவகை பொங்கக் கத்தி, சரிவு வழியே இறங்கி ஆற்றுக்கு ஓடிக் கொண்டே சுருட் டிய மேல்கோட்டையும் சாமான் மூட்டைகளையும் எறிந்தார்கள்.

''நிறுத்துங்கள்!'' என்று கூப்பாடு போட்டான் கமாண்டர். ''விரைப்பாக நிற்க!''

எல்லோரும் அங்கங்கே நின்று விட்டார்கள். வியப்புடனும் ஓரளவு மனத்தாங்கலுடனும் கூட, அவனைப் பார்த்தார்கள்.

''மணல்!..'' என்று கோபத்துடன் பேச்சைத் தொடர்ந்தான் சார்ஜண்டு மேஜர். ''நீங்கள் என் னடா என்றால் துப்பாக்கிகளை இதில் செருகுகிறீர் களே, படையினரே. துப்பாக்கிகளை மரத்தில் சார்த் துங்கள், தெரிந்ததா? சாமான் பை, மேல் கோட்டுச் சுருள் எல்லாம் ஒரே இடத்தில் இருக்க வேண்டும். குளித்து ஒழுங்குபடுத்திக் கொள்ள நாற் பது நிமிட அவகாசம் தருகிறேன். நான் புதர்களின் மறு புறம் குரல் எட்டும் தூரத்தில் இருப்பேன். ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானினா, ஒழுங்குக்கு நீங்கள் பொறுப்பாளி.''

''உத்தரவு, தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''அவ்வளவுதான். நாற்பது நிமிடங்களில் தயா ராய் இருங்கள். உடைகள் அணிந்து, சோடுகள் மாட்டி, துப்புரவாக இருக்க வேண்டும்,''

அவன் ஆற்ருேட்டத்தின் திக்கில் இன்னும் சற்று தூரம் சென்ருன். மணல் தரையும் ஆழமான நீரும் சுற்றிலும் புதர்களும் உள்ள ஓர் இடத்தைத் தெரிந் தெடுத்தான். தோட்டாவாரையும் சோடுகளையும் கழற்றி வைத்து விட்டு உடைகளைந்தான். எங்கோ பெண்களின் தெளிவற்ற பேச்சுக் குரல்கள் கேட் டன: சிரிப்பும் ஓரிரு சொற்களுமே வஸ்கோவின் செவிகளை எட்டின. ஒருவேளை இந்தக் காரணத் திஞல்தான் போலும் அவன் இடை விடாது உற்றுக் கேட்ட வண்ணம் இருந்தான்.

முதலில் வஸ்கோவ் சுருக்குச் சராயையும் பட்டித் துணிகளையும் உள்ளாடைகளையும் கசக்கி அலசி, முடிந்தவரை ஒட்டப் பிழிந்து உலர்வதற் காகப் புதர்கள் மேல் பரப்பிஞன். பிறகு சோப்பு தேய்த்துக் குளித்தான், சற்று நேரம் ஆழ்ந்து மூச்சி ழுத்தான், கரையில் சிறிது நடந்து சித்த உறுதி யைத் தன்னுள் நிறைத்துக் கொண்டான். பின்பு கரை மேட்டிலிருந்து கசத்தில் குதித்தான். நீரில் மூழ்கி வெளி வந்தவன், மூச்சுவிட முடியாமல் திண றிஞன். பனிக்கட்டியாய்ச் சில்லிட்டிருந்த தண்ணீர் நெஞ்சை இறுக்கியது. பெருங் குரல் எடுத்துக் கத்த வேண்டும் போல இருந்தது. ஆஞல் தன் ''காவல் படையினர்'' திகிலடைவார்களோ என்று அஞ்சி அந்த ஆசையை அடக்கிக் கொண்டான். அனேக மாக வாய்க்குள்ளாகக் கமறிக் கனைத்துக் கொண் டான். அதஞல் அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. சோப்பைக் கழுவிப் போக்கி விட்டுக் கரை திரும் பிஞன். சுரசுரப்பான துவாலையால் உடம்பு சிவக்கத் துவட்டிக்கொண்ட பிறகே, அப்பாடா என்று பெரு

மூச்சு விட்டு, மறுபடி குரல்களை உற்றுக் கேட்கலானான்.

அங்கே பெண்கள் பொழுதுபோக்கு அறைகளில் போலப் பலகுரல்களில் சளசளத்துக் கொண்டிருந்தார்கள்—அவரவர் தனித் தனி இணைகளாக. சிரித்தது மட்டும் சேர்ந்து சிரித்தார்கள். காலியா மகிழ்ச்சி பொங்கக் கூச்சலிட்டாள்:

''ஓ, ழேனியா, ஆ, ழேனியா!''

''முன்னே மட்டுமே!'' என்று ழேனியா திடீரென்று கத்தினாள். புதர்களுக்கு மறு புறம் தண்ணீர் அலையடித்துத் தளம்பியதை சார்ஜண்டு மேஜர் செவிமடுத்தான்.

''அடே, நீந்திக் குளிக்கிறார்களே...'' என்று மரியாதையுடன் எண்ணினான்.

உவகை பெருக்கெடுக்கும் கீச்சுக் குரல் மற்ற எல்லாக் குரல்களையும் ஒரேயடியாக அமுக்கிவிட்டது. நல்ல வேளை தான், ஜெர்மானியர் தொலைவில் இருந்தார்கள். தொடக்கத்தில் இந்தக் கீச்சுக் குரலின் அர்த்தம் என்ன என்று புரிந்து கொள்ள முடியவில்லை. அப்புறம் அஸ்யானினா கடுமையான குரலில் அதட்டினாள்:

''ழேனியா, கரை திரும்பு! இக்கணமே!..''

வஸ்கோவ் புன்னகையுடன் பருத்த சிகரெட்டு சுருட்டி, பற்ற வைத்துக் கொண்டு, முதுகில் வெயில் படும்படி உட்கார்ந்து அவசரம் இன்றித் திருப்தியுடன் புகைக்கலானான்.

நாற்பது நிமிடங்களில் துணிகள் உலரவில்லை. மேலும் காத்திருப்பதோ, முடியாததாய் இருந்தது. ஆகவே வஸ்கோவ் குளிரால் உடம்பை நெளித்துக் குறுக்கியவாறு ஈர உள்கால்சட்டையையும் சுருக்குச்

சராயையும் மாட்டிக் கொண்டான். நல்ல வேளை யாக அதிகப்படியாக இரண்டு பட்டித் துணிகள் கொண்டு வந்திருந்தான். அவற்றைச் சுற்றிக் கொண்டு உலர்ந்த கால்களை சோடுகளில் நுழைத் தான். சீருடுப்பைப் போட்டு இடைவாரால் இறுக்கிக் கொண்டு சாமான்களை எடுத்தான்.

''நீங்கள் தயாரா, படைவீரத் தோழர்களே?'' என்று உரக்கக் கத்தினுன்.

''கொஞ்சம் பொறுங்கள்!''

தெரியுமே அவனுக்கு! வஸ்கோவ் வாய்க்குள் சிரித்துக் கொண்டான், தலையை அசைத்தான். குத்த லாக ஏதோ சொல்ல வாய் எடுத்தான், அதற்குள் அஸ்யானிஞ மறுபடி கூவினுள்:

''வாருங்கள்! வரலாம்!''

பதவியில் பெரியவனைப் பார்த்தா ''வரலாம்!'' என்று கத்துகிருர்கள் படையினர்! அழகுதான்! இரா ணுவ விதிகளைக் கேலி செய்வதுபோல் அல்லவா இருக்கிறது இது! ஒழுங்கீனம்.

ஆனல் இப்படி அவன் நினைத்தது சும்மா தான். ஏனென்ருல் குளித்து இளைப்பாறியபின் கமாண் டரின் உள்ளத்தில் மேதினக் களிப்பு குடி கொண் டிருந்தது. தவிர, படையினர் கச்சிதமாக உடை யணிந்து, துப்புரவாக, புன்னகையுடன் அவனை எதிர்பார்த்திருந்தார்கள்.

''எப்படி, செம்படைவீரத் தோழர்களே? எல் லாம் சரியாய் இருக்கிறதா?''

''சரியாய் இருக்கிறது, தோழர் சார்ஜண்டு மே ஜர். இந்த ழேனியா நீந்திக் குளித்தாள்.''

''சபாஷ், ழேனியா. குளிரில் விறைத்துப் போன யோ?''

''சூடுபடுத்த இங்கே யார் இருக்கிறுர்கள்?''

''குறும்புக்காரி! நல்லது, படைவீரத் தோழர்களே. கொஞ்சம் சாப்பிட்டு விட்டுப் புறப்படுவோம், கால்கள் மரத்துப் போவதற்குள்.''

ரொட்டியும் உப்பிலிட்ட மீனும் சாப்பிட்டார்கள். ஊட்டம் உள்ள உணவை சார்ஜண்டு மேஜர் இப்போதைக்குத் தொடவில்லே. பின்பு இந்தக் கூர் கெட்டவள் காலியாவுக்கு மரப்பட்டைச் செருப்பு அணிவித்தார்கள். சேமிப்பில் இருந்த பட்டித் துணியைச் சுற்றி அதன் மேல் இரண்டு கம்பளிக் காலுறைகளே (இவை வீட்டுக்காரி தானே பின்னி அவனுக்குப் பரிசளித்திருந்தவை) மாட்டினுர்கள். பிர்ச் மரப் பசும் பட்டையைக் கொண்டு வஸ்கோவ் பாதக் காப்பு தயாரித்து மாட்டி, காயத்துக்குக் கட்டும் துணியை அதன் மேல் சுற்றி இறுக்கினுன்.

''சரியாய் இருக்கிறதா?''

''ரொம்ப. நன்றி, தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''சரி, கிளம்புவோம், படைவீரத் தோழர்களே. நாம் இன்னும் சுமார் ஒன்றரை மணி நடக்க வேண்டும். பிறகு அங்கே இடத்தைப் பார்வையிட வேண்டும், விருந்தாளிகளே எப்படி, எங்கே சந்திப்பது என்று ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்...''

அவன் விரைவாக நடக்கும்படி பெண்களேத் தூண்டினுன்: ஸ்கர்ட்டுகளும் பிற உடைகளும் வழியிலேயே நன்ருக உலர்வது அவசியமாய் இருந்தது. ஆனுல் பெண்கள் பரவாயில்லே. மனம் சோராமல் உற்சாகமாய் இருந்தார்கள். கொஞ்சம் முகம் சிவந்தார்கள், அவ்வளவுதான்.

''எங்கே, முயன்று பார்ப்போம், படைவீரத்

தோழர்களே! என் பின்னே வாருங்கள், ஓட்டமாக!..''

இவ்வாறு கூறிப் பாய்ந்து ஓடினான். மூச்சு தாங்கியவரை ஓடிய பின் மெது நடைக்கு மாறினான், மூச்சு வாங்க அவகாசம் கொடுத்தான். பிறகு, ''என் பின்னே வாருங்கள், ஓட்டமாக!'' என்று கூவி மறுபடி ஓட்டம் பிடித்தான்...

அவர்கள் வோப் ஏரியை அடைந்த போது சூரியன் மேற்கே சாயத் தொடங்கிவிட்டது. நீர் பாறைகளில் அமைதியாக அலையடித்துக் கொண்டிருந்தது. கரைகளில் தேவதாரு மரங்கள் மாலைக் காற்றில் வழக்கம்போல இரைந்து கொண்டிருந்தன. சார்ஜண்டு மேஜர் தொடுவானம் வரை பார்வையால் எவ்வளவோ துழாவியும் நீரில் படகு எதுவும் காணப்படவில்லை. மெல்லொலியுடன் வீசிய காற்றை அவன் எவ்வளவு முகர்ந்தும் புகை நெடி எங்கிருந்தும் வரவில்லை. போருக்கு முன்பும் இந்த இடங்களில் ஆள் நடமாட்டம் அவ்வளவாகக் கிடையாது. இப்போதோ, ஒரேயடியாக வெறிச் சோடிக் கிடந்தது. மரம் வெட்டுபவர்களும் வேட்டைக்காரர்களும் மீன் பிடிப்பவர்களும் கீல் வடிப்பவர்களும்—எல்லோருமே போர் முனை சென்று விட்டார்கள் போலும்.

''எவ்வளவு நிசப்தம்... கனவிலே போல'' என்று கிசுகிசுத்தாள் எப்போதும் கணீர்க் குரலில் பேசும் ழேனியா.

''ஏரியின் இடது கோடியிலிருந்து சினியூஹின் குன்றுத் தொடர் தொடங்குகிறது. தொடரின் மறு முனையில் இன்னோர் ஏரி இருக்கிறது. லெகோன் தவோ என்று அதற்குப் பெயர். ஒரு காலத்தில்

இங்கே ஒரு கிறித்துவத் துறவி வசித்தார். அவர் பெயர் லெகோன்த். நிசப்தத்தை நாடி வந்தார்'' என்று விளக்கினான் வஸ்கோவ்.

''நிசப்தம் இங்கே வேண்டிய அளவு இருக்கிறது'' என்று பெருமூச்சு விட்டாள் சோனியா.

''ஜெர்மானியர்களுக்கு உள்ளது ஒரு பாதை தான்: இந்த ஏரிகளின் நடுவே, குன்றுத் தொடர் வழியாகப் போகும் பாதை. மொட்டைக் குன்றுகளும் பெரும் பாறைகளும் அங்கே இருக்கின்றன என்பது நமக்குத் தெரிந்த சங்கதி. அந்தப் பாறைகளில் தான் நாம் அரண் செய்து கொள்ள வேண்டும், தலைமை அரணும் சேமிப்பு அரணும்—விதிகளில் சொல்லியிருப்பது போல. அரண்களைத் தெரிந்தெடுப்போம், சாப்பிடுவோம், இளைப்பாறுவோம், எதிர்பார்ப்போம். சரி தானே, செம்படை வீரத் தோழர்களே?''

செம்படைவீரத் தோழர்கள் பேசவில்லை. அவர்கள் எண்ணத்தில் ஆழ்ந்திருந்தார்கள்...

## 5

பிறந்தது முதலே வஸ்கோவ் தான் உண்மையில் இருந்ததைக் காட்டிலும் மூத்தவன் என்று உணர்ந்து வந்தான். பதினன்கு வயதுப் பையனாய் இருக்கையிலேயே அவன் குடித்தனப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிரா விட்டால் குடும்பம் வறுமையில் உழன்றிருக்கும். அதிலும் அது பஞ்சக் காலம். ஒழுங்கீனங்கள் மலிந்த காலம். குடும்பத்தில் எஞ்சி இருந்த ஒரே ஆண்மகன் அவன்தான். உண்ணவும் பருகவும் வகை செய்வதும் வாழ்க்கை வசதிகள்

ஏற்படுத்துவதும் அவன் பொறுப்பு ஆயிற்று. கோடை காலத்தில் வேளாண்மை செய்வான், குளிர்காலத்தில் விலங்குகளை வேட்டையாடுவான். மனிதர்களுக்கு விடுமுறை பெற உரிமை உண்டு என்பதை இருபது வயது ஆகும் தறுவாயில்தான் தெரிந்து கொண்டான். பிறகு இராணுவம்: அதுவும் விளையாட்டு அல்ல... இராணுவத்தில் திண்மைக்கு மதிப்பு. வஸ்கோவ் இராணுவத்தை மதித்தான். இந்தக் கட்டத்திலும் அவன் இளமை அடையவில்லை, மாறாக சார்ஜண்டு மேஜர் ஆகிவிட்டான். சார்ஜண்டு மேஜர் பெரியவன்தான். படையினருக்கு அவன் எப்போதும் முதியவன். அப்படி நினைப்பது வழக்கம் ஆகிவிட்டது.

பெதோத் யெவ்கிராபிச் வஸ்கோவ் தன் வயதை மறந்து போனான். அவன் அறிந்திருந்தது ஒன்றுதான்: சிப்பாய்களுக்கும் லெப்டினண்டுகளுக்கும் அவன் மூத்தவன், எல்லா மேஜர்களுக்கும் சமமானவன், எந்தக் கர்னலுக்கும் இளையவன். விஷயம் கீழ்ப்படுவது பற்றியது அல்ல, உலக உணர்வு பற்றியது.

அதனால்தான் தன் தலைமையில் பணியாற்ற வந்த பெண்களையும் அவன் ஒரு தலைமுறை முதியவன் போன்று நோக்கினான். தான் உள்நாட்டுப் போரில் பங்கு கொண்டவன் போலும் உள்நாட்டுப் போரில் அருஞ் செயல்கள் ஆற்றிய மக்கள் வீரர் சப்பாயெவுடன் லிபீஷென்ஸ்க் நகர் அருகே தேநீர் பருகியவன் போலவும் நடந்து கொண்டான். அவனுடைய தனிப்பட்ட மனப்பாங்கோ, அவன் மேற்கொண்ட ஏதேனும் சபதமோ அல்ல, இயற்கையே, அவனுடைய சார்ஜண்டு மேஜர் பதவியின் தன்மை

யே அவன் இப்படி நடந்து கொண்டதற்குக் காரணம்.

தாம் உள்ள வயதிற்கு மூத்தவஞக நடந்து கொள்கிறேம் என்ற எண்ணம் வஸ்கோவின் மனத்தில் எழுந்ததே கிடையாது. அமைதியும் வெளிச்சமும் கொண்ட இந்த இரவில்தான் சந்தேகத்துக்கு இடமான ஏதோ உணர்ச்சி அவனுக்குள் உயிர்த்தது.

ஆனல் அப்போது நள்ளிரவு ஆவதற்கு நிறைய நேரம் பாக்கி இருந்தது. அவர்கள் அரண்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டிருந்தார்கள். அவனுடைய படையினர் வெள்ளாடுகள் போலப் பாறைக்குப் பாறை தாவிஞர்கள். அவனும் திடீரென்று அவர்களோடு தாவத் தொடங்கிஞன். தான் லாகவமாகத் தாவியதில் அவன் வியப்பு அடைந்தான். ஆனல் உடனே முகம் சுளித்து, நிதானமாக நடக்கவும் பாறைகள் மேல் மூன்று இடங்களில் காலை வைத்துப் படிப்படியாக ஏறவும் தொடங்கிஞன்.

ஆனல் முக்கியமானது இது அல்ல. அவன் அருமையான இடத்தை அரணுகத் தெரிந்தெடுத்தது தான் முக்கியமானது. அது ஆழமானது, பாறைகளின் மறைவில் வரப் போக வழிகள் கொண்டது. அங்கிருந்து காடுமுதல் ஏரிவரை பார்வையிட முடிந்தது. ஏரி நீர் ஓரமாக ஒன்றேடொன்று பொருந்திய மொட்டைக் குன்றுகள் அதன் நெடுகிலும் நெருக்கமாக நின்றன. கரையோரமாக ஒரு குறுகிய திறந்த பகுதி மட்டுமே செல்ல வழி விட்டிருந்தது. ஏதாவது நேர்ந்தால் ஜெர்மானியர் இந்தப் பகுதி வழியாகக் குன்றுத் தொடரைச் சுற்றி வர ஒரு மூன்று மணி

நேரம் தேவைப்படும். அவனே, பாறைகளின் இடை வழியே நேராகப் பின்வாங்கி, பகைவர்கள் நெருங்குவதற்கு வெகு நேரம் முன்பே சேமிப்பு அரணுக்குப் பின் சண்டைக்குத் தயாராக இருந்து கொள்ள முடியும். அட இந்தச் சேமிப்பு அரணை அவன் இரட்டைப் பாதுகாப்பைக் கருதித் தெரிந்தெடுத்திருந்தான், ஏனென்றால் இரண்டே இரண்டு அழிவுப் படையினரை இங்கே, தலைமை அரண் அருகிலேயே சமாளிக்க அவனால் கட்டாயம் முடியும்.

இடத்தைத் தெரிந்தெடுத்த பின் வஸ்கோவ் முறைப்படி நேரத்தைக் கணக்கிட்டான். இந்தக் கணக்கீட்டின்படி ஜெர்மானியர் அருகே வருவதற்கு இன்னும் ஒரு நான்கு மணி நேரம் ஆகும் என்று தோன்றியது. எனவே, மூன்று உணவுக் கலங்களில் ஆறு பெயருக்கும் காணும் அளவு சூடான உணவு தயாரிக்கத் தன் படையினரை அனுமதித்தான். லீஸா பிரீச்கினா தானாகவே சமைப்பதற்கு முன் வந்தாள். அவளுக்கு உதவி செய்யும்படி இரண்டு பட்டணத்து நோஞ்சான்களையும் ஏவினான். நெருப்பு புகையக் கூடாது என்று உத்தரவிட்டான்.

''புகை தென்பட்டதோ, சமைத்ததை எல்லாம் உடனே நெருப்பில் கொட்டி விடுவேன். புரிந்ததா?''

''புரிந்தது'' என்று ஈனக் குரலில் சொன்னாள் லீஸா.

''இல்லை, புரியவில்லை, படைவீரத் தோழரே. என்னிடம் கோடரியைக் கேட்டு வாங்கி, உலர்ந்த கட்டைகளையும் சுள்ளிகளையும் வெட்டிக் கொண்டு வரும்படி உதவிக்காரிகளிடம் சொன்னாயானால்தான் உனக்குப் புரிந்ததாக அர்த்தமாகும். பாசிபிடிக்காத கட்டைகளாகப் பார்த்து வெட்டச் சொல்லு.

வெட்டும்போது விண்ணென்று தெறிக்க வேண்டும். அப்போது புகையாது, நெருப்பு மட்டுமே எரியும்.''

உத்தரவு என்னவோ கொடுத்தானே தவிர, அவர்களுக்கு உதாரணம் காட்டுவதற்காகத் தானே உலர்ந்த சுள்ளிகளை முறித்து நெருப்பு மூட்டினான். பிறகு, அஸ்யானினுவுடன் இடத்தைப் பார்வையிட்ட போது மறுபடி மறுபடி நெருப்பின் பக்கம் பார்த்தான். அது புகையவில்லை. பாறைகளுக்கு மேலே காற்று மட்டும் நடுங்கியது. ஆனால் அதைத் தெரிந்துகொள்வதற்குக் கூர்ந்து கவனிக்கப் பழகிய கண்கள் வேண்டும். ஜெர்மானியரிடமோ, அந்த மாதிரிக் கண்கள் இருக்க முடியாது.

மூன்று பெண்களும் சமையல் செய்து கொண்டிருந்த போது வஸ்கோவ், ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானினா, படையினள் கமெல்கோவா மூவரும் குன்றுத் தொடர் முழுவதையும் சுற்றிப் பார்த்தார்கள். அரண் இடங்களையும் துப்பாக்கிச் சண்டைப் பகுதிகளையும் திசை காட்டிக் குறிகளையும் திட்டப்படுத்திக் கொண்டார்கள். திசைகாட்டிகள் வரை உள்ள தூரத்தை வஸ்கோவ் காலடிகளால் தானே அளந்து துப்பாக்கிச் சண்டைக்கான வரைபடத்தில் குறித்துக் கொண்டான்—இராணுவ விதிகளுக்கு இணங்க.

இதற்குள் சாப்பாடு தயாராகிவிட்டது. நடையின்போது போலவே இருவர் இருவராகப் பிரிந்தார்கள். கமாண்டரும் சோனியா குர்விச்சும் ஒரு பாத்திரத்தில் சாப்பிட்டார்கள். அவள் கூச்சப்பட்டாள், கரண்டியை மட்டுமீறி ஓசைப்படுத்தினாள், உணவை அவனுக்கு விட்டு வைத்தாள். சார்ஜண்டு மேஜர் அவளைக் கடிந்து கொண்டான்:

''தோழர் மொழிபெயர்ப்பாளி, வீணுக ஓசைப் படுத்துகிருய். நான் வளர்ப்புப் பறவை அல்ல, புரிந் ததா, நீ எனக்கு இரை போடுவதற்கு. வஞ்சனே இல்லாமல் சாப்பிடு படைவீரன் செய்ய வேண்டிய முறைப்படி.''

''நான் வஞ்சனே இல்லாமல்தான் சாப்பிடுகி றேன்'' என்று குறுநகைத்தாள் அவள்.

''பார்க்கிறேனே! பஞ்சத்தில் அடிபட்டவள் போல ஒட்டி உலர்ந்திருக்கிருய்.''

''என் உடல் வாகு அப்படி.''

''உடல் வாகா? லீஸா பிரீச்கிஞைவைப் பார். நம் எல்லோருக்கும் உள்ள உடல் வாகு தான் அவளுக் கும். உடம்பை எப்படி வைத்துக் கொண்டிருக் கிருள்! பார்க்கவே கண்ணுக்கு இதமாய் இருக் கிறது...''

சாப்பிட்ட பிறகு தேநீர் பருகிஞர்கள். வஸ் கோவ் நடக்கும்போதே காட்டுப் பெர்ரி இலே பறித்து வைத்திருந்தான். அதைக் கொதிநீரில் வேக வைத்துப் பருகிஞர்கள். அரை மணி நேரம் களே யாறிய பின் கமாண்டர் அவர்களே வரிசையாக நிற்க வைத்தான்.

''போர் உத்தரவைக் கேளுங்கள்!'' என்று ஆடம் பரமாகத் தொடங்கிஞன். ஆனுல் இந்த உத்தவு இடும் முறை சரிதானு என்ற சந்தேகம் அவ னுக்கு உண்டாயிற்று. ''பலத்த ஆயுத சாதனங்கள் கொண்ட இரண்டு ஜெர்மன் பகைவர்கள், கீரவ்ஸ் காயா இருப்புப் பாதையையும் தோழர் ஸ்டாலி னின் பெயர் கொண்ட பெலமோர்ஸ்க்-பால்டிக் கால்வாயையும் இரகசியமாக அடையும் நோக்கத் துடன் வோப் ஏரிப் பிரதேசத்துக்கு வந்து கொண்

டிருக்கிறுர்கள். சினியூஹின் குன்றுத் தொடரில் தற்காப்பு ஏற்பாடுகள் செய்து பகைவர்களைச் சிறைபிடிக்கும் பொறுப்பு ஆறு பெயர் கொண்ட நம்முடைய படைப் பிரிவுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நமக்கு இடப்புறம் வோப் ஏரியும் வலப்புறம் லெகோன்தவோ ஏரியும் இருக்கின்றன...'' சார்ஜண்டு மேஜர் பேச்சை இடை நிறுத்திவிட்டு இருமித் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டான். உத்தரவை முன்னதாகக் காகிதத்தில் எழுதிக் கொண்டிருக்க வேண்டும் போலும் என்று குழப்பத்துடன் எண்ணமிட்டான். பின்பு பேச்சைத் தொடர்ந்தான்: ''நான் இப்படித் தீர்மானித்திருக்கிறேன்: தலைமை அரணில் இருந்து கொண்டு பகைவர்களைச் சந்திப்போம். குண்டு சுடாமல், சரணடையும்படி அவர்களுக்கு யோசனை விடுப்போம். அவர்கள் எதிர்த்தால் ஒருவனைக் கொல்லுவோம், மற்றவனை எப்படியாவது உயிரோடு பிடிப்போம். சேமிப்பு அரண் இடத்தில் எல்லாச் சாமான்களையும் படையினள் காலியா செத்வெர்த்தாக்கின் பாதுகாப்பில் வைப்போம். போர் நடவடிக்கைகள் என் உத்தரவின் படியே தொடங்கப்பட வேண்டும். உதவிக் கமாண்டராக ஜூனியர் சார்ஜண்டு அஸ்யானிஞவை நியமிக்கிறேன். அவளும் செயலற்றவள் ஆக்கப்பட்டால் படையினள் சோனியா குர்விச் உதவிக் கமாண்டராகப் பொறுப்பு ஏற்பாள். கேள்விகள் உண்டா?''

''என்னை எதற்காகச் சேமிப்பில் வைக்கிறீர்கள்?'' என்று மனத்தாங்கலுடன் கேட்டாள் காலியா செத்வெர்த்தாக்.

''சாரமில்லாத கேள்வி, படைவீரத் தோழரே.

உத்தரவு கொடுக்கப்பட்டுவிட்டது, நிறைவேற்றுங்கள்.''

''காலியா, நீ எங்கள் சேமிப்புப் படை'' என்ருள் அஸ்யானிஞ.

''கேள்விகள் இல்லே. எல்லாம் தெளிவாகிவிட்டது'' என்று உற்சாகமாகக் கூறிஞள் ழேனியா கமெல்கோவா.

''தெளிவாகிவிட்டது என்ருல் அரண் இடத்துக்குப் போகும்படி கேட்டுக் கொள்கிறேன்.''

சற்று முன் அஸ்யானிஞவுடன் சேர்ந்து திட்டமிட்டிருந்த இடங்களில் படையினரை நியமித்தான், ஒவ்வொரு திசை காட்டிக் குறியையும் அவர்களுக்குக் காட்டிஞன், சுண்டெலிகள் போலப் பதுங்கிக் கிடக்கும்படி இன்ஞெரு முறை ஒவ்வொருவரையும் எச்சரித்தான்.

''ஒருவரும் அசையக் கூடாது. பகைவர்களுடன் நானே முதலில் பேசுவேன்.''

''ஜெர்மன் மொழியிலா?'' என்று எகத்தாளம் செய்தாள் சோனியா குர்விச்.

''ருஷ்ய மொழியில்!'' என்று வெடுக்கெனக் கூறிஞன் சார்ஜண்டு மேஜர். ''அவர்களுக்குப் புரியாவிட்டால் நீங்கள் மொழிபெயர்ப்பீர்கள். விளங்குகிறதா?''

எல்லோரும் பேசாதிருந்தார்கள்.

''சண்டையிலும் இந்த மாதிரி முன் விழுந்தீர்களாஞல் மருத்துவப் பிரிவு அருகே எங்கும் இல்லே. அம்மாவுந்தான்.''

அம்மாவைப் பற்றி அவன் சொன்னது வீண். முற்றிலும் வீண். இதஞல் தன்மீதே கடுங் கோபம் அடைந்தான்: நடக்கப் போவது துப்பாக்கி சுடும்

பயிற்சி அல்லவே, உண்மையான சண்டையா யிற்றே.

''ஜெர்மானியர்களோடு தூரத்திலிருந்து சண் டை செய்வது நல்லது. நீங்கள் உங்கள் பழைய துப்பாக்கியை மறுபடி கெட்டிப்பதற்குள் பகைவன் உங்களைச் சல்லடைக் கண்ணாகத் துளைத்து விடுவான். ஆகவே தரையோடு தரையாகப் படுத்திருக்கும்படி கண்டிப்பாகக் கட்டளை இடுகிறேன். 'சுடு!' என்று நான் ஆணையிடும்வரை அசையாமல் படுத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் பெண்களாயிற்றே என்று பார்க்க மாட்டேன்...'' இங்கே வஸ்கோவ் திடீரெனப் பேச்சை நிறுத்திவிட்டுக் கையை ஆட் டினான். ''அவ்வளவுதான். உத்தரவு முடிந்தது.''

பார்வையிடும் பகுதிகளைத் தீர்மானித்தான். அவற்றுக்கு இருவரை நியமித்தான்—நான்கு கண் கள் பார்க்கட்டும் என்று. தான் இன்னும் உயரத் தில் ஏறி, தொலை நோக்கியால் காட்டு ஓரத்தைத் துருவிப் பார்த்தான். கண்களில் நீர் வரும்வரை பார்த்துக்கொண்டிருந்தான்.

சூரியன் மலைமுடியின் பின்னே போய் விட்டது, ஆனாலும் வஸ்கோவ் படுத்திருந்த பாறை சேமித் திருந்த வெப்பத்தை இன்னமும் வைத்திருந்தது. சார்ஜண்டு மேஜர் தொலை நோக்கியை வைத்து விட்டு, கண்களுக்கு ஓய்வு கொடுப்பதற்காக அவற் றை மூடிக் கொண்டான். அக்கணமே இந்த வெதுவெதுப்பான பாறை மெதுவாக அசைந்து நிசப்தத்தையும் அமைதியையும் நோக்கி மிதந்து சென்றது. வஸ்கோவ் தான் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டதைப் புரிந்து கொள்ளவில்லை. அவன் வீசு காற்றை உணர்வது போலவும் எல்லாச் சலசலப்புக்

களையும் கேட்பது போலவும் இருந்தது. தான் அடுப்புப் பரண் மேல் படுத்திருப்பதாகவும் சாக்கு விரிப்பை விரித்துக் கொள்ள மறந்து விட்டதாகவும் அதைப் பற்றி அம்மாவிடம் சொல்ல வேண்டும் என்றும் தோன்றியது. தன் தாயையும் அவன் கண் டான்: சிறு கூடான தேகம். துடியாக ஓடியாடி உழைப்பாள். பல ஆண்டுகளாக அவள் எப்போ தாவதுதான் அரையும் குறையுமாகக் குட்டித் தூக் கம் போடுவாள்—இந்த ஓய்வுத் துணுக்குகளை தனது விவசாயி வாழ்விலிருந்து திருடிக் கொண்டவள் போல. இனிமேல் மெலிய இடமில்லை என்னும் அள வுக்குச் சூம்பிப்போயிருந்த அவளுடைய கைகளை யும் ஈரத்தாலும் உழைப்பாலும் வெகு காலமாகவே வளைய முடியாதிருந்த விரல்களையும் பார்த்தான். நெருப்பில் வாட்டியது போன்று சுருக்கங்கள் விழுந்த அவளுடைய முகத்தையும் கரடு தட்டிய கன்னங்களில் வழிந்த கண்ணீரையும் கண்டான். தாயார் இறந்து போன பேரன் ஈகரை நினைத்து இன்னும் அழுது கொண்டிருக்கிறாள், தானே அதற்குப் பொறுப்பாளி என்று எண்ணி மறுகுகிறாள் எனப் புரிந்து கொண்டான். அவளிடம் பரிவான சொற் கள் கூற விரும்பினான், அதற்குள் யாரோ அவன் காலைத் தொட்டார்கள். தொட்டவர் தன் தந்தை என்று எதனாலோ எண்ணி அச்சத்தால் விலத்துப் போனான். கண்களைத் திறந்தான்: அஸ்யானினா பாறை மேல் ஏறி அவன் காலைத் தொடுவதைக் கண்டான்.

''ஜெர்மானியரா?''

''எங்கே?'' என்று பயத்துடன் கேட்டாள் அவள்.

''த்தூ, சைத்தான்... எனக்குப் பிரமை ஏற்பட்டது.''

ரீதா அஸ்யானிஞ அவனை நெடுக நோக்கி முறுவலித்தாள்:

''கொஞ்ச நேரம் தூங்குங்கள், பெதோத் எவ்கிராபிச். நான் உங்கள் மேல்கோட்டை எடுத்து வருகிறேன்.''

''நீ என்ன, அஸ்யானிஞ. சும்மாதான் கண்ணை இருட்டிக் கொண்டு வந்துவிட்டது. புகை பிடிக்க வேண்டும்.''

அவன் கீழே இறங்கிஞன். பாதையின் அடியில் ழேனியா கமெல்கோவா தலை வாரிக் கொண்டிருந்தாள். கூந்தலை அவிழ்த்து விட்டிருந்தாள். அது அவளுடைய முதுகு தெரியாதபடி மறைத்திருந்தது. சீப்பால் வாருவதற்குக் கை எட்டவில்லை. மறு கையால் நடுவில் பிடித்துக் கொள்ள வேண்டியிருந்தது. தலைமயிர் அடர்த்தியும் மேன்மையுமாக, தாமிர நிறத்தில் ஒளிர்ந்தது. ழேனியாவின் கைகள் நிதானமும் அமைதியுமாக, ஒலிலுடன் அசைந்தன.

''சாயம் ஏற்றிக் கொண்டிருக்கிருயோ?'' என்று கேட்ட சார்ஜண்டு மேஜர் இதோ அவள் தேள் கொட்டுவது போல வெடுக்கென்று ஏதேனும் சொல்லிவிடுவாளோ, இந்த எளிமைக்கு முடிவு வந்து விடுமோ என்று அஞ்சிஞன்.

''இல்லை, சொந்த நிறம் தான். நான் அலங்கோலமாய் இருக்கிறேஞே?''

''அதஞல் பரவாயில்லை.''

''ஏதோ எண்ணுதீர்கள். லீஸா பிரீச்கிஞ என் இடத்தில் பார்த்துக் கொண்டிருக்கிருள். அவளுக்குக் கூர்ந்த பார்வை.''

''சரி, சரி. ஒழுங்குபடுத்திக் கொள்...''

அட சைத்தான், மறுபடி இந்த வார்த்தை வந்து விட்டது! ஏனென்ருல் இராணுவ விதிகளில் உள்ள வார்த்தை இது. அவன் மனத்தில் அழிக்க முடியாதபடி பதிந்திருந்தது. கரடி நீ, வஸ்கோவ், காட்டுக் கரடி!..

சார்ஜண்டு மேஜர் முகம் சுளித்தான். சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகைத்திரை போர்த்துக் கொண்டான்.

''தோழர் சார்ஜண்டு மேஜர், நீங்கள் மணமானவரா?''

அந்தப் பக்கம் நோக்கினுன். செம்பழுப்புத் தழலின் ஊடாகப் பசிய விழிகள் அவனே உற்றுப் பார்த்தன. அளவற்ற ஆற்றல் நிறைந்த விழிகள்—நூற்று ஐம்பத்திரண்டு மில்லிமீட்டர் ஹோவிட்ஸர் பீரங்கியைப் போல.

''நான் மணமானவன், கமில்கோவா.''

பொய்தான், தெரிந்த சேதி. ஆனுல் இந்த மாதிரிப் பெண்களிடம் பொய் சொல்வதே மேல். நிலேகளே நிச்சயப்படுத்தி விடும், யார் எங்கே நிற்கவேண்டும் என்று.

''உங்கள் மனேவி எங்கே?''

''தெரிந்தது தானே, வீட்டில்.''

''குழந்தைகள் உண்டா?''

''குழந்தைகளா?'' வஸ்கோவ் பெருமூச்செறிந்தான். ''ஒரு பையன் இருந்தான். இறந்து போனுன். யுத்தம் தொடங்கும் தறுவாயில்.''

''இறந்து போனுனு?..''

ழேனியா கூந்தலேப் பின்னே போட்டுக் கொண்டு அவனேப் பார்த்தாள், அவன் உள்ளத்தையே ஊடுருவிப் பார்த்தாள். ஆனுல் மேற்கொண்டு ஒன்றும் சொல்லவில்லே. ஆறுதல் வார்த்தைகளோ, கேலிச்

சொற்களோ, வெறும் உபசார மொழிகளோ, எதுவுமே சொல்லவில்லை. அதனால்தான் வஸ்கோவ் அடக்க முடியாமல் பெருமூச்செறிந்தான்:

''ஆமாம், அம்மா அவனைச் சரியாகப் பேணவில்லை...''

சொல்லிவிட்டு வருந்தினன்: வருத்த மிகுதியால் உடனே துள்ளி எழுந்து, மேலதிகாரி பார்வையிடும் போது செய்வது போலச் சீருடையை இழுத்து நேராக்கிக் கொண்டான்.

''அஸ்யானினு, நிலைமை என்ன?''

''ஒருவரையும் காணேம், தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''தொடர்ந்து கவனி.''

இப்படிச் சொல்லி விட்டு ஒருவர் பின் ஒருவராகப் படையினரைப் பார்வையிடச் சென்றான்.

சூரியன் வெகு நேரத்துக்கு முன்பே மறைந்து விட்டது. ஆயினும் புலர்போதில் இருப்பதுபோல வெளிச்சமாய் இருந்தது. படையினள் சோனியா குர்விச் பாறையின் பின்னே அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். ராகம் போட்டு முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். தோத்திரம் படிப்பவள் போல. வஸ்கோவ் அவள் அருகே போவதற்கு முன் அவள் படிப்பதைச் சற்று நேரம் கேட்டுக் கொண்டிருந்தான்:

''கொந்தளிப்பில்லா வேளையில் பிறந்தோர்
வந்த வழிகளை நினைத்தும் பாரார்.
ருசிய நாட்டின் கொடிய வெம் பொழுதில்
பிறந்த நாம் எதையும் மறந்திட இயலோம்!
எரியும் சாம்பலும் பரவிய ஆண்டுகள்!
வெறியா எம்முள், நன்மை நம்பிக்கையா?

செரு நிறை நாட்களின், விடுதலை நாட்களின்
குருதிச் செம்மை ஒளிரும் எம் முகங்களில்...''

''யாருக்குப் படித்துக் காட்டுகிறாய்?'' என்று பக்கத்தில் சென்று கேட்டான் வஸ்கோவ்.

மொழிபெயர்ப்பாளி நாணம் அடைந்தாள் (என்ன இருந்தாலும் சுற்றிலும் கவனித்துப் பார்க்கும்படி உத்தரவு இடப்பட்டிருந்ததே!). புத்தகத்தை ஒரு புறம் வைத்துவிட்டு எழுந்திருக்கப் போனாள். சார்ஜண்டு மேஜர் அவளைக் கையமர்த்தினான்.

''யாருக்குப் படித்துக் காட்டுகிறாய் என்று கேட்கிறேனே?''

''ஒருவருக்கும் இல்லை. எனக்கேதான்.''

''அப்படியானால் வாய் விட்டுப் படிப்பானேன்?''

''இது செய்யுள் ஆயிற்றே.''

''அப்படியா...'' வஸ்கோவுக்கு விளங்கவில்லை. புத்தகத்தைக் கையில் எடுத்தான். மிகச் சிறியது. சிறு பீரங்கி பற்றிய விளக்கப் புத்தகம் போல. பக்கங்களைப் புரட்டினான். ''கண்களைக் கெடுத்துக் கொள்வாய்'' என்றான்.

''வெளிச்சமாய் இருக்கிறதே, தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''நான் பொதுவாகவே சொல்லுகிறேன்... கேளு. நீ பாறைமேல் உட்காராதே. அது சீக்கிரம் குளிர்ந்துவிடும், உன் உடம்பு வெப்பத்தை இழுக்கத் தொடங்கும், நீ கவனிக்க மாட்டாய். மேல்கோட்டை விரித்துக் கொள்.''

''ஆகட்டும், தோழர் சார்ஜண்டு மேஜர், நன்றி.''

''எதற்கும் வாய்விட்டுப் படிக்காதே. மாலை

நேரத்தில் இங்கே காற்றில் ஈரிப்பு அதிகம். மாலைகளும் காலைகளும் இங்கே நிசப்தமானவை. ஆகையால் குரல் ஐந்து கிலோமீட்டர் தொலைவுக்குக் கேட்கும். இதோடு உன்னிப்பாகக் கவனி. கூர்ந்து கவனி, குர்விச்.''

லீஸா பிரீச்கிஞ ஏரியின் அருகே இருந்தாள். தொலைவிலிருந்தே வஸ்கோவ் மனநிறைவுடன் புன்னகைத்தான்: இவள் தான் விஷயம் தெரிந்த பெண்! பிர் மரக் கிளையை முறித்துப் பாறைகளின் இடைவெளியை அடைத்து நிறைத்து மேல் கோட்டை விரித்திருந்தாள்: அனுபவசாலி.

''உனக்கு எந்த ஊர்?'' என்று கேட்டான் வஸ்கோவ்.

''பிரியான்ஸ்க் பிரதேசம், தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''கூட்டுப் பண்ணையில் வேலை செய்தாயா?''

''செய்தேன். மேற்கொண்டு தகப்பஞருக்கு உதவி செய்தேன். அவர் காட்டுக்காவலர். நாங்கள் எல்லைக் காட்டில் வசித்தோம்.''

''அதுதான் வாத்துக் கத்தல் நன்ருகக் கத்துகிருய்.''

அவள் கலீரென்று நகைத்தாள். இந்தப் பெண்களுக்குச் சிரிப்பதில் பிரியம். இன்னும் பழக்கம் விட்டுப்போகவில்லை.

''ஏதாவது கவனத்தில் பட்டதா?''

''இப்போதைக்கு அமைதியாய் இருக்கிறது.''

''நீ எல்லாவற்றையும் கவனி, பிரீச்கிஞ. செடிகள் அசைகின்றனவா, பறவைகள் கீச்சிடுகின்றனவா என்று கவனி. நீ காட்டில் இருந்தவள். உனக்கு எல்லாம் புரியும்.''

''புரியும்.''

''அதனுல்தான் சொல்லுகிறேன்.''

சார்ஜண்டு மேஜர் கால்களை மாற்றி மாற்றி வைத்தவாறு தயங்கினுன். சொல்ல வேண்டியது எல்லாம் சொல்லிவிட்டான், உத்தரவுகளும் கொடுத்தாகி விட்டது, இனிப்போக வேண்டியதுதான். ஆனுலும் கால்கள் கிளம்ப மறுத்தன. அவள் அவனுக்கு நெருக்கமான பெண். வனப் பிரதேசத்தைச் சேர்ந்தவள். வசதியாக இடம் ஏற்படுத்திக் கொண்டிருந்தாள். அவளிடமிருந்து இதமான கத கதப்பு பரவியது—அவன் கனவில் கண்ட பிறந்த வீட்டு அடுப்புப் பரணிலிருந்து பரவிற்றே, அந்த மாதிரி வெதுவெதுப்பு.

''லீஸா, லீஸா, லீஸாவெத்தா...'' என்று ஒரு பாட்டை இராணுவக் குரலில் பாடினுன் கமாண்டர். ''எங்கள் வட்டாரத்தில் இப்படி ஒரு பாட்டு பாடுவார்கள்'' என்று விளக்கினுன்.

''எங்கள் வட்டாரத்தில்...''

''அப்புறம் இரண்டு பேரும் சேர்ந்து பாடுவோம். இந்தப் போர் உத்தரவை நிறைவேற்றி விட்டு, பிறகு பாடுவோம்.''

''மெய்யாகத் தானே?'' என்று இள நகை செய்தாள் லீஸா.

''பின்னே, சும்மா சொல்லுவேனு.''

சார்ஜண்டு மேஜர் திடீரெனத் துணிச்சலுடன் கண் சிமிட்டினுன், அதனுல் தானே முதலில் வெட்கம் அடைந்தான், தொப்பியைச் சரிப்படுத்திக் கொண்டு அப்பால் நகர்ந்தான்.

''பாருங்கள், தோழர் சார்ஜண்டு மேஜர், வாக்குக் கொடுத்திருக்கிறீர்கள்!'' என்று அவனை நோக்கிக் கத்தினுள் லீஸா பிரீச்கினு.

அவன் அவளுக்குப் பதில் சொல்லவில்லை. ஆனால் வழி நெடுகப் புன்னகை செய்து கொண்டு போனான். பாறை வரிசையைக் கடந்து சேமிப்பு அரண் போய்ச் சேரும் வரை அந்தப் புன்னகை மறைய வில்லை. அங்கே அவன் புன்னகையைப் போக்கிக் கொண்டு படையினள் காலியா செத்வெர்த்தாக் எங்கே ஒளிந்திருக்கிறாள் என்று தேடலானான்.

காலியா மேல்கோட்டில் கைகளை நுழைத்துப் போர்த்துக் கொண்டு பாறையின் கீழ் மூட்டைகள் மீது அமர்ந்திருந்தாள். தூக்கிவிட்ட கழுத்துப் பட்டை அவளுடைய தலையையும் தொப்பியையும் மறைத்திருந்தது. கழுத்துப் பட்டை மடிப்புகளின் நடுவே சோர்வுடன் துருத்தியிருந்தது சிவந்த மூக்கு.

''நீ என்ன, சலித்துப் போய் உட்கார்ந்திருக் கிறாய்?''

''குளிர்கிறது...''

அவன் அவள் பக்கம் கையை நீட்டினான். அவள் திடுக்கிட்டு அப்பால் விலகினாள். அவன் தன்னைப் பிடித்துத் தழுவ வந்தான் என்று நினைத்தாளோ?..

''அட நீ துள்ளாதே. நெற்றியைக் காட்டு. ஊம்?''

அவள் கழுத்தை நீட்டினாள். சார்ஜண்டு மேஜர் அவள் நெற்றியை அழுத்தி உற்றுக் கேட்டான்: மழுவாய்க் கொதித்தது. கடுமையான காய்ச்சல், அது நாசமாய்ப் போக!

''உனக்குக் காய்ச்சல், படைவீரத் தோழரே. தெரிகிறதா?''

அவள் பேசாதிருந்தாள். விழிகளில் ஏக்கம் ததும்பியது. கிடாரிக் கன்றின் விழிகளில் போல. எவனையும் குற்றம் செய்ததுபோல உணரச் செய்யும்

விழிகள் அவை. சதுப்பு நிலம் செய்த வேலே இது, தோழர் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ். படையினள் தவறவிட்ட சோடு செய்த வேலே இது. உன்னுடைய அவசரமும் மேமாதக் குளிர் காற்றும் செய்த வேலே இது. ஓர் ஆள் செயல் திறமை இழந்தது தான் உனக்குக் கிடைத்த பலன். படைப் பிரிவு முழுவதற்கும் சுமை, உன்மனச் சாட்சிக்கு உறுத்தல்.

வஸ்கோவ் தன் சாமான் பையை எடுத்து வாரை அவிழ்த்து உள்ளே கைவிட்டுத் துழாவினுன். பத்திர மான ஓர் இடத்தில் அவனுக்கு மிக முக்கியமான பண்டம்—எழு நூற்று ஐம்பது கிராம் ஸ்பிரிட் நிறைத்த புட்டி—இருந்தது. அதை எடுத்து அடைப் பானேத் திறந்து ஸ்பிரிட்டைக் குவளேயில் ஊற்றிஞன்.

''அப்படியே குடிக்கிருயா, தண்ணீர் கலந்து தரவா?''

''என்ன இது?''

''மருந்து. நல்லது, ஸ்பிரிட். ஊம்?''

அவள் கைகளே உதறி, அப்பால் நகர்ந்தாள்:

''ஐயையோ, என்ன நீங்கள், என்ன நீங்கள்...''

''குடிக்கும்படி கட்டளே இடுகிறேன்!'' சார் ஜண்டு மேஜர் சற்று யோசனே செய்து கொஞ்சம் தண்ணீரைக் கலந்தான். ''குடி. உடனே தண்ணீர் குடி.''

''மாட்டேன், நீங்கள் என்ன...''

''குடி, மறு பேச்சு இல்லாமல்!''

''அட நீங்கள் என்ன இப்படி! என் தாயார் மருத்துவத்துறையில் வேலே செய்கிருள்...''

''தாயார் இல்லே. யுத்தம் இருக்கிறது, ஜெர்

மானியர் இருக்கிறுர்கள், நான் இருக்கிறேன், சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ். தாயார் இல்லே. யுத்தத்தில் சாகாமல் பிழைப்பவர்களுக்குத் தாயார்கள் இருப்பார்கள். புரிந்ததா?''

குடிக்க மாட்டாமல் கண்ணீருடன் குடித்தாள். இருமத் தொடங்கினுள். வஸ்கோவ் அவள் முதுகில் உள்ளங்கையால் லேசாகத் தட்டினுன். அவள் விலகினுள். கண்ணீரைக் கைகளால் துடைத்துக்கொண்டு புன்னகை செய்தாள்.

''என் தலே... உருண்டோடிவிட்டது!..''

''நாளேக்கு எடுத்துக் கொள்ளலாம்.''

பிர் மரக் கிளேயை வெட்டிக் கொண்டு வந்து பரப்பினுன். அதை மூடி விரிப்பு விரித்து அவளேப் படுக்க வைத்துத் தன் மேல்கோட்டால் போர்த்தினுன்.

''இளேப்பாறு, படைவீரத் தோழரே.''

''நீங்கள் மேல்கோட்டு இல்லாமல் என்ன செய்வீர்கள்?''

''நான் வலுவான ஆள். பயப்படாதே. நாளேக்குள் குணமடைந்துவிடு. உன்னே ரொம்பக் கேட்டுக்கொள்கிறேன். நாளேக்குள் சொஸ்தமாகி விடு.''

நிசப்தம் சூழ்ந்தது. காடும் ஏரியும் காற்றும் எல்லாம் அமைதியில் ஆழ்ந்து மறைந்தன. நள்ளிரவு கடந்துவிட்டது. மறு நாள் தொடங்கிற்று. அப்போதும் ஜெர்மானியரின் சுவடே தென்படவில்லே. அஸ்யானிஞ வஸ்கோவை அடிக்கடி பார்த்தாள். இருவரும் தனித்திருந்த வேளேயில், ''ஒரு வேளே வீணுக எதிர்பார்க்கிறேமோ?'' என்று வினவினுள்.

''வீணுகவும் இருக்கலாம்'' என்று பெருமூச்சு விட்டான் சார்ஜண்டு மேஜர். ''ஆனுல் நான் அப்படி

நினைக்கவில்லை—நீ வெட்டு மரங்களை ஜெர்மன் காரர்கள் என்று எண்ணியிரா விட்டால்.''

இதற்குள் கமாண்டர் கவனிக்கும் ஆணையை ரத்து செய்துவிட்டான். படையினரைச் சேமிப்பு அரணுக்கு அனுப்பி, கிளைகளை ஒடித்துப் பரப்பிப் படுக்கும்படியும் எழுப்பும் வரை உறங்கும்படியும் உத்தரவிட்டான். தான் தலைமை அரணில் தங்கினான். அஸ்யானினு அவனோடு சேர்ந்து கொண்டாள்.

ஜெர்மானியர் இன்னும் வராதது வஸ்கோவை ஆழ்ந்த கவலைக்கு உள்ளாக்கியது. அவர்கள் இந்தப் பக்கம் வராமலே இருந்து விடலாம், வழியில் வேறு ஓர் இடத்தை இலக்காக வைத்துக் கொள்ளலாம், அவர்கள் எந்த நோக்கத்துடன் வந்திருப்பதாக அவன் முடிவு செய்தானே அந்த நோக்கமே அவர்களுக்கு இல்லாதிருக்கலாம், அவர்கள் வேறு ஏதேனும் நோக்கத்துடன் வந்திருக்கலாமே. அவர்கள் எத்தனையோ தீமைகள் செய்ய முடியும்: படைத் தலைவர்களில் யாரையேனும் சுட்டுக் கொல்ல முடியும், முக்கியமான எதையாவது அழிக்க முடியும். அப்படி நேர்ந்தால், காட்டில் துருவித் தேடி ஜெர்மானியரைத் தீர்த்துக் கட்டுவதற்கு பதிலாக ஏன் நீ எங்கோ தொலைந்திருந்தாய் என்றால், விசாரணை மன்றத்திற்கு விளக்குவது எப்படி? படை வீரர்கள்மேல் இரக்கம் கொண்டாயா? அவர்களை நேரடிப் போரில் தள்ள அஞ்சினாயா? உத்தரவு நிறைவேற்றப்படவில்லை என்றால் இது தக்க காரணமாக ஏற்றுக் கொள்ளப் படாது. இல்லை, ஏற்றுக் கொள்ளவே படாது.

''தோழர் சார்ஜண்டு மேஜர், நீங்கள் இப்போ

தைக்குக் கொஞ்ச நேரம் உறங்குங்களேன். விடியும் நேரத்தில் எழுப்புகிறேனே...''

தூக்கமாவது ஒன்ருவது, சைத்தான்! குளிர் கூடக் கமாண்டருக்குத் தெரியவில்லை. இவ்வளவுக் நம் சீருடுப்பு மட்டுந்தான் அணிந்திருந்தான்.

''உறக்கத்தைப் பற்றிப் பிறகு பேசுவோம், அஸ்யானிஞ. ஜெர்மன்காரர்களை நழுவ விட்டேன் என்ருல் நான் மீளா உறக்கத்தில் விழ வேண்டியது நான், புரிகிறதா?''

''ஒருவேளை அவர்கள் இப்போது உறங்குகிருர்களோ என்னவோ?''

''உறங்குகிருர்களா?''

''ஆமாம் என்கிறேன். அவர்களும் மனிதர்கள் தாமே. சினியூஹின் குன்றுத் தொடர்தான் இருப்புப் பாதைக்குப் போக வசதியான ஒரே வழி என்று நீங்களே சொன்னீர்களே. அதற்கு அவர்கள்...''

''பொறு, அஸ்யானிஞ, பொறு! ஐம்பது கிலோ மீட்டர், நிச்சயமாக, இன்னும் அதிகமாகவே இருக்கும். அதோடு பழக்கம் இல்லாத இடம். ஒவ்வொரு செடியையும் கண்டு அஞ்ச வேண்டும்... இல்லையா? நான் நினைப்பது சரிதானே?''

''சரிதான், தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''சரிதான் என்ருல், அவர்கள் இளைப்பாறுவதற்காகப் படுக்கலாம் அல்லவா? புயலில் சாய்ந்த காட்டில் எங்காவது? சூரியன் உதிக்கும் வரை உறங்குவார்கள்... இல்லையா?''

அஸ்யானிஞ புன்னகைத்தாள். மறுபடியும் அவனை நெடுக நோக்கிஞள்—பெண்கள் குழந்தைகளைப் பார்ப்பதுபோல.

''நீங்களும் சூரியன் உதிக்கும்வரை உறங்குங்கள். நான் எழுப்புகிறேன்.''

''எனக்குத் தூக்கம் கிடையாது, தோழர் அஸ்யானிஞு... ரீதா, உங்கள் தந்தை பெயர் என்ன?''

''என்னை வெறுமே ரீதா என்று கூப்பிடுங்கள்.''

''புகை பிடிப்போமா, தோழர் ரீதா?''

''நான் புகை பிடிப்பதில்லை.''

''ஆமாம், அவர்களும் மனிதர்கள் என்பதை நான் எதனுலோ முழுவதும் புரிந்து கொள்ளவில்லை. சரியாக எடுத்துச் சொன்னுய், அவர்கள் இளைப்பாற வேண்டும் என்று. நீயும் போ, ரீதா. இளைப்பாறு.''

''எனக்குத் தூக்கம் வரவில்லை.''

''நல்லது, இப்போதைக்கு வெறுமே படுத்திரு. கால்களை நீட்டிக் கொள். பழக்கம் இல்லாததால் உளையும் ஒருவேளை, அப்படித் தானே?''

''எனக்கு நல்ல பழக்கம் உண்டு, தோழர் வஸ்கோவ்'' என்று முறுவலித்தாள் ரீதா.

ஆனுலும் சார்ஜண்டு மேஜர் வற்புறுத்தவே ரீதா வருங்கால முன் அரணில், லீஸா பிரீச்கிஞு தனக்காக வெட்டி வைத்திருந்த கிளைமேல் படுத்துக் கொண்டாள். மேல்கோட்டைப் போர்த்துக் கொண்டாள், காலைவரை உறங்குவதில்லை என நினைத்தவள், தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டாள். படுத்ததுமே, கனவுகள் இன்றி அயர்ந்து உறங்கிப் போனுள். சார்ஜண்டு மேஜர் மேல்கோட்டைப் பிடித்து இழுத்த போது தான் கண் விழித்தாள்.

''என்ன?''

''சத்தம் போடாதே! காதில் படுகிறதா?''

ரீதா மேல்கோட்டை அகற்றி, ஸ்கர்ட்டு மாட்டிக் கொண்டு துள்ளி எழுந்தாள். சூரியன்

தொடுவானிலிருந்து மேலே வந்து விட்டது. பாறைகள் இளஞ்சிவப்பாக ஒளிர்ந்தன. ரீதா தொலேவில் நோக்கிஞள். தூரக் காட்டுக்கு மேலே பறவைகள் கூவிப் பறந்தன.

''பட்சிகள் கத்துகின்றன...''

''கரிச்சான்கள்!'' என்று வாய்க்குள் சிரித்தான் வஸ்கோவ். ''கரிச்சான்கள் கத்துகின்றன, ரீதா. ஆகவே யாரோ வருகிருர்கள், அவற்றைக் கலவரப் படுத்துகிருர்கள். வேறு யாரும் இல்லே, நம் விருந் தாளிகள்தாம். ஓடு, ரீதா, படையினரை எழுப்பு. உடனே! ஆனுல் மறைவாக, ஓசைப் படாமல்!..''

ரீதா ஓடிச் சென்ருள்.

சார்ஜண்டு மேஜர் முன்னுல், மற்றவர்களே விட உயரத்தில் இருந்த தன் இடத்தில் படுத்துக் கொண் டான். கைத்துப்பாக்கியைச் சரி பார்த்தான், துப் பாக்கியில் தோட்டாக்களேக் கெட்டித்தான். தாழ் வான சூரியனின் ஒளிபட்ட காட்டோரத்தைத் தொலேநோக்கியின் உதவியால் துருவிப் பார்த்தான்.

கரிச்சான்கள் புதர்களுக்கு மேலே வட்டமிட் டன, உரக்கக் கத்தின, ஒன்றை ஒன்று கூவி அழைத் தன.

படையினர் தயாராஞர்கள். பேசாமல் அவரவர் இடங்களுக்குப் போய்ப் படுத்துக் கொண்டார் கள்.

சோனியா வஸ்கோவிடம் வந்து சேர்ந்தாள்.

''வணக்கம், தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''நலமே இரு. அந்த காலியா எப்படி இருக் கிருள்?''

''தூங்குகிருள். நாங்கள் அவளே எழுப்பவில்லே.''

''சரியாகச் செய்தீர்கள். பக்கத்தில் இரு, தகவல் கொடுக்க வாக்காக, தலையை மட்டும் நீட்டாதே.''

''நீட்ட மாட்டேன்'' என்றாள் சோனியா.

கரிச்சான்கள் வர வரக் கிட்டத்தில் நெருங்கின. சில இடங்களில் புதர் முடிகள் நடுங்கின. வருபவனின் கனத்த அடி வைப்பால் சருகுகளும் சுள்ளிகளும் நெறுநெறுத்ததாகக் கூட வஸ்கோவுக்குத் தோன்றியது. அப்புறம் எல்லாம் அசைவற்று விட்டன போலும் கரிச்சான்கள் அமைதி அடைந்து விட்டன போலும் இருந்தது. ஆனால் காட்டு விளிம்பில், புதர்களின் மறைவில் ஆட்கள் உட்கார்ந்திருக்கிறார்கள் என்று சார்ஜண்டு மேஜர் தெரிந்து கொண்டான். ஏரிக்கரையையும் மறு புறக் காட்டையும் குன்றுத் தொடரையும் நோட்டமிட்டவாறு அவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய பாதை குன்றுத் தொடர் வழியாகவே சென்றது. அங்கேதான் வஸ்கோவும் அவனுடைய இளஞ் சிவப்புக் கன்னிப் படையினரும் பதுங்கி இருந்தார்கள்.

ஒரு நிகழ்ச்சி மற்றொன்றாக மாறுவதும் காரணத்தை அடுத்து விளைவு வருவதும் முக்கிய சம்பவம் நிகழ்வதுமான மர்மக் கணம் வந்தது. சாதாரண வாழ்க்கையில் மனிதன் இந்தக் கணத்தை ஒருபோதும் கவனிப்பதில்லை. ஆனால் யுத்தத்தில் நரம்புகள் முடிந்த எல்லைவரை முறுக்கேறி விகுவடைந்து விடும். நிலவுலகில் ஆதி முதல் பொருளான உயிர் பிழைத்தல் என்பது வாழ்க்கையின் முதல் கண்டத்தில் அப்போது மறுபடி வெளிப்படும். எனவே, அப்போது இந்தக் கணம் எதார்த்த

மாகவும் உடலால் உணரக் கூடியதாகவும் எல்லை யின்றி நீண்டதாகவும் மாறிவிடும்.

''அட வாருங்களேன், வாருங்கள், வாருங் கள்...'' என்று ஒலியின்றிக் கிசுகிசுத்தான் வஸ் கோவ்.

தொலைவிலிருந்த புதர்கள் சிலிர்த்தன. காட்டு ஓரத்தில் எச்சரிக்கையுடன் மெதுவாக வெளிப்பட் டார்கள் இருவர். அவர்கள் புள்ளிகள் இட்ட சாம் பல் பச்சை மேலங்கிகள் அணிந்திருந்தார்கள். ஆனாலும் வெயில் அவர்கள் முகங்களில் நேராக அடித்தபடியால் கமாண்டர் அவர்களுடைய ஒவ் வொரு அசைவையும் துலக்கமாகக் கண்டான்.

தானியங்கித் துப்பாக்கி விசைகளில் விரல்களைத் தயாராக வைத்தவாறு, குனிந்து, பூனைகள் போன்று மெல்லடி வைத்து ஏரியை நோக்கி முன்னேறினார் கள் அவர்கள்.

ஆனால் வஸ்கோவ் இப்போது அவர்களைக் கண் காணிக்கவில்லை. ஏனென்றால் அவர்களுடைய முதுகு களுக்குப் பின்னே புதர்கள் தொடர்ந்து அசைந்து கொண்டிருந்தன. அங்கிருந்து, காட்டின் உள்ளி ருந்து, தானியங்கித் துப்பாக்கிகளைத் தயாராகப் பிடித்தவாறு வந்து கொண்டே இருந்தன சாம்பல்-பச்சை உருவங்கள்.

''மூன்று... ஐந்து... எட்டு... பத்து...'' என்று வாய்க்குள்ளாக எண்ணினாள் சோனியா. ''பன் னிரண்டு... பதினான்கு... பதினைந்து, பதினாறு... பதி னாறு பெயர், தோழர் சார்ஜண்டு மேஜர்...''

புதர்கள் அசையாதிருந்தன.

தூரத்தில் கத்தியவாறு பறந்து போயின கரிச் சான்கள்.

பதினறு ஜெர்மானியர் இங்குமங்கும் பார்த்த வாறு கரையோரமாக சினியூஹின் குன்றுத் தொடரை நோக்கி மெதுவாக நடந்தார்கள்...

## 6

வஸ்கோவ் தன் வாழ்நாள் முழுவதும் உத்தரவுகளை நிறைவேற்றி வந்தான். அப்படியே, விரைவாக, மனநிறைவுடன் நிறைவேற்றி வந்தான், ஏனெனில் பிறரது விருப்பத்தை இவ்வாறு துளி பிசகாமல் நிறைவேற்றுவதிலேயே தன் வாழ்க்கையின் பொருள் அடங்கி இருப்பதாக அவனுக்குத் தோன்றியது! ஆணைகளை நிறைவேற்றுபவன் என்ற முறையில் தலைமை அதிகாரிகள் அவனை மதித்தார்கள். அதற்கு மேல் எதையும் அவர்கள் அவனிடம் கோரவில்லை. மிகுந்த கவனத்துடன் பொருத்தி அமைக்கப்பட்ட பிரமாண்டமான இயந்திரத்தின் இணைப்புப் பல் சக்கரமாக இருந்தான் அவன். தானும் சுழன்றான், மற்றவர்களையும் சுழற்றினான். இந்தச் சுழற்சி எங்கே தொடங்கியது, எதை நோக்கிச் சென்றது, எதில் முடிந்தது என்பது பற்றி அவன் கவலைப்படவில்லை.

ஜெர்மானியர்களோ, வோப் ஏரியின் கரையோரமாக நடந்து அவனையும் அவனுடைய படையினரையும் நோக்கி இடைவிடாது முன்னேறி வந்து கொண்டிருந்தார்கள். அவனுடைய படையினர் விருவான கன்னங்களைச் சில்லிட்டிருந்த துப்பாக்கிப் பிடங்குகளோடு உத்தரவுப்படி அழுத்தியவாறு எந்தப் பாறைகளின் பின்னே இப்போது படுத்திருந்தார்களோ, அவற்றை நோக்கி நேராக வந்துகொண்டிருந்தார்கள் ஜெர்மானியர்.

''பதினறு, தோழர் சார்ஜண்டு மேஜர்'' என்று அனேகமாகக் குரல் ஒலி இன்றித் திரும்பச் சொன்னுள் சோனியா.

''பார்க்கிறேன்'' என்று தலையைத் திருப்பாமல் கூறினுன் வஸ்கோவ். ''அஞ்சல் மூலம் செய்தி அனுப்பு, குர்விச். படையினரை உடனே சேமிப்பு அரணுக்கு அனுப்பும்படி அஸ்யானிணுவிடம் சொல்லு. மறைவாக, ஆமாம், வெளியே தெரியாமல்! நில்லு, எங்கே போகிருய்?.. பிரீச்கினுவை என்னிடம் வரச் சொல்லு. ஊர்ந்து போ, தோழர் மொழிபெயர்ப்பாளி. இனிமேல் எங்கே போவதானுலும் ஊர்ந்தே போவோம்.''

சோனியா, பாறைகளின் நடுவே முயற்சியுடன் வளைந்து நெளிந்தவாறு ஊர்ந்து சென்ருள். ஏதாவது வழி காண, உடனடியாக ஏதாவது முடிவு செய்ய விரும்பினுன் கமாண்டர். ஆனுல் மூளை ஒரே வெறுமையாய் இருந்தது. பல ஆண்டுப் பயிற்சியின் விளைவான ஒரு விருப்பம்—மேலதிகாரிகளுக்கு அறிவிக்க வேண்டும் என்ற விருப்பம்—மட்டுமே மீண்டும் மீண்டும் எழுந்தது. நிலைமை மாறிவிட்டது, இப்போது தன் படையினரைக் கொண்டு கிரவ்ஸ்காயா இருப்புப் பாதையையோ தோழர் ஸ்தாலின் பெயர் கொண்ட கால்வாயையோ காப்பாற்ற அவனுல் முடியாது என்று இப்பொழுதே, இந்தக் கணத்திலேயே தலைமை அதிகாரிகளுக்குத் தெரிவித்துவிட வேண்டும் என்ற விருப்பம் அவனை அலைத்தது.

அவனுடைய படைப் பிரிவு பின்னே நகரத் தொடங்கிற்று: எங்கோ துப்பாக்கி கிலுங்கியது, எங்கோ ஒரு கல் பெயர்ந்து விழுந்தது. இந்த ஓசை

கள் அவன் உடலையே தாக்கின. ஜெர்மானியர் இன்னும் தொலைவில் இருந்தார்கள், இந்த ஒலிகளை அவர்கள் கேட்டிருக்க முடியாது என்றாலும் வஸ் கோவ் பயந்து நடுங்கினான். அட இப்போது மட்டும் முழு வட்டம் குண்டுகள் உள்ள மெஷீன்-கனும் விவரம் தெரிந்த ஒரு துணையாளும் இருந்தால்! அட மெஷீன்-கன் கூட வேண்டாம், ஒரு மூன்று தானி யங்கித் துப்பாக்கிகளும் அவற்றை இயக்கப் பழக்க முள்ள ஆட்களும் இருந்தாலே போதும்... அவ னிடமோ மெஷீன்-கன்களும் இல்லை, ஆட்களும் இல்லை. இருந்தவர்கள் ஐந்து வேடிக்கையான பெண்களும் துப்பாக்கிக்கு ஐந்து வீதம் தோட்டாக் களுமே. இந்தக் காரணத்தால்தான் இளஞ் செம் மை ஒளிர்ந்த அந்த மே மாதக் காலையில் சார் ஜண்டு மேஜர் ஒரேயடியாக வியர்த்துப் போனான்...

''தோழர் சார்ஜண்டு மேஜர்... தோழர் சார் ஜண்டு மேஜர்...''

கமாண்டர் சட்டைக் கையால் வேர்வையை நன்றாகத் துடைத்துப் போக்கிய பின்னரே திரும்பி னான். முடிந்தவரை அகலத் திறந்த விழிகளை அருகே கண்டு கண் சிமிட்டினான்:

''சந்தோஷப்படு, பிரீச்கின. அவர்கள் பதினாறு பெயர் என்பது இன்னும் நல்லது ஆயிற்றே. புரிந் ததா?''

பதினாறு நாசவேலையினர் இரண்டு பெயரை விட ஏன் மேல் என்று சார்ஜண்டு மேஜர் விளக்க முற் படவில்லை. ஆனால் லீஸா இசைவு தெரிவிக்கும் விதத் தில் தலை ஆட்டி நம்பிக்கை இன்மை தோன்ற முறு வலித்தாள்.

''திரும்பும் வழி நன்றாக நினைவு இருக்கிறதா?''

''இருக்கிறது, தோழர் சார்ஜண்டு மேஜர்.''

''பார்: ஜெர்மானியருக்கு இடப் புறம் தேவ தாருச் சோலை இருக்கிறது. அதைக் கடந்து ஏரியை ஒட்டினாற் போலக் காட்டோரத்தில் நடந்து போ.''

''நீங்கள் சுள்ளிகள் வெட்டினீர்களே, அங்கே யா?''

''சபாஷ், பெண்ணே! அங்கிருந்து ஆற்றுக்குப் போ. நேரே நட. இந்தப் பக்கம் அந்தப் பக்கம் விலகாதே.''

''எனக்குத் தெரியும் தோழர்...''

''பொறு, லீஸா, பதறாதே. முக்கியமானது சதுப்பு நிலம், புரிந்ததா? கடவை வழி குறுகலானது. இடப்புறமும் வலப்புறமும் புதை சேறு. வழி காட்டும் குறி பிர்ச் மரம். பிர்ச் மரத்திலிருந்து திட்டில் உள்ள இரண்டு தேவதாரு மரங்களைப் பார்த்து நேரே போ.''

''சரி.''

''திட்டில் கொஞ்சம் களையாறிக் கொள். உடனே மேலே போகாதே. திட்டிலிருந்து சரிந்த அடிமரத் துண்டை இலக்காக வைத்துக் கொண்டு நட. நான் சேற்றில் இறங்கினது அங்கே இருந்து தான், நினைவு இருக்கிறது அல்லவா? சரியாக அதைப் பார்க்க நட. அது நன்றாகக் கண்ணுக்குத் தெரியும்.''

''ஆகட்டும்.''

''கிரியானவாவிடம் நிலைமையைத் தெரிவி. நாங்கள் இங்கே ஜெர்மானியர்களைக் கொஞ்ச நேரம் திகைக்க வைக்கிறோம். ஆனால் வெகு நேரம் நிறுத்தி வைக்க எங்களால் முடியாது. உனக்கே தெரிந்ததுதான்.''

''ஆமாம்.''

''துப்பாக்கி, சாமான் மூட்டை, மேல்கோட்டுச் சுருள், எல்லாவற்றையும் வைத்துவிடு. சுமை இல்லாமல் நட.''

''அப்படியானால் நான் இப்போதே போகவா?''

''சதுப்பு நிலத்தில் இறங்குவதற்கு முன்னால் கொம்பை எடுத்துக் கொள்ள மறக்காதே.''

''நல்லது. நான் போகிறேன்.''

''ஓடு அம்மா லீஸா.''

லீஸா பேசாமல் தலையை ஆட்டிவிட்டு நகர்ந்தாள். துப்பாக்கியைப் பாறை மேல் சார்த்தினாள், தோட்டாப் பையை இடைவாரிலிருந்து கழற்றிக் கொண்டே சார்ஜண்டு மேஜரை எதிர்பார்ப்புடன் நோக்கினாள். ஆனால் வஸ்கோவ் ஜெர்மானியர்களைப் பார்த்துக் கொண்டிருந்தபடியால் அவளுடைய கலவரம் நிறைந்த விழிகளைக் காணவில்லை. லீஸா ஜாக்கிரதையுடன் ஓசையின்றிப் பெரு மூச்சு விட்டு, இடைவாரை நன்றாக இறுக்கிக் கொண்டு, பெண்களின் வழக்கம் போலக் கால்களைப் பக்க வாட்டில் இழுத்து இழுத்து வைத்தவாறு, குனிந்த முதுகுடன் தேவதாருச் சோலையை நோக்கி ஓடினாள்.

அழிவு வேலையினர் மிகக் கிட்டத்தில் வந்து விட்டார்கள். அவர்களுடைய முகங்களைத் துலக்கமாகக் காண முடிந்தது. ஆனால் வஸ்கோவ் தரையோடு தரையாக ஒட்டியவாறு இன்னும் படுத்துக் கிடந்தான். ஜெர்மானியரை ஓரப் பார்வையாகப் பார்த்து விட்டு, குன்றுத் தொடரிலிருந்து தொடங்கிக் காட்டோரம் வரை சென்றிருந்த தேவதாரு மரச்

சோலை மீது அவன் கண்ணோட்டினான். அங்கே மர முடிகள் இரண்டு தரம் அசைந்தன. ஆனால் ஏதோ பட்சி இடித்ததால் அசைவது போன்று லேசாக அசைந்தன. லீஸா பிரீச்கினாவை அனுப்பியது சரியே என்று நினைத்துக் கொண்டான்.

அழிவு வேலையினர் அஞ்சல்காரியைக் கவனிக்கவில்லை என்று உறுதிப்பட்டதும் வஸ்கோவ் தன் துப்பாக்கியின் காப்புப் பூட்டைப் போட்டுவிட்டுப் பாறையின் பின்னே இறங்கினான். லீஸா வைத்துப் போயிருந்த துப்பாக்கியை எடுத்துக் கொண்டு, காலடி ஓசை கேட்காதபடி உள்ளுணர்வால் தக்க இடங்களில் பாதங்களை வைத்தவாறு பின்னால் ஓடினான்.

''தோழர் சார்ஜண்டு மேஜர்!..''

ஆளி விதைகள் மீது குருவிகள் பாய்வதுபோல அவனைப் பாய்ந்து சூழ்ந்து கொண்டார்கள் பெண்கள். காலியா கூட மேல்கோட்டுப் போர்வையிலிருந்து தலையை நீட்டினாள். ஒழுங்கீனம், சந்தேகம் இல்லாமல். அவர்களை அதட்டி உத்தரவிடவும், காவலுக்கு ஆள் வைக்கவில்லை என்பதை அஸ்யாணினுவுக்குக் காட்டவும் வேண்டி இருந்தது. அவன் வாயைத் திறந்து கமாண்டருக்கு உரிய தோரணையில் புருவத்தை உயர்த்தினான், ஆனால் அவர்களுடைய இறுக்கம் நிறைந்த விழிகளைக் கண்ணுற்றதும், வயல் வேலை செய்யும் பெண்களிடம் பேசுபவன் போல, ''நிலைமை மோசம், பெண்களா'' என்று கூறினான்.

பாறைமேல் உட்காரப் போனான். ஆனால் சோனியா அவனைத் தடுத்து, சட்டென்று தன் மேல் கோட்டை அதன் மேல் பரப்பினாள். தலையசைப்

பால் அவளுக்கு நன்றி தெரிவித்து விட்டு உட்கார்ந்து புகையிலைப் பையை எடுத்தான். பெண்கள் அவன் முன்னே வரிசையாக உட்கார்ந்து அவன் சிகரெட்டு சுருட்டுவதை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வஸ்கோவ் காலியா மீது கண்ணோட்டினன்.

''ஊம், எப்படி இருக்கிறது உடம்பு?''

''பரவாயில்லை. நான் நன்ருகத் தூங்கினேன்.'' அவள் புன்னகை செய்ய முயன்ருள், ஆனல் உதடுகள் மரத்துப் போயிருந்ததால் அவளுக்கு வாய்க்கவில்லை.

''ஆக, அவர்கள் பதினறு பெயர்.'' சார்ஜண்டு மேஜர் நிதானமாகப் பேச முயன்ருன். அதனல் ஒவ்வொரு சொல்லையும் தெளிவாக உச்சரித்தான். ''பதினறு தானியங்கித் துப்பாக்கிகள் பெரும் பலம். நேரடிச் சண்டையில் இத்தனை பெயரைத் தேக்கி நிறுத்துவது நடவாது. நிறுத்தாமல் இருக்கவும் கூடாது. அவர்கள் ஒரு மூன்று மணி நேரத்தில் இங்கே வந்து விடுவார்கள் என்று எண்ண வேண்டும்.''

ரீதாவும் ழேனியாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். சோனியா உடையைச் சரிப்படுத்திக் கொண்டாள். காலியா அவனையே கண்கொட்டாமல் பார்த்தாள். கமாண்டர் சிகரெட்டை நோக்கியவாறு வெறுமே புகை பிடித்துக் கொண்டிருந்தாலும் எல்லாவற்றையும் கவனித்தான். எல்லாவற்றையும் பார்த்தான், கேட்டான்.

''பிரீச்கினவை முகாமுக்கு அனுப்பு இருக்கிறேன்'' என்று, சற்று நேரம் பொறுத்துச்

சொல்லத் தொடங்கினான். ''உதவி இரவில் தான் வந்து சேரும், அதற்கு முன் எதிர்பார்க்க முடி யாது. சண்டை தொடங்கிறோமானால் நடு நிசிவ ரை தாக்குப் பிடிக்க நம்மால் முடியாது. எந்த நிலையிலும் முடியாது, ஏனென்றால் அவர்களிடம் பதினாறு தானியங்கித் துப்பாக்கிகள் இருக்கின் றன.''

''என்ன, அவர்கள் நம் அருகாகப் போவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பதா?'' என்று தணிந்த குரலில் கேட்டாள் ரீதா.

''அவர்கள் குன்றுத் தொடரைக் கடந்து இங்கே வரும்படி விடக் கூடாது. அவர்களை வழி தடு மாறும்படி செய்ய வேண்டும். அவர்களைக் குழப்பி, லெகோன்தவோ ஏரியைச் சுற்றிப் போகும்படி திசைதிருப்ப வேண்டும். ஆனால் எப்படி? வெறுமே சண்டை போட்டு அவர்களைத் தேக்கி நிறுத்த முடி யாது. ஆகவே, உங்கள் யோசனைகளைச் சொல்லுங் கள்'' என்றான் வஸ்கோவ்.

தான் மனக் குழப்பம் அடைந்திருப்பதை அவர் கள் கண்டு கொள்வார்களோ என்றே சார்ஜண்டு மேஜர் எல்லாவற்றையும் விட அதிகமாகப் பயந் தான். தங்கள் மர்மமான உள்ளுணர்வால் அவர்கள் இதைக் கண்டு கொண்டால் என்ன ஆகும்? அவ னுடைய உயர்வு அதோடு தீர்ந்தது. கமாண்டரின் சித்த உறுதியும் அதோடு அவன்மேல் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையும் பஞ்சாய்ப் பறந்து விடும். அதனால் தான் அவன் வேண்டுமென்றே அமைதியாக, சகஜமாக, தணிந்த குரலில் பேசினான், அண்டை வீட்டுச் சுற்றுச் சுவர்மேல் குந்தியிருப்ப வன் போன்ற பாவனையில் புகை பிடித்தான். உள்

ளுக்குள்ளோ, கனத்த மூளையைப் புரட்டிப் புரட்டிச் சிந்தனை செய்த வண்ணமாய் இருந்தான், எல்லா வாய்ப்புக்களையும் மறுபடி மறுபடி எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

முதலில் அவன் படையினரைச் சாப்பிடச் சொன்ஞன். அவர்கள் கூச்சப்பட்டார்கள். அவன் அவர்களைக் கையடக்கி, சாமான் பையிலிருந்து கொழுப்பை எடுத்தான். அவர்கள் அவனுடைய உத்தரவுக்குப் படிந்தார்களோ, அல்லது கொழுப்பைக் கண்டு மனம் மாறிஞர்களோ, தெரியாது. ஆனுல் உற்சாகமாகச் சாப்பிடத் தொடங்கிஞர்கள். லீஸாவை அவசரத்தில் வெறும் வயிற்றுடன் அனுப்பியதற்காக வஸ்கோவ் வருந்திஞன்.

சாப்பிட்ட பின் கமாண்டர் குளிர்ந்த நீரால் கவனமாக முகம் மழித்துக் கொண்டான். அவனிடம் தகப்பஞரின் சவரக் கத்தி இருந்தது. தானே மழித்துக் கொள்வதற்கானது. அற்புதமான கத்தி. ஆனுலும் அவன் இரண்டு இடங்களில் வெட்டிக் கொண்டான். வெட்டுண்ட இடங்களில் காகிதத் துண்டுகளை ஒட்டிஞன். ழேனியா ஒடிகொலோன் சீசாவை எடுத்து, காயங்களில் தன் கையால் ஒடிகொலோன் தடவிஞள்.

எல்லாக் காரியங்களையும் அவன் அவசரப்படாமல் நிதானமாகச் செய்தான். ஆனுல் நேரம் கழிந்து கொண்டு போயிற்று, அவன் மனதில் எண்ணங்கள் ஆழமற்ற நீரில் மீன் குஞ்சுகள் நெரிவது போன்று நெரிந்தன. அவற்றை ஒழுங்கு படுத்த அவனுல் முடியவே இல்லை. கோடரியை எடுத்து விறகு வெட்ட முடியாமல் இருக்கிறதே என்று அவன் வருந்திஞன்: அப்போது அவனை அறியாமலே எண்ணங்கள்

ஒழுங்கு பட்டிருக்கும், வேண்டாதவை அகன்று விட்டிருக்கும், இந்த நிலைமையைச் சமாளிப்பதற்கான வழி அவனுக்குத் தென்பட்டிருக்கும்.

ஜெர்மானியர்கள் இங்கே வந்திருப்பது சண்டை போடுவதற்காக அல்ல என்பது அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. வேவுகாரர்களை வெகு தூரம் முன்னே அனுப்பி, அடர்காடு வழியாக எச்சரிக்கையுடன் நடந்தார்கள் அவர்கள். எதற்காக? எதிரிகள் தங்களைக் கண்டு கொள்ளக் கூடாது என்பதற்காக, துப்பாக்கிச் சண்டையில் ஈடுபடக் கூடாது என்பதற்காக, எதிர்ப்படக் கூடிய தடைகளின் ஊடாக யாரும் காணுதபடி நுழைந்து தங்கள் முக்கிய இலக்கை அடைவதற்காக. அப்படியானுல், அவர்கள் அவனைக் காணும் படியும் அவன் அவர்களைக் கண்டுகொள்ளவில்லை போலவும் ஏதேனும் செய்ய வேண்டும், அல்லவா?.. அப்போது அவர்கள் பின்வாங்கி வேறு இடத்தில் ஊடுருவ முயலக் கூடும். வேறு இடம் லெகோன்தவோ ஏரியைச் சுற்றிப் போவதுதான்: ஒரு முழு நாள்நடை...

ஆனுல் அவர்களுக்கு அவன் யாரைக் காட்ட முடியும்? நான்கு பெண்களையும் தன்னையுமா? சரி, கொஞ்ச நேரம் தயங்குவார்கள், வேவுகாரர்களை அனுப்புவார்கள், இவர்களைக் கூர்ந்து பார்ப்பார்கள், தங்களைத் தடுத்து நிற்பவர்கள் முழுதாக ஐந்தே பெயர் என்பதைப் புரிந்து கொள்வார்கள். அப்புறம்? அப்புறம், தோழர் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ், அவர்கள் எங்குமே விலகிப் போக மாட்டார்கள், சூழ்ந்து கொண்டு, ஒரு குண்டுகூடச் சுடாமல், ஐந்தே கட்டாரிகளால் உன் படைப்பிரிவு முழுவதையும் தீர்த்துக் கட்டி விடுவார்கள். நான்கு

பெண்களையும் கைத்துப்பாக்கி வைத்திருக்கும் ஒரு சார்ஜண்டு மேஜரையும் கண்டு அஞ்சிக் காட்டில் ஓடி ஒளிவதற்கு அவர்கள் முட்டாள்கள் அல்லவே...

இந்த எல்லா எண்ணங்களையும் வஸ்கோவ் தன் படையினருக்கு—ரீதா, ழேனியா, சோனியா, மூவருக்கும்—விவரித்தான். நன்கு உறங்கிக் களையாறி இருந்த காலியா பாரா கொடுப்பதாகத் தானே முன்வந்தாள். வஸ்கோவ் மற்றவர்களுக்குத்தன் கருத்துக்களை ஒளிக்காமல் விளக்கிவிட்டு மேலும் சொன்னான்:

''ஒரு ஒன்றரை மணி நேரத்தில் வேறு யோசனை தோன்றாவிட்டால், நான் சொன்னபடி செய்ய வேண்டி இருக்கும். தயாராகுங்கள்.''

தயாராகுங்களாம்... எதற்குத் தயாராவது? மறு உலகுக்கு போகவா? அதற்கு நேரம் எவ்வளவு குறைவாகிறதோ அவ்வளவுக்கு நல்லது ஆயிற்றே...

ஆனால் அவன் ஆயத்தங்கள் செய்தான். கைக் குண்டைச் சாமான் பையிலிருந்து எடுத்தான், கைத் துப்பாக்கியைத் துடைத்துத் துப்புரவாக்கிக் கொண்டான், கட்டாரியைக் கல்லில் தீட்டினான். அவ்வளவு தான், ஆயத்தங்கள் முடிந்து விட்டன. பெண்களுக்கு இந்த ஏற்பாடுகள் கூடத் தேவைப்படவில்லை. ஏதோ கசமுசத்தார்கள், ஒரு புறமாக ஏதோ சர்ச்சை செய்தார்கள். பிறகு அவனிடம் வந்தார்கள்:

''தோழர் சார்ஜண்டு மேஜர். ஜெர்மானியர் மரம் வெட்டுபவர்களைச் சந்தித்தாலோ?''

வஸ்கோவுக்கு விளங்கவில்லை: யார் அவர்கள்,

மரம் வெட்டுபவர்கள்? எங்கே?.. போர் நடக்கிறதே. காடுகள் வெறுமையாக நிற்பதை இந்தப் பெண்கள் பார்த்தார்களே. பெண்கள் தங்கள் கருத்தை விளக்கினுர்கள். கமாண்டர் புரிந்து கொண்டான்: படைப்பிரிவு எந்த வகையானதாக இருந்தாலும் அதன் அதிகாரத்தில் உள்ள பிரதேசத்துக்கு எல்லேகள் உண்டு. திட்டவட்டமான எல்லேகள். அக்கம் பக்கத்தில் உள்ளவை தெரிந்தவை, ஒவ்வொரு மூலேயிலும் எல்லேக் காவல் நிலேயங்கள் உண்டு. ஆனுல் மரம் வெட்டுவோரோ, காட்டில் இருப்பவர்கள். தனித் தனி வேலேக் குழுக்களாகப் பல இடங்களில் அவர்கள் சிதறி இருக்கலாம். அடர் காட்டில் அவர்களேத் தேடுவது எங்கே? ஜெர்மானியர் அவர்களேத் தேட முற்படுவார்களா? சந்தேகந் தான்: அது ஆபத்தான வேலே. சற்று அசந்து மறந்தால் போயிற்று. எதிரிகள் கண்டு கொள்வார்கள், தேவையான இடத்துக்குத் தகவல் கொடுத்து விடுவார்கள். ஆகவே, எத்தனே பெயர் மரம் வெட்டுகிருர்கள், அவர்கள் எங்கே இருக்கிருர்கள், அவர்களிடையே தகவல் தொடர்பு எப்படிப்பட்டது என்பதை ஒருபோதும் தெரிந்து கொள்ள முடியாது.

''ஆகா பெண்களே, சிங்கக் குட்டிகள் நீங்கள்!..''

சேமிப்பு அரணுக்குப் பின்னே ஓடியது சிற்ருறு. ஆழ மற்றது, ஆனுல் இரைச்சலுடன் பாய்ந்தது. ஆற்றின் கரையில் நீரை அடுத்து வளர்ந்திருந்தது காடு. ஆஸ்ப் மரச் சோலேகளும் புயலில் விழுந்த மரங்களும் பிர் மரப் பொழில்களும் அடர்ந்து பார்வை புக முடியாதபடி இருள் மண்டிக் கிடந்தது அங்கே. இரண்டு அடிகளுக்கு அப்பால் மனித

னுடைய பார்வை காட்டு மரங்களின் உயிருள்ள சுவரில் மோதித் தடுமாறியது. அதை ஊடுருவி அதன் மாறுதலைக் காணவோ அதன் ஆழத்தை வரையறுக்கவோ எவ்வளவு சிறந்த தொலைநோக்கி யாலும் முடியாது. பெண்களின் திட்டத்தைச் செயல்படுத்த முடிவு செய்தபோது வஸ்கோவ் இந்த இடத்தையே கருத்தில் கொண்டிருந்தான்.

நட்ட நடுவில், ஜெர்மானியர் நேரே அவர்களைக் காணும் படியான இடத்தில் காலியாவையும் சோனி யாவையும் இருக்கச் சொன்னான். நன்றாகப் புகை யும் விதத்தில் நெருப்புக்கள் மூட்டும்படியும் காடு அதிரக் கத்தி ஒருவரை ஒருவர் கூவி அழைக்கும்படி யும் கூறினான். ஆனாலும் புதர்களுக்கு வெளியே வெகு தூரம் போக வேண்டாம் என்று எச்சரித் தான். இங்கும் அங்கும் கொஞ்சம் தென்படலாம், கொஞ்சம் வெளியே வரலாம், ஆனால் நிரம்ப வேண்டாம் என்றான். நீள் சோடுகளையும் தொப்பி களையும் இடை வார்களையும்—இராணுவ சம்பந்த மானவை எல்லாவற்றையும் — கழற்றி வைத்து விடும்படி கூறினான்.

இட அமைப்பின்படி பார்த்தால், ஜெர்மானியர் இந்த நெருப்புக்களைச் சுற்றுவாகில் கடக்க இடப் புறமாகத்தான் முயற்சி செய்ய முடியும். வலப்புறம் செங்குத்துப் பாறைகள் ஆற்றை நோக்கி இருந்தன. சௌகரியமாகக் கடந்து செல்ல இங்கே வழி இல்லை. ஆனாலும் உறுதிப்படுத்திக் கொள்வதற்காக ரீதா அஸ்யானினுவை அங்கே இருக்கச் சொன்னான் வஸ் கோவ். சற்றே வெளித் தெரியும்படியும், ஆர வாரம் செய்யும்படியும், நெருப்பு மூட்டும்படியும் அவளுக்கும் உத்தரவிட்டான். இடது பகுதியைத்

தன் பொறுப்பிலும் ழேனியாவின் பொறுப்பிலும் ஏற்றுக்கொண்டான். வேறு மறைவிடம் இல்லை. தவிர அங்கிருந்து ஆற்று நீர்ப்பரப்பு முழுவதும் தெரிந்தது. ஜெர்மானியர் ஆற்றைக் கடக்கத் தீர் மானித்தால் இரண்டு மூன்று பெயரை அவன் அங் கிருந்தே சுட்டு வீழ்த்த முடியும், பெண்கள் ஓடித் தப்ப உதவியாக.

நேரம் கொஞ்சம்தான் இருந்தது. வஸ்கோவ் இன்னும் ஒரு பெண்ணைக் காவலுக்கு நிறுத்தி விட்டு, ரீதாவுடனும் ழேனியாவுடனும் அவசர அவசரமாக ஏற்பாடுகள் செய்வதில் முனைந்தான். நெருப்பு மூட்டு வதற்காக அவர்கள் சுள்ளிகள் சேகரித்துக் கொண் டிருக்கையில் அவன் மறைக்காமல் (ஜெர்மானியர் காதுகளில் படட்டும், அவர்கள் தயாராகட்டும்!) கோடரியால் மரங்களை வெட்டலானன். அதிக உயர மான, அதிக ஓசை செய்யும் மரங்களாகப் பார்த்து வெட்டினன். நெட்டித் தள்ளினல் விழுந்துவிடும் அளவுக்கு வெட்டிவிட்டு அடுத்த மரத்துக்கு ஓடி னன். வேர்வை கண்களை மறைத்தது, கொசுக்கடி தாங்க முடியவில்லை, மூச்சு திணறியது, ஆயினும் சார்ஜண்டு மேஜர் வெட்டிய வண்ணமாய் இருந் தான். சிறிது நேரத்தில் முன் இடத்திலிருந்து ஓடி வந்தாள் சோனியா. மறு கரையில் இருந்து கையை ஆட்டி, ''வருகிருர்கள், தோழர் சார்ஜண்டு மேஜர்!'' என்ருள்.

''அவரவர் இடங்களுக்குப் போங்கள்'' என்று கூறினன் வஸ்கோவ். ''அவரவர் இடங்களுக்குப் போங்கள், பெண்களா. ஆனல் ஒன்று மட்டும் உங்களை வெகுவாகக் கேட்டுக் கொள்கிறேன்: ஜாக்கிரதையாய் இருங்கள். மரங்களுக்குப் பின்னே

லேசாகத் தென்படுங்கள், புதர்களுக்குப் பின்னே அல்ல. கணீரென்று கத்திப் பேசுங்கள்...''

அவனுடைய படையினர் இடங்களுக்கு ஓடினார்கள். சோனியாவும் காலியாவும் மட்டும் மறு கரையில் வெகு நேரம் ஆலை பாய்ந்து கொண்டிருந்தார்கள். காலியா மரப்பட்டைச் சோட்டைச் சுற்றிக் கட்டியிருந்த பட்டித் துணிகளை அவிழ்க்க முடியாமல் திணறினாள். சார்ஜண்டு மேஜர் அவள் அருகே போனான்.

''பொறு, உன்னைத் தூக்கிக்கொண்டு போகிறேன்.''

''அட நீங்கள் என்ன, தோழர்...''

''பொறு என்கிறேன். தண்ணீர் பனிக் கட்டியாய்ச் சில்லிட்டிருக்கிறது. உனக்கோ காய்ச்சல் இன்னும் விடவில்லை.''

அளவு பார்த்தான், அவளை இரு கைகளாலும் அணைத்துத் தூக்கினான் (ப்பூ, ஐம்பது கிலோகிராம் இருந்தால் அதிகம்). அவள் ஒரு கையால் அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். திடீரென்று ஏதனாலோ முகம் சிவந்தாள்:

''என்னைக் குழந்தை போல் தூக்கிப் போகிறீர்கள்...''

சார்ஜண்டு மேஜர் அவளைக் கேலி செய்ய விரும்பினான்—அவள் வெறும் மரக்கட்டை அல்லவே—ஆனால் அவன் வாயிலிருந்து வெளிப்பட்டன முற்றிலும் வேறு சொற்கள்:

''அங்கே ஈரத்தில் ரொம்ப நடமாடாதே.''

தண்ணீர் அனேகமாக முழங்கால்கள் வரை வந்தது. சுரீர் என்று குத்தும் அளவுக்குச் சில்லிட்டிருந்தது. சோனியா ஸ்கர்ட்டைத் தூக்கிப் பிடித்த

வாறு முன்னே நடந்தாள். அவளுடைய மெலிந்த கால்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. சமநிலை தவருமல் இருப்பதற்காகச் சோடுகளை ஆட்டிய வாறு நடந்தாள். திரும்பிப் பார்த்தாள்.

''அடேயப்பா, தண்ணீர்தான் எப்படிக் குளிர்ந் திருக்கிறது!'' என்றவள் ஸ்கர்ட்டைச் சட்டென்று விட்டுவிட்டாள். அதன் ஓரம் தண்ணீரில் இழு பட்டது.

''ஸ்கர்ட்டு நுனியைத் தூக்கிப் பிடித்துக் கொள்!'' என்று கோபத்துடன் அதட்டினுன் கமாண் டர்.

அவள் புன்முறுவலுடன் நின்ருள்:

''இந்த உத்தரவு இராணுவ விதிகளில் இல்லை யே, தோழர் வஸ்கோவ்!'' என்ருள்.

தேவலையே, இன்னும் கேலி செய்கிருளே! இது வஸ்கோவுக்குப் பிடித்திருந்தது. மகிழ்ச்சி நிறைந்த மனநிலையில் தன் இடத்தை அடைந்தான். ழேனியா அதற்குள் நெருப்பு மூட்டியிருந்தாள்.

''பெண்களா, குதூகலமாக வேலை செய்யுங் கள்!'' என்று பெருங் குரல் எடுத்துக் கத்தினுன்.

தொலைவிலிருந்து ரீதா பதிலுக்குக் கத்தினுள்:

''ஏ-ஹே-ஹே! இவான் இவானவிச், ஓட்டு வண்டியை!''

அவர்கள் ஆரவாரித்தார்கள், வெட்டிய மரங் களைத் தள்ளி வீழ்த்திஞர்கள், ஒருவரை ஒருவர் கூவி அழைத்தார்கள், நெருப்புக்கள் மூட்டினுர்கள். ஆண் குரலும் கேட்க வேண்டும் என்பதற்காக சார் ஜண்டு மேஜரும் நடு நடுவே கத்தினுன். ஆனுல் அடிக்கடி வில்லோ மரச் செறிவில் மறைவாக

அமர்ந்து மறு புறம் இருந்த புதர்களைக் கூர்ந்து நோக்கினான்.

வெகு நேரம்வரை அங்கே எதையும் காண முடியவில்லை. படையினர் கத்திக் கத்தி அலுத்துப் போய்விட்டார்கள். அவன் வெட்டி முடித்திருந்த எல்லா மரங்களையும் ரீதாவும் ழேனியாவும் தள்ளி வீழ்த்தி விட்டார்கள். சூரியன் காட்டுக்கு உயரே வந்து ஆற்றை ஒளியுறுத்தலாயிற்று. ஆனால் மறு கரையில் புதர்கள் அசையாமல் மௌனம் சாதித்தன.

''போய்விட்டார்களோ, ஒரு வேளை?'' என்று காதோடு கிசுகிசுத்தாள் ழேனியா.

சைத்தானுக்கே வெளிச்சம், போயும் இருப்பார்கள் ஒருவேளை. வஸ்கோவ் பீரங்கிப் படைத் தொலைநோக்கி அல்லவே. ஜெர்மானியர் கரைவரை ஊர்ந்து வந்தது அவன் பார்வையில் படாமல் இருந்திருக்கலாம். அவர்களும் பட்டுத் தேரியவர்கள் ஆயிற்றே. இந்த மாதிரி வேலைக்குக் கண்ட பெயரை அனுப்ப மாட்டார்களே...

இவ்வாறு அவன் எண்ணமிட்டான். ஆனால் ழேனியாவிடம், ''பொறு'' என்று மட்டுமே சொன்னான்.

ஒரு கொம்பு, கிளை விடாமல் ஏற்கெனவே துருவிப் பார்த்துவிட்ட எதிர்க்கரைப் புதர்களுக்குள் மீண்டும் விழிகளால் துழாவினான். கண்ணீர் வரும் வரை கூர்ந்து பார்த்தான். கண்களைக் கொட்டிக் கையால் துடைத்தவன், திடுக்கிட்டான். ஆற்றின் மறு கரையில் ஆல்டர் மரச் சோலை அனேகமாக அவனுக்கு எதிரே அசைந்து சலசலத்தது. செம்பழுப்புக் கட்டை மயிர் அடர்ந்த இள முகம்

ஒன்று மரங்களற்ற இடைவெளியில் தென்பட்டது.

வஸ்கோவ் கையைப் பின்னே நீட்டி, உருண்ட முழங்காலைத் தொட்டு உணர்ந்து அழுத்தினன். ஷேனியா உதடுகளால் அவன் காதைத் தொட்டு, ''பார்க்கிறேன்'' என்ருள்.

இன்னும் ஒருவன் சற்று தூரத்தில் தென்பட்டான். முதுகுச் சுமைகள் இல்லாமல் இரண்டு பெயர் கரைக்கு வந்தார்கள் தானியங்கித் துப்பாக்கிகளைத் தயாராகப் பிடித்தவாறு, குரலொலிகள் ஆர்த்த எதிர்க் கரையை விழிகளால் துருவி ஆராய்ந்தார்கள்.

வஸ்கோவின் நெஞ்சு பகீர் என்றது. வேவு! காட்டை ஆராய்ந்து பார்த்து, மரம் வெட்டுவோரைக் கணக்கிட்டு, அவர்களுக்கு நடுவே புகுந்து செல்ல இடுக்கு கிடைக்குமா என்று தேடிக் காண ஜெர்மானியர் முடிவு செய்துவிட்டார்கள் போலும். அவனுடைய சூழ்ச்சிகள், கத்தல்கள், புகைகள், வெட்டி வீழ்த்திய மரங்கள், எல்லாம் ஒரு பயனும் இல்லாமல் வீணுகிவிட்டன: ஜெர்மானியர் திகிலடையவில்லை. இதோ அவர்கள் ஆற்றைக் கடந்து புதர்களுக்குள் மறைந்து, பெண்களின் குரல்களும், ஆரவாரமும் நெருப்புப் புகையும் வந்த திக்கில் பாம்புகள் போல ஊர்ந்து போய், விரல் விட்டு எண்ணி விஷயத்தைப் புரிந்து கொள்வார்கள். அதோடு... அதோடு தாங்கள் எதிரிகள் பார்வையில் பட்டு விட்டதையும் புரிந்து கொள்வார்கள்...

வஸ்கோவ் கிளையை அசைக்க அஞ்சியவனுக மெதுவாகக் கைத்துப்பாக்கியை எடுத்தான். இந்த இரண்டு பேரையும் அவன் நிச்சயமாக, அருகே நெருங்கும் போதே, தண்ணீரிலேயே சுட்டுத் தள்ளி

விடுவான். அப்போது மற்ற எல்லாத் தானியங்கித் துப்பாக்கிகளும் அவன்மேல் குண்டுகளைப் பொழி யும், அவனைச் சல்லடைக் கண்ணாகத் துளைத்து விடும், சந்தேகம் இல்லை. ஆனால் பெண்கள் ஓடி ஒளிய முடியலாமே. ழேனியாவை மட்டும் அனுப்ப முடிந்தால்...

அவன் திரும்பிப் பார்த்தான். ழேனியா அவன் பின்னால் மண்டியிட்டு, சீருடுப்பை வன்மத்துடன் கழற்றித் தரையில் எறிந்து விட்டு ஒளிவு மறைவு இல்லாமல் துள்ளி எழுந்தாள்.

''நில்லு!'' என்று கிசுகிசுத்தான் சார்ஜண்டு மேஜர்.

''ராயா, வேரா, வாருங்கள், நீந்திக் குளிப் போம்!'' என்று உரக்கக் கூவி அழைத்துவிட்டு, புதர்களை முறித்தவாறு நேரே நீருக்குப் பாய்ந்து ஓடினாள் ழேனியா.

வஸ்கோவ் எதற்காகவோ அவளுடைய சீருடுப் பை எடுத்து மார்போடு அழுத்திக் கொண்டான். அழகுக் கன்னி ழேனியாவோ வெயிலொளியில் தகதகத்த, கற்பாங்கான ஆற்று நீரை நெருங் கினாள்.

எதிர்க்கரையில் கிளைகள் நடுங்கின. அவற்றின் பின்னே மறைந்தன சாம்பல்பச்சை உருவங்கள். ழே னியா அவசரப்படாமல், முழங்கால்களை அசைத்து ஸ்கர்ட்டையும் சட்டையையும் கழற்றினாள். கறுப்பு உள்ளுடையைத் தடவிச் சரிப்படுத்திய படியே திடீரென்று கணீரென்ற குரலில் கத்திப் பாடத் தொடங்கினாள்:

''ஆப்பிளும் பேரியும் பூத்தனவே,
ஆற்றின் மேல் படருதே மூடுபனி...''

ஆகா, அவள்தான் அப்போது எவ்வளவு அழகாய் இருந்தாள்! மாயப் பதுமை போல வனப்புடன் திகழ்ந்தாள். உயரமான, ஒசியும் வெண் மேனி. தானியங்கித் துப்பாக்கிகளிலிருந்து ஒரு பத்து மீட்டர் தூரத்தில். பாட்டை நடுவில் நிறுத்தி விட்டு, மகிழ்ச்சிக் கூச்சலுடன் தண்ணீரில் நடந்து, களிப்பும் கும்மாளமுமாக நீரில் கைகால்களை அடித்துக் குளித்தாள். நீர்த் துளிகள் வெயிலில் மினுமினுத்தன, அவளுடைய விகுவுள்ள, கதகதப்பான மேனியில் வழிந்தோடின. கமாண்டர் மூச்சை அடக்கிக் கொண்டு, துப்பாக்கிக் குண்டு வரிசையை மனப் பதைப்புடன் எதிர்பார்த்தான். இதோ, இதோ குண்டு தாக்கும், ழேனியா நிலை பெயர்ந்து விழுவாள், கைகளை நீரில் அடிப்பாள், பிறகு...

புதர்கள் அரவமற்று இருந்தன.

''பெண்களா, குளிக்க வாருங்கள்!''.. என்று நீரில் குதித்தாடிக்கொண்டு களிப்புடன் உரக்கக் கூவி அழைத்தாள் ழேனியா. ''இவானையும் கூப்பிடுங்கள்! அடே இவான், எங்கே இருக்கிறாய்?''

வஸ்கோவ் அவளுடைய உடுப்பை எறிந்து, கைத் துப்பாக்கியை உறையில் நுழைத்துவிட்டு, தவழ்ந்து காட்டுக்கு உள்ளே, அடர்ந்த பகுதிக்குப் போனான். கோடரியை எடுத்துக் கொண்டு இன்னும் பின்னே ஓடி தேவதாரு மரம் ஒன்றை வன்மத்துடன் வெட்டினான்.

''ஏஹே-ஹே, வருகிறேன்!..'' என்று கத்திவிட்டு மறுபடி அடிமரத்தைக் கோடரியால் அடித்தான். ''இதோ வருகிறோம் பொறு!.. ஓ-ஹோ-ஹோ-ஹோ!''

பிறந்தது முதல் இது வரை முன் ஒருபோதும் அவன் இவ்வளவு விரைவாக மரங்களை வெட்டித் தள்ளியது கிடையாது. எங்கிருந்துதான் இவ்வளவு பலம் வந்ததோ. வெட்டிய மரத்தைத் தோளால் அழுத்தி உலர்ந்த பிர் மரச் சோலையில் விழும்படி தள்ளினன்—சத்தம் அதிகமாய்க் கேட்க வேண்டும் என்பதற்காக. மூச்சு இரைக்கத் திரும்பி ஓடி, தான் பார்வையிட்டுக் கொண்டிருந்த இடத்தை அடைந்து எதிரே பார்வை செலுத்தினன்.

ழேனியா அவனுக்கும் ஜெர்மானியருக்கும் விலாவைக் காட்டியவாறு கரையில் நின்று கொண்டிருந்தாள். மெல்லிய சட்டையை நிதானமாக மாட்டிக் கொண்டாள். பட்டுச் சட்டை ஒட்டிக் கொண்டது, உடம்பில் பட்டு நனைந்தது. காட்டின் பின்னிருந்து எறித்த வெயிலொளியில் அது கண்ணுடி போல மேனி எழிலைக் காட்டியது. ழேனியா இதை அறிந்திருந்தாள். தெரிந்தேதான் அவசரமின்றி ஒயிலுடன் வளைந்து கூந்தலைத் தோள்கள் மேல் போட்டுக் கொண்டாள். எதிர்க்கரைப் புதர்களின் பின்னிருந்து தானியங்கித் துப்பாக்கிக் குண்டு வரிசை வெடித்துக் கிளம்பும், அவளைத் தாக்கி இளமைப் பூரிப்புள்ள அவள் மேனியை விகாரப்படுத்தி வீழ்த்தும் என்று மறுபடியும் பதை பதைப்புடன் எதிர்பார்த்தான் வஸ்கோவ்.

வெண்மை பொலிந்த அங்கங்கள் ஒளிர, நனைந்த உள்ளாடையைச் சட்டையின் அடி வழியே கழற்றிப் பிழிந்து பாறை மேல் பாங்காகப் பரப்பினுள் ழேனியா. அதன் பக்கத்தில் கால்களை நீட்டி அமர்ந்து, தரை வரை நீண்ட அடர் குழலை வெயிலில் காட்டினுள்.

எதிர்க்கரை மௌனமாய் இருந்தது. அங்கே சந்தடி இல்லை, புதர்கள் எங்கும் அசைவில்லை. ஜெர்மானியர் அங்கேதான் இருக்கிறார்களா, இல்லை, போய்விட்டார்களா என்று எவ்வளவோ கூர்ந்து பார்த்தும் வஸ்கோவால் புரிந்து கொள்ள முடிய வில்லை. ஊகம் செய்து கொண்டிருக்க நேரமில்லை. கமாண்டர் சீருடுப்பைச் சட்டெனக் களைந்து விட்டு, சுருக்குச் சராயின் பையில் கைத்துப்பாக்கியை வைத்துக் கொண்டு, விழுந்த சுள்ளிகளையும் சருகு களையும் ஓசையுடன் மிதித்தவாறு கரைக்குச் சென்று ''எங்கே இருக்கிறாய் நீ?'' என்று கத்தினான்.

அவன் குரலில் களிப்பைக் காட்ட முயன்றான். முடியவில்லை. தொண்டை கம்மியது. புதர்களிலி ருந்து வெளிப்பட்டுத் திறந்த இடத்துக்கு வந்தான். பயத்தால் நெஞ்சு பழு வெலும்புகளை முறித்து விடும் போலப் படபடத்தது. ழேனியாவை நெருங் கினான்.

''வட்டார மையத்திலிருந்து போன் செய்தார் கள். இதோ லாரி அனுப்புகிறார்களாம். உடை மாட்டிக்கொள். வெயில் காய்ந்தது போதும். புறப் படு'' என்றான்.

மறு கரையில் கேட்க வேண்டும் என்று உரக்கக் கத்தினான். ழேனியா சொன்ன பதில் அவன் காதில் விழவில்லை. அவனுடைய கவனம் எல்லாம் இப் போது எதிர்க் கரையில் புதர் மறைவில் இருந்த ஜெர்மானியர் மீதே பதிந்திருந்தது. அங்கே ஓர் இலை அசைந்தாலும் தனக்குக் கேட்டுவிடும், உடனே இந்தப் பாறையின் பின்னே விழுந்து கைத்துப்பாக் கியை எடுத்துக் கொள்ள முடியும் என்று தோன்றும் அளவுக்கு அவன் கவனம் அக்கரையில் பதிந்திருந்

தது. ஆனால் இப்போதைக்கு அங்கே எதுவும் அசைய வில்லை.

ழேனியா அவன் கையைப் பற்றி இழுத்தாள். அவன் அருகே உட்கார்ந்தான். அவள் புன்னகை செய்வதையும் விரியத்திறந்த அவளுடைய விழிகளில் திகில், கண்ணீர் போன்று நிறைந்து ததும் புவதையும் திடீரெனக் கண்டான், அது பாத ரசம் போன்று உயிர்த்துடிப்பும் கனமும் உள்ள திகில்.

முடிந்தவரை முயன்று முறுவலித்துக் கொண்டே, ''போய்விடு இங்கிருந்து, ழேனியா'' என்றான் வஸ்கோவ்.

அவள் ஏதோ சொல்லி உரக்கச் சிரித்தாள். ஆனால் வஸ்கோவால் எதையும் கேட்க முடியவில்லை. அவளைப் புதர் மறைவுக்கு உடனே இட்டுச் செல்வது அவசியமாய் இருந்தது. ஏனென்றால் அவள் கொல்லப்படுவதை எதிர்பார்த்து ஒவ்வொரு விநாடியையும் எண்ணுவதற்கு இனி அவனால் முடியாது என்று தோன்றியது. ஆனால் எல்லாம் சகஜமாய் இருக்கும்படி, இதெல்லாம் நடிப்பு, நாம் முட்டாள்கள் ஆக்கப் படுகிறோம் என்பதைப் பாழும் ஜெர்மன்காரர்கள் புரிந்துகொள்ளாத விதத்தில் இதைச் செய்வதற்கு ஏதேனும் தந்திரம் பண்ண வேண்டியிருந்தது.

''நீ மரியாதையாக வழிக்கு வராவிட்டால், உன் கோலத்தை எல்லோருக்கும் காட்டுகிறேன் பார்!'' என்று திடீரெனக் கத்தி, பாறைமேலிருந்து அவளுடைய ஆடைகளை எடுத்துக் கொண்டான் சார்ஜண்டு மேஜர். ''எங்கே, பிடி பார்க்கலாம்!''

ழேனியா சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமாக

வீரிட்டு, துள்ளி எழுந்து அவன் பின்னே பாய்ந்தோடினுள். வஸ்கோவ் முதலில் கரையோரமாக அவளிடமிருந்து விலகித் தப்பியவாறு ஓடினுன். பிறகு புதர்களுக்குப் பின் நழுவி ஓடியவன் காட்டுக்குள் வெகு தூரம் புகுந்த பின்பே நின்ருன்.

''உடுத்துக் கொள்! போதும் நெருப்போடு விளையாடியது! போதும்!''

முகத்தை மறு புறம் திருப்பிக் கொண்டு உடையை அவள் பக்கம் நீட்டினுன். அவள் வாங்கிக் கொள்ளவில்லை. அவன் கை அந்தரத்தில் தொங்கியது. திட்ட நினைத்தவன் திரும்பிப் பார்த்தான். படையினள் கமெல்கோவா கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தரையில் குன்றிக் குறுகி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய உருண்ட தோள்கள் நடுங்கின...

பிறகு தான் அவர்கள் இதை நினைத்து விழுந்து விழுந்து சிரித்தார்கள். அதாவது, ஜெர்மானியர் போய் விட்டார்கள் என்று தெரிந்த பிறகு. தொண்டை கம்மிய ரீதாவையும் ஸ்கர்ட்டைப் பொசுக்கிக் கொண்ட சோனியாவையும் அழுக்கேறிய காலியாவையும் ஜெர்மானியரை ஏமாற்றிய ழேனியாவையும் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவையும் கேலி செய்து சிரித்தார்கள். கண்ணீர் வரும் வரை, வயிறு அறுந்து போகும்படி சிரித்தார்கள். அவனும் தான் சார்ஜண்டு மேஜர் என்பதை மறந்து அவர்களோடு சேர்ந்து சிரித்தான். ஜெர்மானியர் கண்களில் மண் தூவி விட்டோம், துணிச்சலாக, குறும்புத்தனமாக ஏய்த்து விட்டோம், இப்போது இந்த ஜெர்மானியர் அச்சமும் கலவரமும் அடைந்து லெகோன்தவோ ஏரியைச் சுற்றி நாள் முழுதும் நடக்க வேண்டியிருக்

கும் என்பது ஒன்று தான் அவனுக்கு நினைவு இருந்தது.

''இனிமேல் அவ்வளவுதான்!'' என்று அவர்களுடைய குதூகலப் பேச்சுக்களுக்கு நடுவே வாய்ப்பு கிடைத்தபோது கூறினான் வஸ்கோவ். ''இப்போது எல்லாம் முடிந்தது, பெண்களா. இனி அவர்களால் தப்ப முடியாது, அதாவது, பிரீச்கினா நேரத்தோடு முகாம் போய்ச் சேர்ந்தால்.''

''சேர்ந்து விடுவாள், அவள் துடியானவள்'' என்று கரகரத்த குரலில் சொன்னாள் ரீதா. உடனே எல்லோரும் மறுபடி கெக்கலித்தார்கள், ஏனென்றால் ரீதாவுக்குத் தொண்டை கட்டிக் கொண்டிருந்தது வேடிக்கையாய் இருந்தது.

''வாருங்கள், இந்தக் காரியத்துக்காக ஆளுக்குக் கொஞ்சம் குடிப்போம்'' என்று விலைமதிப்புள்ள மதுப் புட்டியை எடுத்தான் கமாண்டர். ''லீஸாவின் விரைவான கால்களையும் உங்கள் ஒளி வீசும் மூளைகளையும் வாழ்த்திக் குடிப்போம்.''

உடனே எல்லோரும் பரபரப்போடு வேலையில் முனைந்தார்கள். துவாலையைப் பாறைமேல் விரித்தார்கள், ரொட்டியையும் கொழுப்பையும் துண்டு போட்டார்கள், மீனைப் பங்கிட்டார்கள். அவர்கள் பெண்களுக்கு உரிய இந்தக் காரியங்களில் ஈடுபட்டிருந்த போது சார்ஜண்டு மேஜர், ஆடவனுக்கு உரிய முறையில் எட்ட உட்கார்ந்து புகை பிடித்தவாறு அவர்களுடைய அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மிகப் பயங்கரமான விஷயம் முடிந்து விட்டது என்று களிப்புடன் நினைத்துக் கொண்டான்...

## 7

லீஸா பிரீச்கிஞ இந்தப் பத்தொன்பது ஆண்டு களாக எப்போதும் மறு நாள் பற்றிய உணர்விலே யே வாழ்ந்து வந்தாள். கண்கள் கூசும்படி ஒளி வீசும் இன்பம் பற்றிய பொறுக்க முடியாத முன்னு ணர்வு ஒவ்வொரு நாள் காலையிலும் அவளைத் தகிக் கும். அதே கணத்தில் தாயாரின் சோர்வூட்டும் இரு மல் களிகொண்டாட்டச் சந்திப்பை மறு நாளைக்குத் தள்ளிப் போட்டு விடும். அழிக்காது, அடிக்காது— வெறுமே தள்ளிப் போட்டுவிடும்.

''நம் அம்மா செத்துப் போவாள்'' என்று கடுமையாக எச்சரிப்பார் தகப்பஞர்.

ஐந்து ஆண்டுகளாக அவர் ஒவ்வொரு நாளும் இந்தச் சொற்களால் அவளுக்கு முகமன் தெரிவித்து வந்தார். பன்றிக்கும் ஆடுகளுக்கும் கிழக் குதிரைக் கும் தீனி வைப்பதற்காக லீஸா வெளி முகப்புக்குப் போவாள். தாயாரைக் குளிப்பாட்டி, மாற்றுடை அணிவித்து, கரண்டியால் உணவு ஊட்டுவாள். சமையல் செய்வாள், வீட்டைக் கூட்டுவாள், தகப் பஞருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்வாள், பக்கத்துக் குடியிருப்புக்குப் போய் ரொட்டி வாங்கி வருவாள். அவளுடைய தோழிகள் பள்ளிப்படிப் பை எப்போதோ முடித்து விட்டார்கள். சிலர் மேல் படிப்புக்காக வெளியூர் போய்விட்டார்கள், வேறுசிலர் மணம் செய்து கொண்டு விட்டார்கள். லீஸாவோ உணவு ஊட்டிஞள், கழுவிக் குளிப்பாட் டிஞள், கூட்டிப் பெருக்கிஞள், மறுபடி உணவு ஊட் டிஞள். அதே சமயம் மறுநாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

இந்த மறு நாள் அவளுடைய கற்பனையில் தாயாரின் மரணத்தோடு ஒரு போதும் தொடர்பு கொண்டிருக்கவில்லை. தாயார் உடல் நலத்துடன் இருந்ததைச் சிரமத்துடன் தான் அவளால் நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தது. ஆனால் லீஸாவினுள் எத்தனையோ மனித வாழ்க்கைகள் நிறைந்திருந்தன ஆகையால் சாவைப் பற்றிய எண்ணத்துக்கே அங்கே இடம் இல்லை.

தகப்பனார் சலிப்பூட்டும் கடுமையுடன் ஓயாமல் நினைவு படுத்திக் கொண்டிருந்த சாவுக்கு மாறாக வாழ்க்கை எதார்த்தமான, உணரக் கூடிய விஷயமாக இருந்தது. அது ஒளி வீசும் மறு நாளில் எங்கோ மறைந்திருந்தது. காட்டின் ஒரு மூலையில் இருந்த இந்த எல்லைக் குடியிருப்பை விட்டு இப்போதைக்கு அது விலகிச் சென்றது. ஆனாலும் இந்த வாழ்க்கை நிலவுகிறது, தான் அதை அனுபவிக்கப் பிறந்தவள், மறு நாள் வரும் வரை காத்திராமல் இருக்க எப்படி முடியாதோ அப்படியே வாழ்க்கையை அனுபவிக்காமல் விடவும் முடியாது என்று லீஸா உறுதியாக நம்பினாள். காத்திருக்க லீஸாவால் முடிந்தது.

பதினான்காம் வயது முதல் மாதரின் இந்தப் பெருங்கலையைக் கற்க அவள் தொடங்கினாள். தாயாரின் நோய் காரணமாகப் பள்ளிப் படிப்பை விட நேர்ந்ததும், ஆரம்பத்தில் அவள் வகுப்புக்குத் திரும்பும் நாளை எதிர்பார்த்தாள். பின்னர் தோழிகளுடன் சந்திப்புக்காகக் காத்திருந்தாள். பிற்பாடு, அரிதாக ஒழிவு கிடைக்கும் மாலைகளில் பொழுது போக்குக் கழகத் திடலில் நடனம் ஆடும் வாய்ப்பை எதிர்பார்த்தாள், பின்பு...

பின்பு எதிர்பார்ப்பதற்கு எதுவுமே இல்லை என்ற நிலை அவளுக்குத் திடீரென ஏற்பட்டது. அவளுடைய தோழிகள் ஒன்ளு இன்னும் படித்துக் கொண்டிருந்தார்கள், அல்லது அவளிடமிருந்து தொலைவில் வேலை செய்து வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்குச் சொந்த அக்கறைகள் இருந்தன. அவற்றில் லீஸாவின் ஈடுபாடு நாளடைவில் அற்றுப் போயிற்று. பொழுதுபோக்குக் கழகத்தில் நிகழ்ச்சிகள் தொடங்கு முன் எந்த இளைஞர்களுடன் எளிதாகவும் சகஜமாகவும் பேசிச் சிரிக்க முடிந்ததோ அவர்கள் இப்போது வேற்ருராக, கேலிக்கு உரியவர்களாக மாறி விட்டார்கள். லீஸா ஆட்களிடமிருந்து கூசி விலகவும், பேசாதிருக்கவும் கலகலப்பான தோழிகள், தோழர்களைத் தவிர்க்கவும் தொடங்கினுள். அப்புறம் கழகத்துக்குப் போவதையே நிறுத்திவிட்டாள்.

இவ்வாறு சென்றுவிட்டது அவளுடைய பிள்ளைப் பருவம். பழைய நண்பர்களும் அதோடு போய் விட்டார்கள். புதிய நண்பர்களும் ஏற்படவில்லை. ஏனென்ருல் மரம் வெட்டும் காட்டாள்கள் தவிர வேறு யாரும் அவர்கள் வீட்டின் மண்ணெண்ணெய் விளக்கு வெளிச்சத்தை நாடி வருவதில்லை லீஸாவுக்குக் கசப்பாகவும் பயங்கரமாகவும் இருந்தது, ஏனென்ருல் பிள்ளைப் பருவத்தின் இடத்தில் என்ன வரும் என்று அவளுக்குத் தெரியவில்லை. கலவரத்திலும் ஏக்கத்திலும் கழிந்தது ஆளரவம் அற்ற பனிக் காலம். இளவேனிலில் தகப்பஞர் ஒரு வேட்டைக் காரரை அழைத்து வந்தார்.

''நம் வீட்டில் தங்க விரும்புகிருர்'' என்று மகளிடம் கூறினுர் தந்தை. ''ஆனுல் நம் வீட்டில் இடம்

எங்கே? இங்கே தான் அம்மா சாகச் கிடக்கிருளே.''

''தீனிப்புல் பரண் இருக்குமே?'' என்ருர் விருந்தினர்.

''இன்னும் குளிராய் இருக்கிறதே'' என்று தயக்கத்துடன் சொன்ஞள் லீஸா.

''ஆட்டுத் தோல் மேல்கோட்டு தருவீர்களா?..''

தகப்பஞரும் விருந்தாளியும் சமையல் அறையில் உட்கார்ந்து வெகு நேரம் வரை வோத்கா குடித்துக் கொண்டிருந்தார்கள். பலகைச் சுவரின் மறு புறம் லொக்கு லொக்கென்று இருமிக் கொண்டிருந்தாள் தாயார். லீஸா நிலவறைக்குப் போய் முட்டைக் கோசு எடுத்து வந்தாள், முட்டைக் கோசு பொரியல் செய்தாள், ஆண்கள் பேசிக் கொண்டதைக் கேட்டாள்.

தகப்பஞர் தாம் அதிகமாகப் பேசிஞர். குவளை குவளையாக வோத்கா பருகிஞர், தட்டிலிருந்த கோசுக் கறியை விரல்களால் எடுத்து, அடர் தாடி மீசையின் இடையே வாய்க்குள் நுழைத்துக் கொண்டு சவைத்து விழுங்கியவாறே ஓயாமல் பேசிஞர்.

''நீ பொறு தம்பீ, பொறு. வாழ்க்கை காட்டைப் போல. அதை வெட்டிச் சுத்தப் படுத்துவது அவசியம், அப்படித்தானே சொல்கிருய்? பொறு. பட்டுப் போன மரம், நோய்ப்பட்ட அடிமரங்கள், புதர்கள் எல்லாவற்றையும். அப்படித் தானே?''

''சுத்தப்படுத்த வேண்டும். வெட்ட வேண்டாம், சுத்தப்படுத்த வேண்டும். களைகளை வயலிலிருந்து பிடுங்கி எறிய வேண்டும்'' என்ருர் விருந்தினர்.

''சரி'' என்ருர் தகப்பஞர். ''சரி, பொறு. காடு என்ருல் காட்டுக் காவலர்களான எங்களுக்குப் புரிகிறது. இதை நாங்கள் புரிந்து கொள்வோம், இது

காடு என்பதால். ஆனால் இது பிராணி என்றாலோ? இதில் உயிர்ச் சூடு இருக்கிறது, இது ஓடுகிறது, கத்து கிறது என்றாலோ?''

''ஓநாய் என்று வைத்துக் கொள்வோம், உதா ரணத்துக்கு...''

''ஓநாயா?'' என்று சிலுப்பிக் கொண்டு கிளம் பினார் தகப்பனார். ''ஓநாய் உனக்கு இடைஞ்சலாய் இருக்கிறதா? ஏன் இடைஞ்சலாய் இருக்கிறது? எதனால்?''

''எதனால் என்றால் அதனிடம் பற்கள் இருப்ப தால்தான்'' என்று புன்னகைத்தார் வேட்டைக் காரர்.

''ஓநாயாகப் பிறந்தது அதன் குற்றமா என்ன? அது குற்றவாளியா? இல்லை, தம்பீ, நாம்தான் அதைக் குற்றவாளி ஆக்கி விட்டோம். அதைக் கேளாமலே அதைக் குற்றவாளி ஆக்கி விட்டோம். இது மனச் சான்றுக்கு அடுக்குமா?''

''இதோ பாருங்கள், ஓநாயும் மனச் சான்றும் ஒன்றுக்கொன்று பொருந்தாத வார்த்தைகள்.''

''பொருந்தாதவையோ? ஊம், ஓநாயும் முய லும் பொருந்துபவை தாமா? கனைக்காதே, பொறு தம்பீ!.. நல்லது, ஓநாய்கள் மக்களின் பகைவர்கள் என்று எண்ணும்படி உத்தரவு ஆயிற்று. சரி, நாம் அவற்றை ஒழிக்கும் வேலையில் ஒருமித்து ஈடுபட் டோம், ருஷ்யா முழுவதிலும் இருந்த ஓநாய்கள் எல்லாவற்றையும் எல்லா மக்களுமாகச் சேர்ந்து சுட்டுக் கொன்று விட்டோம் என்று வைத்துக் கொள்! எல்லா ஓநாய்களையும் கொன்றுவிட்டோம்!.. அப்புறம் என்ன ஆகும்?''

''ஆவது என்ன? வேட்டைக்கு நிறைய விலங்கு

கள் கிடைக்கும்'' என்று புன்னகை செய்தார் வேட்டைக்காரர்.

''குறைவாக!..'' என்று கத்தி, மயிரடர்ந்த முட்டியால் பெரிய மேஜை அதிரும்படி ஓங்கிக் குத்தினார் தகப்பனார். ''குறைவாகவே கிடைக்கும், புரிகிறதா உனக்கு? விலங்குகள் ஆரோக்கியமாய் இருப்பதற்கு ஓட வேண்டும். ஓட வேண்டும், தம்பீ, புரிந்ததா? ஓடுவதற்குத் திகில் வேண்டும். வேறு விலங்கு அடித்துத் தின்று விடுமோ என்ற பயம் வேண்டும். ஆமாம். ஒரே மாதிரிப் பிராணிகள் மட்டுமே வாழும்படி ஏற்பாடு செய்யலாம்தான். அது முடியும். ஆனால் எதற்காக? அமைதிக்காகவா? அப்போது முயல்கள் கொழுப்பேறிச் சோம்பேறிகள் ஆகிவிடும், உழைப்பதை நிறுத்தி விடும், ஓநாய்கள் இல்லாததால். பிறகு? சொந்தமாக ஓநாய்களை வளர்க்கத் தொடங்குவோமா அல்லது வெளிநாடுகளிலிருந்து விலைக்கு வாங்குவோமா—பயம் உண்டாக்குவதற்காக?''

''ஆமாம், நீர் பணக்கார விவசாயியாய் இருந்தீரோ? உம் உடைமைகள் பறிக்கப் பட்டுவிட்டனவோ?'' என்று திடீரென அமைதியாக வினவினார் விருந்தாளி.

''என் உடைமைகளையாவது, பறிப்பதாவது? என்னிடம் இருந்த உடைமை எல்லாம் இரண்டு கைகளும் வீட்டுக்காரியும் மகளும் தான். என் உடைமையைப் பறிப்பதில் அவர்களுக்கு லாபம் இல்லை.''

''அவர்களுக்கா?''

''சரி, நமக்கு என்று வைத்துக்கொள்ளேன்!'' தகப்பனார் குவளையில் வோத்கா ஊற்றி, விருந்தாளியின் குவளையோடு தம் குவளையை சம்பிரதாயப்

படி மோதினுர். ''நான் ஓநாய் அல்ல, முயல்'' என்று கூறி வோத்காவைப் பருகி மேஜையை ஓசையுடன் நகர்த்திவிட்டு எழுந்தார். அடர் தாடி மீசையும் பரட்டைத் தலையுமாக அவர் கரடி போலக் காட்சி அளித்தார். கதவுவரை சென்று நின்ருர். ''நான் தூங்கப் போகிறேன். உனக்கு மகள் வழி காட்டுவாள்'' என்ருர்.

லீஸா ஒரு மூலையில் அமைதியாக உட்கார்ந்திருந்தாள். வேட்டைக்காரரர் நகரவாசி, பளிச்சிடும் வெண்பற்கள் கொண்ட இளைஞர். இது அவளுக்குக் கூச்சம் உண்டாக்கிற்று. அவரையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தவள், அவருடைய பார்வையைச் சந்திக்க நேருமோ என்று பயந்து, சமயத்தில் கண்களைத் திருப்பிக் கொண்டாள். அவர் பேசத் தொடங்குவார், நம்மால் பதில் சொல்ல முடியாது, அல்லது அசட்டுத்தனமாக ஏதேனும் சொல்லி வைப்போம் என்று அஞ்சினுள்.

''உங்கள் தகப்பனுர் ஜாக்கிரதை இல்லாதவர்.''

''அவர் செம்படை கொரில்லா வீரர்'' என்று சட்டெனக் கூறினுள் லீஸா.

''அது எங்களுக்குத் தெரியும்'' என்று புன் முறுவலுடன் சொல்லி எழுந்தார் விருந்தாளி. ''என்னைத் தூங்கும் இடத்துக்கு அழைத்துப் போங்கள், லீஸா.''

தீனிப்புல் பரண் நிலவறை போல இருள் அடர்ந்திருந்தது. லீஸா கதவருகே நின்ருள், சற்று யோசனை செய்தாள், கனத்த ஆட்டுத் தோல் கோட்டையும் தலையணையையும் விருந்தாளியிடமிருந்து வாங்கிக் கொண்டாள்.

''கொஞ்ச நேரம் இங்கே நில்லுங்கள்.''

ஆட்டங்கண்ட ஏணியில் ஏறி மேலே போய், தீனிப்புல்லை மேல் கீழாக மாற்றிப் பரப்பி, தலைப் பக்கம் தலையணையைப் போட்டாள் லீஸா. இறங்கி விருந்தாளியை அழைத்திருக்கலாம். ஆனால் அவளோ, உன்னிப்பாக உற்றுக் கேட்டவாறு இருட்டில் மெத்தென்ற முந்திய ஆண்டுப் புல் மேல் தவழ்ந்து, அதைப் பிரித்து அதிக சௌகரியமாய் இருக்கும்படி பரப்பிக் கொண்டிருந்தாள். விருந்தாளி ஏறி வருவதால் ஏணிப்படிகள் கிரீச்சிடுவதைத் தான் எதிர்பார்த்ததாகவும், இருட்டில் பரபரப்பான, அர்த்தமற்ற சந்திப்பையும் அவனுடைய மூச்சுக் காற்றையும் இரகசியப் பேச்சையும் முரட்டுத் தனத்தையும் கூட விரும்பியதாகவும் அவள் தனக்குத் தானே ஒரு போதும் ஒப்புக்கொண்டிருக்க மாட்டாள். இல்லை, பாவ எண்ணங்கள் எவையும் அவள் மனத்தில் எழவில்லை. அவள் விரும்பியது எல்லாம், திடீரென்று இருதயம் முழு வலிமையுடன் அடித்துக்கொள்ள வேண்டும், மங்கிய, வெப்பம் நிறைந்த ஏதோ ஒன்று நேரும் என்று தோன்ற வேண்டும், இந்தத் தோற்றம் சற்று நேரத்தில் மறைந்துவிட வேண்டும் என்பதுதான்.

ஆனால் யாரும் ஏணியில் ஏறி வரவில்லை. லீஸா இறங்கினாள். விருந்தாளி கதவருகே சிகரெட்டு புகைத்துக் கொண்டிருந்தார். தீனிப்புல் பரணில் புகை பிடிக்கக் கூடாது என்று லீஸா கோபத்துடன் சொன்னாள்.

''எனக்குத் தெரியும்'' என்று சிகரெட்டுத் துண்டைக்காலால் தேய்த்து அணைத்தார் விருந்தாளி. ''நல் இரவு!''

இவ்வாறு கூறி உறங்கப் போய்விட்டார். லீஸா

பாத்திரங்களைக் கழுவி வைக்க வீட்டுக்குச் சென்றாள். வழக்கத்தை விட மெதுவாக, மிகுந்த கவனத்துடன் பாத்திரங்களைக் கழுவி ஒவ்வொரு தட்டையும் துடைத்து வைத்துக்கொண்டிருக்கையில் சன்னல் கதவு தட்டப்படுவதை மீண்டும் கலவரமும் நம்பிக்கையும் ததும்ப எதிர்பார்த்தாள். ஆனால் இப்போதும் ஒருவரும் தட்டவில்லை. லீஸா விளக்கை ஊதி அணைத்து விட்டுத் தன் இடத்துக்குப் போனாள். அங்கே வழக்கம் போலத் தாயாரின் இருமலும் குடித்த தகப்பனாரின் ஆழ்ந்த குறட்டைச் சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு நாளும் காலையில் விருந்தாளி வீட்டிலிருந்து வெளியேறிவிடுவார், இருட்டும் தறுவாயில் தான் திரும்பி வருவார். லீஸா அவருக்கு உணவு பரிமாறுவாள். அவர் விரைவாக, ஆனால் பேராசைப் படாமல் சாப்பிடுவார். இது லீஸாவுக்குப் பிடித்திருந்தது. சாப்பிட்டானதுமே அவர் தீனிப்புல் பரணுக்குப் போய்விடுவார். புல்லைப் பரப்பி விரிப்பது மேற்கொண்டு தேவைப் படவில்லை ஆதலால் லீஸா வீட்டிலேயே இருந்துவிடுவாள்.

''நீங்கள் வேட்டையிலிருந்து ஒன்றும் கொண்டு வருவதில்லையே, ஏன்?'' என்று ஒரு நாள் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் லீஸா.

''வேட்டை கிடைக்க மாட்டேன் என்கிறது'' என்று அவர் புன்னகை செய்தார்.

''இளைத்துப் போனதுதான் மிச்சம். இதுவும் ஓய்வு ஆகுமா?'' என்று அவரைப் பாராமலே சொன்னாள் அவள்.

''இது அருமையான ஓய்வு, லீஸா'' என்று பெரு

மூச்சு விட்டார் விருந்தாளி. ''அதுவும் முடிந்து விட்டதுதான் வருத்தம் அளிக்கிறது. நாளை போய் விடுவேன்.''

''நாளைக்கா?'' என்று ஈன சுரத்தில் வினவினுள் லீஸா.

''ஆமாம், காலையில். ஒரு பிராணியைக் கூடச் சுடவில்லை. வேடிக்கை இல்லையா?''

''வேடிக்கைதான்'' என்று துயரம் ததும்ப உரைத்தாள் லீஸா.

அதற்கு மேல் அவர்கள் பேசிக்கொள்ளவில்லை. ஆனால் அவர் போனதுமே லீஸா சமையலறையை ஏனோ தானோ வென்று ஒழுங்குபடுத்திவிட்டு முகப் புக்கு ஓடிச் சென்றுள். வெகு நேரம் சவுக்கையைச் சுற்றிச் சுற்றி வந்தாள். விருந்தாளி மூச்சு விடுவதை யும் இருமுவதையும் கேட்டாள். விரல் நகங்களைக் கடித்தாள், பின்பு சவுக்கைக் கதவை ஓசைப் படாமல் திறந்து, எண்ணம் மாறிவிடுமோ என்ற அச்சத்தால் விரைவாகத் தீனிப் புல் பரண்மேல் ஏறினுள்.

''யார் அது?'' என்று தணிந்த குரலில் கேட்டார் விருந்தாளி.

''நான் தான்'' என்றுள் லீஸா. ''விரிப்பை ஒரு வேளை சரிப்படுத்த வேண்டுமோ...''

''வேண்டாம்'' என்று அவளை இடைமுறித்தார் விருந்தாளி. ''போய்த் தூங்கு.''

தீனிப் புல் பரணின் புழுக்கம் நிறைந்த இருட்டில் அவருக்கு மிக நெருக்கமாக உட்கார்ந்து மௌனமாய் இருந்தாள் லீஸா. அவள் முழு முயற்சி யுடன் அடக்கிக் கொண்ட பெரு மூச்சு அவர் காதில் பட்டது.

''என்ன, சலிப்பாய் இருக்கிறதா?''

''ஆமாம்'' என்று அனேகமாக வாய்க்குள் முனகினுள் லீஸா.

''சலிப்பாய் இருந்தாலும் கூட மடத்தனம் செய்வது சரி அல்ல.''

அவர் புன்னகை செய்வதாக லீஸாவுக்குத் தோன்றியது. அவளுக்கு எரிச்சல் மண்டியது. அவர் மேலும் தன்மேலும் வெறுப்பு உண்டாயிற்று. ஆனுலும் உட்கார்ந்திருந்தாள். எதற்காக இங்கே வந்தோம், ஏன் உட்கார்ந்திருக்கிறோம் என்பது அவளுக்குத் தெரியவில்லை. அவள் தனியளாய் இருந்தாள், தனிமைக்குப் பழகியிருந்தாள், எனவே அவள் அனேகமாக ஒருபோதும் அழுத்து கிடையாது. தன்மேல் யாரேனும் பரிவு காட்ட வேண்டும் என்று இப்போது அவளுக்கு அடக்க முடியாத விருப்பம் உண்டாயிற்று. யாரேனும் அன்பு ததும்பும் சொற்களைக் கூற வேண்டும், தலையை வருட வேண்டும், தேற்ற வேண்டும், ஒருவேளை, முத்தமிடவும் வேண்டும் (இதை அவள் தனக்குத் தானே கூட ஒப்புக்கொண்டிருக்க மாட்டாள்) என்று அவள் ஆசைப் பட்டாள். ஐந்து ஆண்டுகளுக்கு முன்னல் தாயார் தன்னைக் கடைசி முறையாக முத்தமிட்டாள் என்றும், தான் எதன் பொருட்டு உலகில் வாழ்ந்தாளோ அந்த இன்பமயமான மறு நாளுக்கு உத்தரவாதமாக இந்த முத்தம் இப்போது தனக்கு வேண்டும் என்றும் அவளால் சொல்ல முடியாதே.

''போய்த் தூங்கு. நான் களைத்துப்போனேன். நான் அதிகாலையில் புறப்பட வேண்டும்.''

இவ்வாறு கூறிக் கொட்டாவி விட்டார் விருந்தாளி. நீண்ட, அசட்டை நிறைந்த, ஊளை ஒலியுள்ள

கொட்டாவி. லீஸா உதடுகளைக் கடித்துக் கொண்டு தடதடவென்று இறங்கியவள் கதவில் முழங்காலை இடித்துக் கொண்டாள். வலியைப் பொறுத்துக் கொண்டு வெளியே போய்ப் படீர் என்று கதவைச் சாத்தி விட்டு முகப்புக்கு ஓடினுள்.

காலையில் தகப்பனுர் குதிரையை வண்டியில் பூட்டியதையும் விருந்தாளி தாயாரிடம் பிரிவு சொல்லிக் கொண்டதையும் வெளிக் கதவுகள் கிரீச்சிட்டதையும் கேட்டாள் லீஸா. உறங்குபவள் போன்று பாவனை செய்தவாறு படுத்திருந்தாள். மூடிய இமைகளின் அடியிலிருந்து வழிந்தன கண்ணீர்த் துளிகள்.

மதியச் சாப்பாட்டு நேரத்தில் தகப்பனுர் குடித்துவிட்டுத் திரும்பினுர். வெண் நீலச் சர்க்கரைக் கட்டிகளைத் தொப்பியிலிருந்து ஓசையுடன் மேஜை மேல் கொட்டினுர்.

''நம் விருந்தாளி பெரிய ஆளாக்கும்!'' என்று ஆச்சரியம் தொனிக்கக் கூறினுர். ''நமக்குச் சர்க்கரை கொடுக்கும்படி உத்தரவிட்டான். நம்முடைய உள்ளூர் கடையில் ஒரு வருஷமாகச் சர்க்கரையே தட்டுப்படவில்லை. அவனே, முழுதாக மூன்று கிலோ கொடுக்கச் சொல்லி விட்டான்!..''

பிறகு அவர் பேச்சை நிறுத்திவிட்டு, வெகு நேரம் பைகளைத் தட்டிப் பார்த்து, புகையிலைப் பையிலிருந்து கசங்கிய காகிதத் துண்டை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

லீஸா வாங்கிப் படித்தாள்:

''நீ பள்ளியில் கற்க வேண்டும், லீஸா. காட்டில் உன் வாழ்க்கை பாழாகிவிடும். ஆகஸ்டு மாதம் வா. தங்கு விடுதியுள்ள தொழில் பள்ளியில் சேர்க்கிறேன்.''

கையெழுத்தும் முகவரியும். மேற்கொண்டு ஒன்றும் இல்லை. வணக்கம் கூட இல்லை.

ஒரு மாதத்திற்கெல்லாம் தாயார் காலமாளுள். எப்போதுமே கடுகடுத்த முகத்துடன் இருந்த தகப்பஞர் இப்போது காட்டு விலங்கு ஆகிவிட்டார், கண்தலை தெரியாமல் குடித்தார். லீஸாவோ, முன்போலவே மறு நாளை எதிர்பார்த்தாள். இரவில் தகப்பஞரின் நண்பர்களிடமிருந்து தப்புவதற்காக அறைக் கதவை நன்ருகப் பூட்டிக் கொண்டாள். ஆஞல் அப்போது முதல் அந்த மறு நாள் ஆகஸ்டு மாதத்துடன் நெருக்கமாக இணைந்து விட்டது. அறைச் சுவரின் மறு புறம் குடிகாரர்களின் கூச்சல்கள் கேட்கையில் லீஸா முற்றிலும் நைந்துபோன கடிதத்தை ஆயிரமாவது தடவை மறுபடி படிப்பாள்.

ஆஞல் போர் மூண்டு விட்டது. லீஸா நகரத்துக்குப் போவதற்குப் பதில் தற்காப்பு வேலையில் ஈடுபட்டாள் கோடைகாலம் முழுதும் அகழ்களும் டாங்கித் தடுப்பு அரண்களும் அமைத்துக் கொண்டிருந்தாள். ஜெர்மானியர் இவற்றைக் கணக்காகச் சுற்றிக் கடந்து விட்டார்கள். லீஸா பகைவரின் முற்றுகையில் அகப்பட்டுக் கொண்டாள். அதிலிருந்து தப்பி வெளியேறி மீண்டும் அகழ்கள் தோண்டலாஞள். ஒவ்வொரு தடவையும் மேலும் மேலும் கிழக்கே பின்வாங்கியவாறு அகழ்கள் தோண்டிஞள். இலையுதிர் கால முடிவில் அவள் வல்தாய் என்னும் இடத்துக்கு அப்பால் இருந்தாள். அங்கே விமான எதிர்ப்புப் படைப்பிரிவில் ஒண்டிக் கொண்டாள். இந்தக் காரணத்தால்தான் இப்போது 171வது கிளை நிலையத்துக்கு ஓடிக் கொண்டிருந்தாள்...

லீஸாவுக்கு வஸ்கோவை எடுத்த எடுப்பிலேயே பிடித்து விட்டது. உறக்கக் கலக்கம் போகாத விழிகளைக் குழப்பத்துடன் கொட்டியவாறு அவர்களுடைய அணி வரிசையின் முன் நின்ருனே, அப்போதே. அவனுடைய உறுதியான, மிதமான பேச்சு, விவசாயிக்குரிய நிதானப் போக்கு, குடும்பம் நிலைத்திருப்பதற்கு உத்தரவாதம் என்று எல்லாப் பெண்களும் மதிக்கும் ஆண்மை மிடுக்கு, எல்லாமே அவளுக்குப் பிடித்திருந்தன. தற்செயலாக எல்லாப் பெண்களும் கமாண்டரைக் கேலி செய்யத் தொடங்கிஞர்கள். அப்படிச் செய்வது முறையானது என்று எண்ணப்பட்டது. இந்த மாதிரிப் பேச்சுக்களில் லீஸா கலந்து கொள்வதில்லை. ஆனல் எல்லாம் அறிந்த கிரியானவா சிரித்துக் கொண்டு சொன்ன ஒரு சேதி அவளுக்கு ஆத்திரம் ஊட்டியது. வீட்டுச் சொந்தக்காரியின் பகட்டுக்கும் மினுக்குக்கும் வசப்படாமலிருக்க சார்ஜண்டு மேஜரால் முடியவில்லை என்ருள் கிரியானவா.

''இது உண்மை அல்ல!'' என்ற சொற்கள் லீஸாவிடமிருந்து வெடித்துக் கிளம்பின.

''காதல் கொண்டு விட்டாள்!'' என்று வெற்றிக் குரலில் முழங்கிஞள் கிரியானவா. ''பெண்களே, நம் லீஸா காதலில் மூழ்கிவிட்டாள்! கமாண்டருக்கு உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டாள்!''

''பாவம் லீஸா!'' என்று உரக்கப் பெருமூச்செறிந்தாள் சோனியா.

உடனே எல்லோரும் சளசளக்கவும் உரக்கச் சிரிக்கவும் தொடங்கிஞர்கள். லீஸா வீரிட்டுக் காட்டுக்கு ஓடி விட்டாள்.

வெட்டு மரக் கட்டைமேல் உட்கார்ந்து தேம்பி

அழுது கொண்டிருந்தாள். பின்பு ரீதா அஸ்யானிஞ அவளைத் தேடிக் கொண்டு வந்தாள்.

''என்ன நீ, அசடே? சகஜமாக வாழ வேண்டும். புரிந்ததா? சகஜமாக.''

ஆனால் லீஸா கூச்சத்தால் தலையை நிமிர்த்த முடியாமல் இருந்தாள். சார்ஜண்டு மேஜருக்கோ, மூச்சு விட நேரமின்றி வேலை நெரிந்தது. இந்த வாய்ப்பு கிடைக்காதிருந்தால் லீஸா அவனை நேரிட்டுப் பார்த்தே இருக்க மாட்டாள். அதனால் தான் லீஸா சிறகுகள் முளைத்தவள் போலக் காட்டின் வழியே பறந்து சென்றாள்.

''அப்புறம் சேர்ந்து பாடுவோம், லீஸா. இந்த இராணுவ உத்தரவை நிறைவேற்றின பிறகு பாடுவோம்...'' என்று சொல்லியிருந்தான் சார்ஜண்டு மேஜர்.

லீஸா அவனுடைய சொற்களை எண்ணிப் பார்த்துப் புன்னகைத்தாள். தன் உள்ளத்தில் திடீர் திடீரென்று எழுந்து விகுவான கன்னங்களைக் குப்பென்று சிவக்கச் செய்யும் விறல் மிக்க, விந்தையான உணர்ச்சியால் கூச்சம் அடைந்தாள் அவள். அவனைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்ததால் அடையாள தேவதாரு மரத்தைக் கடந்து போய் விட்டாள். சதுப்பு நிலத்தின் அருகே கொம்புகளின் நினைவு வந்த போது அவளுக்குத் திரும்பிப் போக விருப்பம் இல்லை. அங்கே புயலில் விழுந்த மரங்கள் நிறைய இருந்தன. லீஸா பொருத்தமான ஒரு தடியைச் சீக்கிரமாக எடுத்துக் கொண்டாள்.

கொழுகொழுவென்றிருந்த சேற்றுக் குழம்பலில் இறங்குவதற்கு முன் அவள் இரகசியமாக உற்றுக் கேட்டாள். பின்பு ஸ்கர்ட்டைக் கழற்றினாள்.

அதைத் தடியின் உச்சியில் சுற்றிக் கட்டினுள், உடுப்பை இடைவாரில் கவனமாகச் செருகிக் கொண்டாள், உள்கால் சட்டையைத் தூக்கி விட்டுக் கொண்டு சதுப்பு நிலத்தில் இறங்கினுள்.

இந்தத் தடவை, சேற்றை இரு புறமும் விலக்கிக் கொண்டு ஒருவரும் முன்ஞல் நடக்கவில்லை.

நீர்த்த சேற்றுக் குழம்பு அவளுடைய பிட்டத்தில் ஒட்டிக் கொண்டு இழுபட்டது. மூச்சு முட்ட, இடமும் வலமும் ஆடி அசைந்தவாறு சிரமத்துடன் முன்னே நகர்ந்தாள் லீஸா. பனிக்கட்டியாய்க் குளிர்ந்த நீரால் கால்கள் மரக்க, தீவிலிருந்த இரண்டு தேவதாரு மரங்களிலிருந்து பார்வையை அகற்ருமல் ஒவ்வோர் அடியாக முன்னேறினுள்.

ஆஞல் சேருே, குளிரோ, காலடியில் மூச்சு விட்ட உயிருள்ள தரையோ அவளுக்கு அச்சம் ஊட்டவில்லை. அவளுக்குத் திகில் அளித்தவை தனிமையும் சதுப்பு நிலத்தைச் சூழ்ந்திருந்த உயிரற்ற நிசப்தமும்தாம். பயங்கர உணர்வு அவளை ஆட்கொண்டது. இந்த உணர்வு குறையாதது மட்டும் அல்ல, ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும் போதும் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டு போயிற்று. திரும்பிப் பார்க்கவும் தேவையற்ற அங்க அசைவுகள் செய்யவும் உரக்கப் பெருமூச்சு விடவும் கூட அஞ்சியவளாக அவள் புகலின்றி நடு நடுங்கினுள்.

தீவில் எப்படி ஏறிஞேம் என்பது அவளுக்கு நன்ருக நினைவில்லை. தவழ்ந்து சென்று அழுகின புல்லில் முகத்தைப் புதைத்துக் கொண்டு வாய் விட்டு அழத் தொடங்கினுள். குளிராலும் தனிமையாலும் நெஞ்சை உறையச் செய்யும் திகிலாலும்

நடுங்கியவளாய், தேம்பி அழுதாள், பருத்த கன்னங்களில் கண்ணீரைப் பூசிக் கொண்டாள்.

எழுந்தாள். கண்ணீர் இன்னமும் பெருகிக் கொண்டிருந்தது. மூக்கை உறிஞ்சியவாறு தீவின் குறுக்கே நடந்தாள். மேற்கொண்டு எப்படி நடப்பது என்று இலக்குப் பார்த்துக் கொண்டாள். இளைப் பாறமல், பலத்தைத் திரட்டிக் கொள்ளாமல், சேற்றில் இறங்கி விட்டாள்.

துவக்கத்தில் ஆழமாய் இல்லை. எனவே லீஸா அமைதியுற்ருள். அவளுக்குக் குதூகலம் கூட வந்து விட்டது. கடைசிப் பகுதிதான் பாக்கி. அது எவ்வளவு தான் கடினமாய் இருந்தாலும் அதற்கு அப்பால் இருந்தது தரை, புல்லும் மரங்களும் அடர்ந்த உறுதியான தாய்நிலம். எங்கே உடம்பு கழுவிக் கொள்வது என்று லீஸா எண்ணமிடலாஞள். வழியில் உள்ள குளம் குட்டைகளை நினைத்துப்பார்த்து. உடைகளைக் கசக்கி அலசுவது அவசியமா அல்லது கிளை நிலையம் சேர்ந்த பிறகு அலசிக் கொள்ளலாமா என்று யோசித்தாள். சதுப்பு நிலத்திலிருந்து வெளியேறிய பின் கிளை நிலையம் கொஞ்ச தூரந்தான். வழி அவளுக்கு நன்ருக நினைவிருந்தது. எல்லாத் திருப்பங்களும் நினைவிருந்தன. ஒரு ஒன்றரை மணி நேரத்தில் தன்னவர்களிடம் போய்ச் சேர்ந்து விடலாம் என்று துணிச்சலாகக் கணக்கிட்டாள்.

நடப்பது முன்னிலும் கடினம் ஆயிற்று. புதை சேறு முழங்கால் வரை வந்தது. ஆஞல் இப்போது ஒவ்வொரு அடிவைப்பும் எதிர்க் கரையை அருகே கொண்டு வந்தது. சார்ஜண்டு மேஜர் எந்த வெட்டு மரத்திலிருந்து சேற்றில் இறங்கிஞனே அதை

வெடிப்பு உள்படத் தெளிவாகக் கண்டாள் லீஸா. வேடிக்கையாக, தத்தக்க பித்தக்களன்று இறங்கினுள்: விழாமல் நிற்பதற்குள் திணறிப் போய்விட்டாள்.

லீஸா மறுபடி வஸ்கோவைப் பற்றி எண்ணத் தொடங்கினுள், புன்சிரிப்புக்கூடச் செய்தாள். அவர்கள் சேர்ந்து பாடுவார்கள். சார்ஜண்டு மேஜர் இராணுவ உத்தரவை நிறைவேற்றி விட்டுக் கிளை நிலேயம் திரும்பியதும் லீஸாவும் அவனும் கட்டா யம் சேர்ந்து பாடுவார்கள். லீஸா மட்டும் தந்திரம் செய்ய வேண்டியிருக்கும். தந்திரம் செய்து அவனை மாலேயில் காட்டுக்கு அழைத்துப் போக வேண்டி வரும். அங்கே... அங்கே பார்ப்போம், யார் அதிக பலசாலி, லீஸாவா அல்லது சார்ஜண்டு மேஜரோடு ஒரே வீட்டில் வசிப்பது ஒன்றை மட்டும் பெருமை யாகக் கொண்ட வீட்டுச் சொந்தக்காரியா என்று...

பிரமாண்டமான பழுப்புக் குமிழி அவளுக்கு முன் உப்பியது. இது முற்றிலும் எதிர்பாராத போது, மிக விரைவாக, மிக அருகில் நிகழ்ந்ததால் லீஸாவுக்குக் கத்தக்கூட நேரமில்லே. அவள் இயல் பாகவே ஒரு பக்கம் விலகினுள். அவள் விலகிய தெல் லாம் ஓர் அடிதான், ஆனுல் கால்கள் அக்கணமே ஆதாரத்தை இழந்து, துவளும் வெறுமையில் எங் கோ தொங்கின. புதை சேறு மென்மையான இடுக்கி களால் தொடைகளே நெரித்தது. வெகு நேரமாக உள்ளே சேர்ந்து கொண்டிருந்த திகில் நெஞ்சில் சுரீரெனப் பாய்ந்து தாக்கியவாறு திடீரென வெ ளிப்பட்டது. எப்படியாவது நிலேத்து நின்று புதை சேற்றிலிருந்து வெளியேறி விட முயன்றவாறு லீஸா தடியின் மீது முழுச் சுமையையும் வைத்து அழுத்தினுள். உலர்ந்த கழி சடசடத்து முறிந்தது.

சில்லிட்ட சேற்றுக் குழம்பில் முகம் குப்புற விழுந் தாள் லீஸா.

தரை இல்லை. கால்கள் மெதுவாக, பயங்கர மான அளவுக்கு மெதுவாக, கீழே இழுபட்டன. கைகள் அர்த்தமின்றிப் புதை சேற்றைத் துழாவின. லீஸாவுக்கு மூச்சு முட்டியது. அவள் குழம்பல் சேற் றில் நெளிந்தாள். கடவைப் பாதை எங்கோ மிக அருகில், ஓர் அடி, அரை அடி தூரத்தில் இருந்தது. ஆனால் இந்த அரை அடி கூட எடுத்து வைக்க இப் போது அவளால் முடியவில்லை.

‘‘உதவுங்கள்! உதவி! உதவி செய்யுங்கள்!’’

திகில் நிறைந்த இந்தத் தனிமைக் கத்தல் எதை யும் மதியாத கரும்பழுப்புச் சதுப்பு நிலத்துக்கு மேல் வெகு நேரம் ஒலித்துக் கொண்டிருந்தது. அது தேவதாரு மரமுடிகளுக்குப் பறந்து சென்றது, ஆல்டர் மரச் சோலையின் தளிர்களில் சிக்கிக் குழம்பியது, வெறும் கரகரப்பாகக் கம்மியது, பின்பு, மேகங்கள் அற்ற மே மாதத் தெள்ளிய வானை நோக்கிக் கடைசி வலிமையுடன் மீண்டும் எழுந்தது.

இந்த அழகிய நீல வானத்தை லீஸா நெடு நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். வாயில் புகுந்த சேற்றைக் காறிக் காறித் துப்பினாள். அதே சமயம் மேலும் மேலும் அதனுள் ஆழ்ந்தாள். ஆழ்ந்த வாறே மறு நாளை நம்பிக்கையுடன் எதிர்பார்த் தாள்.

மரங்களுக்கு மேலே மெல்ல எழுந்தது ஞாயிறு. அதன் கதிர்கள் சதுப்பு நிலத்தில் பட்டன. வெது வெதுப்பும் மறு நாள் பற்றிய நம்பிக்கை போன்று கண்களைக் கூசச் செய்யும் ஒளியும் நிறைந்த வெயிலை லீஸா கடைசி முறையாகக் கண்டாள். இந்த ஒளி

வீசும் மறு நாள் தனக்கும் வாய்க்கும் என்று இறுதிக் கணம்வரை நம்பிக் கொண்டிருந்தாள்...

## 8

கையோடு கொண்டு வந்திருந்த பண்டங்களை அவர்கள் சிரிப்பும் வேடிக்கையுமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் பகைவர்கள் வெகு தூரம் விலகிப் போய் விட்டார்கள். ஓசை நிறைந்த கரையையும் ஆரவாரிக்கும் பெண்களையும் பார்வையில் படாத ஆண்களையும் விட்டுக் கம்பி நீட்டி விட்டார்கள் அவர்கள். காட்டில் புகுந்து சுவடு தெரியாமல் மறைந்து விட்டார்கள்.

இது வஸ்கோவுக்குப் பிடிக்கவில்லை. அவனுக்கு இராணுவ அனுபவத்தோடு வேட்டை அனுபவமும் இருந்தது. பகைவனையும் கரடியையும் பார்வையிலிருந்து தப்ப விடுவது சரியல்ல என்பதை அவன் அறிந்திருந்தான். பகைவன் இன்னும் என்ன சூழ்ச்சி செய்வானோ, எங்கே பாய்வானோ, இரகசியங்களை எங்கே மறைப்பானோ சைத்தானுக்கே வெளிச்சம். வேட்டைக்காரன் கவனமாய் இல்லாவிட்டால் கரடி அவனை வேட்டையாடுகிறதா அல்லது அவன் கரடியை வேட்டையாடுகிறானா என்று விளங்காத நிலைமை ஏற்படுவது உண்டு. இப்போது அதே மாதிரி நிலைமை ஏற்படும்போல் இருந்தது. அதைத் தவிர்ப்பதற்காக சார்ஜண்டு மேஜர் பெண்களைக் கரையில் இருக்கச் சொல்லிவிட்டு, ரீதாவுடன் தேட்டம் நடத்தப் புறப்பட்டான்.

''என்னைத் தொடர்ந்து வா, ரீதா. நான் நின்றால் நீயும் நில்லு, நான் படுத்தால் நீயும் படு. ஜெர்மானி

யர்களோடு கண்ணும் பூச்சி விளையாடுவது சாவோடு விளையாடுவது போல. ஆகவே காதுகளைக் கூராக்கிக் கொள். காதுகளையும் கண்களையும்'' என்றான் வஸ்கோவ்.

அவன் முன்னே நடந்தான். ஒரு புதரிலிருந்து மறு புதருக்கும் ஒரு பாறையிலிருந்து மறு பாறைக்குமாக. கண்களில் வலி எடுக்கும் அளவுக்கு முன்னே உற்று நோக்கினான், காதைத் தரையோடு சேர்த்துக் கூர்ந்து கேட்டான், காற்றை முகர்ந்தான். கைக் குண்டு போல வெடிக்கத் தயாராக இருந்தான். எல்லாவற்றையும் துருவிப்பார்த்துக் காது கொடுத்துக் கேட்ட பிறகு லேசாகக் கையை அசைத்தான். ரீதா உடனே அவன் அருகே போய்ச் சேர்ந்தாள். உதிர் சருகுகளும் சுள்ளிகளும் நெறுநெறுக்கின்றனவா, ஏதேனும் அசட்டுப் பட்சி கத்துகிறதா என்று இருவரும் உற்றுக் கவனித்தார்கள். சார்ஜண்டு மேஜர் உடம்பைக் கூனியவாறு முன்னே நகர்ந்து அடுத்த மறைவிடத்தை அடைந்தான். ரீதா முந்திய இடத்தில் நின்று இரண்டு பேருக்கும் சேர்த்து கவனித்துக் கேட்டாள்.

அவர்கள் இவ்வாறு குன்றுத் தொடரைக் கடந்து தலைமை அரணை அடைந்தார்கள். பின்பு, காலையில் லீஸா ஜெர்மானியருக்குத் தெரியாமல் புகுந்து சென்ற தேவதாருச் சோலையை அடைந்தார்கள். அழிவுவேலையினர் எவருமே இயற்கையில் நிலவவில்லைபோல இப்போதைக்கு எல்லாம் சந்தடியற்றும் அமைதியாகவும் இருந்தன. ஆனால் வஸ்கோவ் தானும் அப்படி நினைக்கவில்லை, ஜூனியர் சார்ஜண்டு ரீதாவையும் அவ்வாறு எண்ண விடவில்லை.

தேவதாரு மரச் சோலையின் மறுபுறம் இருந்தது லெகோன்தவோ ஏரியின் பாசிபடர்ந்த குண்டுப் பாறைகள் நிறைந்து படிப்படியாய்ச் சரிந்து சென்ற கரை. தேவதாருச் சோலை கரையிலிருந்து சற்று விலகி, ஒரு சிறு குன்றின் மேல் தொடங்கியது. கரையிலிருந்து அதற்குச் செல்லும் வழியில் கோணல் மாணலான பிர்ச் மரச் சோலையும் நெருக்கமின்றி வளர்ந்திருந்த குட்டையான பிர் மரங்களும் இருந்தன.

இங்கே சார்ஜண்டு மேஜர் நின்றான். தொலை நோக்கியால் புதர்களைத் துருவிப் பார்த்தான், உற்றுக் கேட்டான். பின்பு குன்றுச் சரிவு வழியே ஏரி நீர்ப்பரப்பை நோக்கி வீசிய காற்றை நீண்ட நேரம் முகர்ந்து கொண்டிருந்தான். ரீதா பணிவாக அருகே அசையாமல் படுத்துக் கிடந்தாள். தன் உடை பாசியில் பட்டு மெதுவாக நனைவதை உணர்ந்து அவளுக்கு எரிச்சல் உண்டாயிற்று.

''மூக்கில் படுகிறதா?'' என்று தணிந்த குரலில் கேட்டு விட்டுத் தனக்குள் சிரித்துக் கொண்டான் வஸ்கோவ். ''பண்பாடு ஜெர்மானியனைக் காட்டிக் கொடுத்துவிட்டது. காப்பி சாப்பிட விரும்பியிருக்கிறான்.''

''ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?''

''புகை வாடை அடிக்கிறது. ஆகவே அவர்கள் சாப்பிட உட்கார்ந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. பதினாறு பேருமா என்பது தான் கேள்வி...''

சற்று நேரம் சிந்தித்துவிட்டு அவன் துப்பாக்கியைத் தேவதாரு மரத்தில் பாங்காகச் சார்த்தி வைத்தான், இடை வாரை முடிந்தவரை நன்றாக இறுக்கிக் கொண்டு, மண்டியிட்டு உட்கார்ந்தான்.

''அவர்களை எண்ணிக் கணக்கிட வேண்டும், ரீதா. எவனாவது தப்பிப் போய்விட்டானா என்று பார்க்க வேண்டும். நான் சொல்வதைக் கேள். துப்பாக்கிச் சூடு கேட்டால் உடனே போய்விடு. அந்தக் கணமே போய் மற்ற பெண்களையும் சேர்த்துக் கொள். நேராகக் கிழக்கே நடவுங்கள், கால்வாய் வரை. அங்கே நம்மவர்களுக்கு ஜெர்மானியர்களைப் பற்றித் தகவல் கொடு. அவர்களுக்கு இந்தத் தகவல் அதற்குள் கிடைத்திருக்கும். நம் லீஸா இதோ கிளை நிலையம் போய்ச் சேர்ந்திருக்க வேண்டுமே. எல்லாம் விளங்கிற்றா?''

''இல்லை. நீங்களோ?'' என்றாள் ரீதா.

''நீ என்ன ரீதா, விடு இந்தப் பேச்சை'' என்று கண்டிப்பாகச் சொன்னான் சார்ஜண்டு மேஜர். ''நாம் இங்கே காட்டுப் பழங்களும் குடைக் காளான்களும் சேகரிக்க வரவில்லையே. ஜெர்மானியர் என்னைக் கண்டு கொண்டால் உயிரோடு விட மாட்டார்கள், சந்தேகமே படாதே. அதனால்தான் சொல்லுகிறேன், உடனே போய்விடு. புரிந்ததா உத்தரவு?''

ரீதா பேசாதிருந்தாள்.

''நீ என்ன பதில் சொல்ல வேண்டும், அஸ்யானினா?

''புரிகிறது என்று சொல்ல வேண்டும்.''

சார்ஜண்டு மேஜர் வாய்க்குள் சிரித்துக் குனிந்து பக்கத்துப் பாறைக்கு ஓடினான். ரீதா அவனையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனாலும் அவன் எப்போது கண்ணுக்கு மறைந்தான் என்பதைக் கவனிக்கவில்லை: பாசி படர்ந்த சாம்பல் நிறப் பாறைகளுக்கு நடுவே திடீரென்று கரைந்து

விட்டான் போலிருந்தது. ரீதாவின் ஸ்கர்ட்டும் சட்டைக்கையும் தொப்பலாக நனைந்து விட்டன. அவள் பின்னே ஊர்ந்து சென்று பாறைமேல் அமர்ந்து காட்டின் அமைதியுள்ள ஓசையை உற்றுக் கேட்கலானாள்.

ஒன்றும் நேர முடியாது என்ற உறுதியான நம்பிக்கையுடன், அனேகமாக மனப்பதற்றம் இன்றிக் காத்திருந்தாள் அவள். இன்பமான முடிவுகளையே எதிர்பார்க்குமாறு பயிற்றி வளர்க்கப்பட்டிருந்தாள் அவள். வெற்றியில் சந்தேகம் கொள்வது அவளுடைய தலைமுறையின் நோக்கில் அனேகமாக துரோகம் செய்வதற்கு ஒப்பாயிருந்தது. அச்சத்தையும் நிச்சயம் இன்மையையும் அவள் உணர நேர்ந்தது உண்டுதான். ஆயினும் நலமான முடிவு பற்றிய உள நம்பிக்கை எதார்த்த நிலைமைகளைக் காட்டிலும் எப்போதும் வலியதாகவே இருந்தது.

ரீதா எவ்வளவோ கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்தாள், எதிர்பார்த்துக் காத்திருந்தாள் என்ருலும் வஸ்கோவ் அவள் எதிர்பாராதபோது, ஓசையின்றி வந்து சேர்ந்தான். தேவதாருக்கிளைகள் லேசாக நடுங்கின, அவ்வளவுதான். அவன் ஒரு வார்த்தை பேசாமல் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு, தலையசைப்பால் அவளுக்குச் சைகை செய்துவிட்டுக் காட்டுக்குள் புகுந்தான். பாறைகளின் மறைவை அடைந்த பிறகே நின்முன்.

''தோழர் அஸ்யானிஞ, நீ மோசமான படையினள். ஒன்றுக்கும் உதவாத படையினள்.''

அவன் கோபப்படாமல் கவலையுடன் இப்படிச் சொல்லவே, ரீதா புன்னகைத்தாள்.

''ஏனும்?''

''வெட்டுக் கட்டை மேலே நட்டமாகக் குந்தியிருந்தாயே, அடைகாக்கும் சாம்பல் கோழி போலே. படுத்திருக்கும்படி அல்லவா உத்தரவு ஆகியிருந்தது.''

''அங்கே ஒரே ஈரம், தோழர் வஸ்கோவ்...''

''ஈரமாம்...'' என்று அதிருப்தியுடன் திருப்பிச் சொன்னுன் சார்ஜண்டு மேஜர். ''நல்ல வேளைதான் அவர்கள் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கிருர்கள். இல்லாவிட்டால் உன்னைத் தீர்த்துக் கட்டி இருப்பார்கள்.''

''அப்படியானுல் நம் குட்டு வெளிப்பட்டு விட்டதோ?''

''நான் குறி சொல்பவன் அல்ல, ரீதா. பத்துப் பெயர் சாப்பிட்டுக் கொண்டிருக்கிருர்கள். நான் அவர்களைப் பார்த்தேன். இரண்டு பேர் மறைவில் இருக்கிருர்கள். அவர்களையும் கண்டேன். மற்றவர்கள் வேறு இடங்களில் வேலை செய்வதாக நினைக்க வேண்டும். நீண்ட நேரம் தங்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிருர்கள்: காலுறைகளை நெருப்பருகே உலர்த்தி இருக்கிருர்கள். ஆகவே நாம் இடத்தை மாற்ற இதுதான் சரியான சமயம். நான் இங்கே பாறைகள் வழியே ஊர்ந்து சுற்று முற்றும் பார்வையிடுகிறேன். நீ மற்றப் படையினரிடம் போய், இரகசியமாக இங்கே அழைத்து வா. சிரிப்பு கண்டிப்பாகக் கூடாது!''

''எனக்குப் புரிகிறது.''

''இன்னும் ஒன்று. என் புகையிலைப் பையை அங்கே காயப் போட்டிருக்கிறேன். தயை செய்து எடுத்து வா. சாமான்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.''

''எடுத்து வருகிறேன்.''

ரீதா படையினரை அழைத்து வருவதற்குள் வஸ்கோவ் பக்கத்திலும் தூரத்திலும் இருந்த எல்லாப் பாறைகளையும் ஊர்ந்து ஏறிப் பார்த்தான். உற்றுக் கவனித்தான், கூர்ந்து கேட்டான், ஓயாமல் முகர்ந்து பார்த்தான். ஆனால் ஜெர்மானியரின் வாடையே எங்கும் தட்டுப்படவில்லை. சார்ஜண்டு மேஜர் ஒரு சிறிது களிப்படைந்தான். அவனுடைய கணக்குப்படி லீஸா பிரீச்கினா இதோ கிளை நிலையம் போய்ச் சேர்ந்து விடுவாள், தகவல் தெரிவிப்பாள். அழிவு வேலையினரைச் சூழ்ந்து கண்ணுக்குத் தெரியாத வலை விரிக்கப்படும். மாலைக்குள் இல்லாவிட்டால் விடியும் தறுவாய்க்குள்ளாவது உதவி வந்துவிடும். உதவிப் படையினருக்குத் தடங் காட்டி விட்டு... அவன் பெண்களைக் குன்றின் மறுபுறம் இட்டுப் போவான். முடிந்தவரை தூரத்திற்கு, சண்டை ஆரவாரம் அவர்கள் காதுக்கு எட்டாதபடி. ஏனென்றால் சண்டை நடக்காமல் தீராது.

தன் படையினர் வருவதை அவன் மறுபடி தூரத்திலிருந்தே தெரிந்துகொண்டான். அவர்கள் சந்தடி செய்யவோ கிசுகிசுக்கவோகூட இல்லை. ஆனாலும் — என்னதான் விந்தையோ!— அவர்கள் ஒரு கிலோமீட்டர் தூரத்தில் வரும்போதே கமாண்டர் அவர்கள் வருவதைத் திட்டமாகத் தெரிந்துகொண்டான். நடை வேகம் காரணமாக அவர்களுக்கு மூச்சு இரைத்ததோ, அல்லது ஒடிகொலோன் மணம் அவர்களுக்கு முன்னே வந்ததோ, தெரியாது. ஜெர்மன் அழிவுவேலையினரிடையே உண்மை

யான வேட்டைக்காரர்கள் இல்லாதது குறித்து வஸ்கோவ் மனதுக்குள் மகிழ்ச்சி அடைந்தான்.

புகை பிடிக்க அடங்கா ஆசை உண்டாயிற்று. ஏனென்ருல் பாறைகள் ஊடாகவும் சோலைகள் வழியாகவும் இரண்டு மணி நேரத்துக்கு மேல் சுற்றி வந்திருந்தான். ஆசைக்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதற்காகவே புகையிலைப் பையைப் பெண்கள் அருகே பாறைமேல் வைத்திருந்தான். இப்போது அவர்களை எதிர்கொண்டு பேசாதிருக்கும்படி எச்சரித்து விட்டு, புகையிலைப் பை பற்றிக் கேட்டான்.

''மறந்து விட்டேன்! அருமை பெதோத் யெவ்கிராபிச், மறந்தே போனேன்!..''

சார்ஜண்டு மேஜர் தொண்டையைக் கனைத்துக் கொண்டான்: அட பெண் இனமே, என்னதான் மறதி உனக்கு, உன்னைச் சைத்தான் பிடித்து ஆட்ட! நீ மட்டும் ஆணுய் இருந்தால் ஏழு தலைமுறைகளையும் வளைத்துத் திட்டி, எடுத்துவா பையை என்று திரும்ப விரட்டியிருப்பேனே. இப்போதோ, புன்னகையை வலிந்து வரவழைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது:

''அட பரவாயில்லை என்கிறேன். நீ வருத்தப் படாதே. புகையிலைத் தூள் இருக்கிறது. என் சாமான் பையை மறந்து விடவில்லையே?''

சாமான் பை அதன் இடத்தில் இருந்தது. கமாண்டருக்கு வருத்தம் புகையிலை போனதால் அல்ல, புகையிலைப் பை போய்விட்டதால் தான். அது பரிசாகக் கிடைத்த பை. **"அன்புள்ள தாய் நாட்டுக் காவலருக்கு"** என்ற சொற்கள் அதில் பின்னப் பட்டிருந்தன. ஆகவே வஸ்கோவால் தன் வருத்

த்தை மறைக்க முடியவில்லை. அதற்குள் சோனியா, ''இதோ கொண்டு வருகிறேன்! அது இருக்கும் இடம் எனக்குத் தெரியும்!'' என்று வந்த வழியே திரும்ப ஓடினாள்.

''இந்தா, நீ எங்கே போகிறாய்? சோனியா? தோழர் மொழிபெயர்ப்பாளி?''

அவன் பேச்சைக் கேட்க அங்கே யாரும் இல்லை. சோடுகள் தொப்புத் தொப்பென்று அடிப்பதுதான் கேட்டது...

அவை அப்படி அடித்ததற்குக் காரணம் சோனியா குர்விச் அதற்கு முன் ஒருபோதும் நீள் சோடு அணிந்ததில்லை என்பதே. அனுபவம் இல்லாமையால் இராணுவ உடைப் பிரிவில் தன் அளவுக்குக் கொஞ்சம் பெரியவையான சோடுகளை வாங்கிக் கொண்டிருந்தாள். சோடுகள் அளவுக்குப் பொருத்தமாக இருந்தால் டக் டக்கென்று ஒலிக்கும் என்பது எந்தப் படைவீரனுக்கும் தெரிந்த சேதி. ஆனால் சோனியாவின் குடும்பத்தினர் சிவில் அலுவலர்கள். நெடுஞ் சோடுகள் அவள் வீட்டில் புழங்கியதே இல்லை. சோனியாவின் தகப்பனுருக்குக் கூட அவற்றைச் சரியாக மாட்டிக் கொள்ளத் தெரியாது.

மின்ஸ்க் நகரில் இருந்த அவர்களுடைய சிறு வீட்டின் கதவில் **''டாக்டர் பட்டம் பெற்ற மருத்துவர் ஸாலமோன் அரோனவிச் குர்விச்''** என்று பொறித்த செப்புப் பட்டயம் தொங்கியது. சோனியாவின் தகப்பனுர் சாதாரணச் சிற்றூர் மருத்துவர்தாம், டாக்டர் பட்டம் பெற்றவர் அல்ல. என்றாலும் இந்தச் செப்புப் பட்டயம் தாத்தாவால் பரிசளிக்கப் பட்டு அவர் கையாலேயே மாட்டப்பட்டிருந்த படியால் அதை ஒருவரும் கழற்றவில்லை. தாத்தா

அதை மாட்டியதன் காரணம் அவருடைய மகன் கல்வித் தேர்ச்சி பெற்றவன் என்பதை மின்ஸ்க் நகரம் முழுவதும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே.

கதவருகே மணியின் கைப்பிடியும் தொங்கிக் கொண்டிருந்தது. அதை இழுத்தால் வாயில் மணி அடிக்கும். சோனியாவின் பிள்ளைப் பருவம் முழுவதும், பகலிலும் இரவிலும், குளிர் காலத்திலும் கோடை காலத்திலும் இந்த மணியின் கலவர மூட்டும் ஓசை ஓயாமல் கேட்டுக் கொண்டிருந்தது. தகப்பனார் கைப் பெட்டியை எடுத்துக் கொண்டு எந்தப் பருவ நிலையிலும் கால் நடையாகவே நோயாளிகளைப் பார்வையிடப் போவார்; ஏனென்றால் வண்டிச் சத்தம் அதிகமாய் இருந்தது. வீடு திரும்பியதும் க்ஷயரோகத்தையும் தொண்டைச்சதை அழற்சியையும் மலேரியாவையும் பற்றித் தணிந்த குரலில் விவரிப்பார். பாட்டி அவருக்குச் செர்ரி மது பருகக் கொடுப்பாள்.

அவர்களுடைய குடும்பம் மிகவும் ஒற்றுமையானது, மிகவும் பெரியது. குழந்தைகள், மருமக்கள், பாட்டி, அம்மாவின் மணமாகாத சகோதரி, இன்னும் யாரோ தூரத்து உறவுக்காரி, எல்லோரும் ஒரே வீட்டில் வசித்தார்கள். ஒருவர் மட்டும் படுத்த கட்டில் ஒன்று கூட வீட்டில் இல்லை. மூவர் படுத்த கட்டில் இருந்தது.

பல்கலைக் கழகத்தில் பயிலும் போது கூட சோனியா தன் தமக்கைகளின் மாற்றித் தைத்த கவுன்களைப் போட்டுக் கொள்வாள். அவை கவர்ச்சி இன்றிக் கம்பிவலைக் கவசங்கள் போலக் கனக்கும். அவற்றின் கனத்தை அவள் நீண்ட காலம் உண

ராமலே இருந்தாள். ஏனென்றால் நடனங்களுக்குப் பதில் வாசகசாலைக்கும் காலரி டிக்கெட் கிடைத்த நாட்களில் நாடக மன்றத்துக்கும் போய்வந்தாள். பல்கலைக் கழகப் பாடங்களில் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருப்பான் ஒரு மூக்குக் கண்ணாடிக் காரன். தான் வாசகசாலையில் கழிக்கும் நேரம் எல்லாம் அவனும் தன்னுடன் படிப்பில் ஆழ்ந்திருப்பது தற்செயலாக அல்ல என்பதை சோனியா புரிந்து கொண்டாள். இது நடந்தது ஓர் ஆண்டுக்குப் பிறகு, கோடையில் கோர்க்கி பூங்காவில் அவர்கள் இருவரும் ஒரேமுறை மாலையில் சேர்ந்து உலாவிக் களித்தார்கள். மறக்க முடியாத அந்த மாலைக்கு ஐந்து நாட்கள் பின்னர் கண்ணாடிக்காரன் ருஷ்யக் கவிஞர் புளோக்கின் சின்னஞ்சிறு கவிதை நூலை அவளுக்குப் பரிசளித்துவிட்டு, சுய விருப்பத் தொண்டர்களைப் படையில் சேர்ந்து போர்முனை சென்றான்.

ஆம், பல்கலைக் கழகத்தில் பயிலும்போது கூட சோனியா தன் தமக்கைகளின் மாற்றித் தைத்த கவுன்களைப் போட்டுக் கொள்வாள். அவை கவர்ச்சி இன்றி வலைக் கவசங்கள் போலக் கனக்கும்...

அவற்றை அவள் போட்டுக் கொண்டது கொஞ்ச காலத்துக்குத்தான்: ஒரே ஆண்டுதான். அதன் பின் இராணுவச் சீருடை அணியலானாள். சோடுகளும் அளவுக்கு மிகவும் பெரியவை.

படைப் பிரிவில் ஒருவருக்கும் அவளை அனேகமாகத் தெரியாது. அவள் இட்ட பணிகளை அடக்கமாக நிறைவேற்றி வந்தாள். அவள் விமான எதிர்ப்புப் படையினள்; ஆனது தற்செயலாகவே. போர்முனை வலுவாகத் தற்காப்பு ஏற்பாடுகள் செய்து கொண்டு தாக்கு நடவடிக்கைகள் இன்றி

இருந்தது. மொழிபெயர்ப்பாளர்கள் நிறைய இருந்தார்கள். ஆனால் விமான எதிர்ப்புப் படையினர் போதவில்லை. அதனால் தான் ஜெர்மன் 'மெஸ்ஸர்ஷ்மித்' விமானங்களோடு நடந்த சண்டைக்குப் பிறகு ழேனியாவுடன் சோனியாவும் கிரியானவாவின் படைப் பிரிவுக்கு அனுப்பப்பட்டாள்...

சோனியாவின் குரல் வஸ்கோவின் காதில் மட்டுமே பட்டது.

''குர்விச் கத்தினாள் போல இருந்ததே?'' என்று கேட்டான் சார்ஜண்டு மேஜர்.

எல்லோரும் உற்றுக் கேட்டார்கள்: குன்றுத் தொடர் நிசப்தத்தில் ஆழ்ந்திருந்தது. காற்றுதான் சற்று சீழ்க்கை அடித்தது.

''இல்லை, உங்களுக்கு வெறுமே தோன்றியிருக்கிறது'' என்றாள் ரீதா.

பெருமூச்சுடன் முனகுவது போன்று தொலைவில் ஒலித்த குரல் மேற்கொண்டு கேட்கவில்லை. ஆயினும் வஸ்கோவ் புலன்களை எல்லாம் ஒருமுனைப்படுத்தி அதை மேலும் மேலும் உற்றுக் கேட்க முயன்றான். அவன் முகம் பேயறைந்தது போல் ஆகிவிட்டது. அந்த விந்தைக் கூக்குரல் அவனுக்குள் சிக்கிக் கொண்டு விட்டது போலவும் இன்னும் ஒலித்துக் கொண்டிருப்பது போலவும் இருந்தது. அதன் பொருள் என்ன என்பதை வஸ்கோவ் ஊகித்துக் கொண்டான், தெரிந்து கொண்டான். அவன் உடல் சில்லிட்டது. உணர்வற்ற விழிகளால் நோக்கி, விந்தைக் குரலில் சொன்னான்:

''கமெல்கோவா, என்னோடு வா. மற்றவர்கள் காத்திருங்கள்.''

வஸ்கோவ் நிழல் போல முன்னே விரைந்து சென்முன். ழேனியா மூச்சிரைக்க, சிரமத்துடன் அவனைத் தொடர்ந்து சென்முள். வஸ்கோவ் சுமை இல்லாமல் நடந்தான், அவள் துப்பாக்கி வைத் திருந்தாள். தவிர அவள் ஸ்கர்ட் அணிந்திருந்தாள். ஓடும் போது அது எப்போதுமே வேண்டியதை விடக் குறுகலாய் இருப்பது போலத் தோன்றும். ஆனல் முக்கியமானது என்னவென்முல், நிசப்தத் தைக் கூர்ந்து கவனித்தத்தில் ழேனியா மிக நிறைய ஆற்றலைச் செலவிட்டு விட்டதால் மற்ற காரியங் களுக்கு அவளிடம் சக்தி அனேகமாக எஞ்சவில்லை.

சார்ஜண்டு மேஜரோ ஒரே முனைப்புடன் இருந் தான். அந்தக் கத்தலில் உணர்வுகளை முனைப்படுத்தி யிருந்தான். அனேகமாக ஒலி அற்ற ஒரே கத்தல். அது அவன் காதில் பட்டு விட்டது. அதை அவன் இனங் கண்டு அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண் டான். இந்த மாதிரிக் கத்தல்களை அவன் முன்பு கேட்டது உண்டு. அவை காதில் பட்டதுமே மற்ற எல்லா எண்ணங்களும் பறந்து சிதறிவிடும், எல் லாம் கரைந்து விடும், அதையே ஒலிக்கும். கேட்ட வனின் உள்ளேயே ஒலிக்கும். இந்தக் கடைசி ஒலியை அவனுல் ஒருபோதும் மறக்க முடியாது. அது உறைந்து நெஞ்சைச் சில்லிடச் செய்து இதயத் தில் சுரீர் என்று பாய்ந்தது. அதனுல்தான் கமாண் டர் இப்போது அவ்வளவு அவசரப்பட்டான்.

அதனுல்தான் ஏதோ சுவற்றில் மோதிக் கொண் டவன் போலச் சட்டென நின்று விட்டான். பின்னே ஓடி வந்த ழேன்யா வேகத்தில் துப்பாக்கிக் குழாய் அவன் தோள்பட்டைக்கு அடியில் குத்தும்படி இடித் தாள். அவனே, திரும்பிப் பார்க்கக் கூட இல்லை.

மண்டியிட்டு அமர்ந்து கையைத் தரைமேல் வைத்தான்—காலடித் தடத்தின் அருகில்.

அது பெரிய அடித்தடம், பல் விளிம்புகள் உள்ளது.

''ஜெர்மானியர்களா?'' என்று ஒலியின்றி வெப்பப் பெரு மூச்செறிந்தாள் ழேனியா.

சார்ஜண்டு மேஜர் பதில் சொல்லவில்லை. பார்த்தான், கேட்டான், முகர்ந்தான், எலும்புகள் வெண்மையாகத் துருத்தும் அளவுக்கு முட்டியை இறுக்கினான். ழேனியா முன்னே பார்வை செலுத்தினாள்: பாறைக் குவியல் மேல் கருந் துளிகள் தெறித்திருந்தன. வஸ்கோவ் ஒரு கல்லை ஜாக்கிரதையாக எடுத்தான். கெட்டியான கறுப்புத் துளி அதன்மேல் உயிருள்ளது போல உருண்டது. ழேனியா தலையை வெட்டி அசைத்தாள், கத்த வாய் எடுத்தவள் மூச்சை அடக்கிக் கொண்டு திணறினாள்.

''அசட்டையான வேலை'' என்று தணிந்த குரலில் சொன்ன சார்ஜண்டு மேஜர், ''கவனமில்லாத வேலை'' என்று மீண்டும் கூறினான்.

அந்தக் கல்லை ஜாக்கிரதையாக வைத்துவிட்டுச் சுற்று முற்றும் கண்ணோட்டி, யார் எந்தப் பக்கம் சென்றார், யார் எங்கே நின்றார் என்று எண்ணிப் பார்த்தான். பின்பு பாறையின் மறுபுறம் சென்றான்.

பாறைப் பிளவில் வலியால் உடம்பு நெளிய விழுந்து கிடந்தாள் சோனியா. அவளுடைய பொசுங்கிய ஸ்கர்ட்டுக்குக் கீழே கோணலாகத் துருத்திக் கொண்டிருந்தன முரட்டுக் கித்தான் சோடுகள். வஸ்கோவ் அவளுடைய இடைவாரைப் பற்றிச்

சிறிது தூக்கி, கக்கத்தில் கைகொடுத்து நகர்த்தி மல்லாக்கக் கிடத்தினுன்.

சோனியா பாதி திறந்த மங்கிய விழிகளால் வானத்தை நோக்கினுள். மார்பின் மேல் சட்டை குருதியால் நனைந்திருந்தது. வஸ்கோவ் சட்டைப் பொத்தான்களை ஜாக்கிரதையாகக் கழற்றிவிட்டு, காதை மார்பு மீது வைத்து உற்றுக் கேட்டான். நெடு நேரம் கேட்டுக் கொண்டிருந்தான். ழேனியா பின்னே நின்று, சத்தம் கேட்காதிருப்பதற்காக முட்டியைக் கடித்தவாறு குலுங்கி அழுதாள். பிறகு வஸ்கோவ் நிமிர்ந்து, கன்னியின் மார்பு மீது குருதியால் நனைந்து ஒட்டிக்கொண்ட சட்டையைச் சரிப்படுத்தினுன். அதன்மேல் இரண்டு குறுகலான துளைகள். தென்பட்டன. ஒன்று இடது மார்பகத்துக்குள் சென்றிருந்தது. இரண்டாவது, சற்றுக் கீழே இதயத்தில் புகுந்திருந்தது.

''அதனுல் தான் நீ கத்தியிருக்கிருய்'' என்று பெரு மூச்சுடன் சொல்லிக்கொண்டான் சார்ஜண்டு மேஜர். ''பகைவன் உன்னை ஆண் என்று நினைத்துக் குத்தியிருக்கிருன். மார்பகம் தடுத்ததால் முதல் முறை கத்தி இருதயத்தில் பாயவில்லை. அதனுல் தான் உன்னுல் கத்த முடிந்திருக்கிறது...''

கழுத்துப் பட்டையைச் சீர்படுத்தினுன். சட்டைப் பொத்தான்களை ஒன்று விடாமல் போட்டான். சோனியாவின் கைகளை ஒன்றன்மேல் ஒன்ருக மார்பு மீது சேர்த்து வைத்தான். கண்களை மூட விரும்பினுன், ஆனுல் முடியவில்லை. இமைகள் தாம் வீணுக இரத்தக் கறை படிந்தன. வஸ்கோவ் எழுந்தான்.

''இப்போதைக்கு இங்கே படுத்திரு, சோனியா'' என்ருன்.

பின்னல் ஷேனியா வலிப்பு வந்தவள்போல முகத்தைக் கோணியவாறு தேம்பினுள். சார்ஜண்டு மேஜர் அவளைக் கடுப்புடன் பார்த்தான்.

''தேம்புவதற்கு நேரமில்லை, ஷேனியா.''

பின்பு குனிந்து, காலணி விளிம்புகளின் மங்கிய வரைத் தடங்களை உள்ளுணர்வால் அறிந்து விரைவாக முன்னே நடந்தான்...

## 9

ஜெர்மானியர்கள் சோனியாவை எதிர்பார்த்து காத்திருந்தார்களா அல்லது அவள் தற்செயலாக அவர்களுக்கு எதிர்ப்பட்டாளா? இரு முறை நடந்து பழகிய பாதையில் அச்சமின்றி ஓடினுள், அந்தப் பாழும் புகையிலைப் பையை வஸ்கோவுக்காக எடுத்து வரும் அவசரத்தில். களி பொங்க ஓடிய அவளால், ஓடிசல் தோள்மீது வியர்வை வடியும் சுமை எப்படி விழுந்தது, இருதயம் சுரீரெனப் பாய்ந்த கொடிய வலியால் ஏன் திடீரென்று துடித்தது என்பதைப் புரிந்து கொள்ளக்கூட முடியவில்லை. இல்லை, முடிந்தது. புரிந்து கொள்ளவும் கத்தவும் முடிந்தது அவளால். ஏனென்ருல் முதல் குத்தில் கத்தி இருதயத்தில் பாயவில்லை. மார்பகம் தடுத்தது. உயர்ந்த, இறுகிய மார்பகம்.

ஒரு வேளை இப்படி நடக்கவில்லையோ? ஜெர்மானியர் அவளை எதிர்பார்த்துக் காத்திருந்தார்களோ? அனுபவம் இல்லாத பெண்களையும் நீண்ட காலம் படைப் பணி ஆற்றுபவனும் வேவு வேலைக்காகப் பதக்கம் பெற்றிருப்பவனுமான அவனையும் அழிவுவேலையினர் தந்திரமாக ஏமாற்றி விட்டார்களோ? அவன் அவர்களைத் தேடவில்லையோ, அவர்

கள்தாம் அவனைத் தேடிக்கொண்டிருக்கிறார்களோ? எல்லோரையும் பார்த்து, கணக்கிட்டு, யார், யாரை, எப்போது கொல்வது என்று திட்டமிட்டு விட்டார்களோ?

ஆனால் இப்போது வஸ்கோவைத் தூண்டியது அச்சம் அல்ல, கடுங் கோபம். கண் தலை தெரியாத கோபத்தால் பற்களை நெறுநெறுத்தான். அவன் விரும்பியது ஒன்றுதான்: கொலைகாரர்களை எட்டிப் பிடித்துவிட வேண்டும். அதன் பின் சந்தர்ப்பத் துக்கு ஏற்றபடி நடவடிக்கை எடுத்துக் கொள்ள லாம்.

''என் கையில் சிக்கினால் உனக்குக் கத்த வாய்க் காது... வாய்க்கவே வாய்க்காது...''

மங்கிய அடித் தடங்கள் பாறைகள் மேல் சில இடங்களில் பதிந்திருந்தன. ஜெர்மானியர் இரண்டு பெயர் என்பதை வஸ்கோவ் இப்போது திண்ண மாகத் தெரிந்து கொண்டான். ஜெர்மானியர்கள் நெருப்பின் மறு பக்கம் இருப்பதாகவும் இந்தப் பக்கம் இல்லை என்றும் நம்பி அவர்களை நன்றாகக் கவனிக்காமல் விட்டதற்காகத் தன்னை மன்னிக்கவே அவனால் முடியவில்லை. தன் கவனக் குறைவினால் தானே மொழிபெயர்ப்பாளி, நேற்று தன்னோடு ஒரே பாத்திரத்தில் உணவைப் பகிர்ந்து கொண்ட பெண், கொல்லப்பட்டாள் என்ற எண்ணம் அவனை வதைத்தது.

இந்த வேதனை அவனுக்குள் ஓலமிட்டது, துடி துடித்தது. இப்போது அவனைத் தேற்றக்கூடியது பகைவர்களை விரட்டிச் செல்வது ஒன்றுதான். வேறு எதையும் பற்றிச் சிந்திக்க அவன் விரும்பவில்லை, ழேனியாவைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை.

எங்கே, எதற்காக ஓடுகிறோம் என்பது ழேனியாவுக்குத் தெரிந்திருந்தது. சார்ஜண்டு மேஜர் ஒன்றும் சொல்லவில்லை என்றாலும் அவளுக்கு விஷயம் விளங்கி விட்டது, ஆனால் பயம் உண்டாகவில்லை. அவளுடைய உணர்ச்சிகள் எல்லாம் திடீரெனக் கட்டியாக உறைந்து விட்டன. எனவே அவளுடைய நெஞ்சு வலிக்கவில்லை, குருதி பெருக்கவில்லை. அது அவளுடைய அனுமதியை எதிர்பார்த்தது போலிருந்தது. ழேனியா அந்த அனுமதியைத் தரவில்லை. எனவே இப்போது எதுவும் அவளுடைய கவனத்தைத் திருப்பவில்லை. எஸ்தோனிய மாது அவளை பாசிஸ்டுகளிடமிருந்து மறைத்து வைத்தாளே, அப்போதும் ழேனியாவுக்கு இந்த மாதிரி நேர்ந்தது. அதாவது, நாற்பத்தோராம் ஆண்டுக் கோடையில், கிட்டத்தட்ட ஓர் ஆண்டுக்கு முன்...

வஸ்கோவ் கையை உயர்த்தினான். அவள் மூச்சைக் கூடச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டு சட்டென நின்று விட்டாள்.

''இளைப்பாறு'' என்று அனேகமாகக் காதில் படாத அளவுக்குத் தணிந்த குரலில் சொன்னான் வஸ்கோவ். ''அவர்கள் இங்கே தான் எங்கோ இருக்கிறார்கள். கிட்டத்தில் எங்கேயோ.''

ழேனியா துப்பாக்கியை ஊன்றிச் சாய்ந்து, கழுத்துப்பட்டையை நெகிழ்த்தி விட்டாள். உரக்க, நெஞ்சு முழுவதாலும் மூச்சுவிட விருப்பம் உண்டாயிற்று. ஆனால் மூச்சைச் சல்லடையில் வடிகட்டி விடுவது போல, மெதுவாக விட வேண்டி இருந்தது. இருதயமோ, இதனால் அமைதியடைய அறவே மறுத்தது.

''அதோ அவர்கள்'' என்றான் சார்ஜண்டு மேஜர்.

பாறைகளின் நடுவில் இருந்த குறுகிய இடுக்கு வழியே அவன் நோக்கினான். ழேனியாவும் அங்கே பார்த்தாள். அவர்கள் இருந்த இடத்திலிருந்து காட்டுக்குச் சென்றிருந்த அடர்த்தியற்ற பிர்ச் மரச் சோலையில் விகுவுள்ள மர முடிகள் லேசாக அசைந் தன.

''இந்த வழியாக வருவார்கள்'' என்று திரும்பிப் பாராமலே பேச்சைத் தொடர்ந்தான் வஸ்கோவ். ''நீ இங்கே இரு. நான் வாத்துக் கத்தல் கத்தியதும் எதையாவது ஓசைப்படுத்து. அட, கல்லினாலோ துப் பாக்கிக் கட்டையாலோ தரையில் அடி, அவர்கள் உன் பக்கம் பார்க்கும் படி. நீ மறுபடி அசையாமல் இருந்துவிடு. புரிந்து கொண்டாயா?''

''புரிந்து கொண்டேன்'' என்றாள் ழேனியா.

''நான் வாத்துக் கத்தல் கத்தியவுடன். அதற்கு முன்னால் அல்ல.''

அவன் ஆழ்ந்து நன்றாக மூச்சு இழுத்தான். பின்பு பாறைகளின் ஊடாக பிர்ச் மரச் சோலைக்குள் பாய்ந்தான்—ஜெர்மானியரை வழி மறிப்பதற்காக.

முக்கியமானது, சூரியன் இருக்கும் திக்கிலிருந்து தாக்க வேண்டும்—வெயில் பட்டு அவர்களுடைய கண்கள் கூசும் படி. அடுத்தபடி முக்கியமானது, அவர்கள் முதுகுமேல் பாய வேண்டும். திடீரென்று தாக்கி வீழ்த்தி, கத்த முடியாதபடி கத்தியால் குத்த வேண்டும்.

அவன் நல்ல இடத்தைத் தெரிந்தெடுத்தான். ஜெர்மானியர் அவனை விட்டு விலகிச் செல்லவும் முடியவில்லை, அவனைக் கண்டு கொள்ளவும் முடிய வில்லை. அவர்களோ, மறைய வகை அற்றவர்களாக இருந்தார்கள். ஏனென்றால் வஸ்கோவின் மறைவிடத்

துக்கு எதிரே பிர்ச் மரச் சோலையில் இடைவெளி ஏற்பட்டிருந்தது. இங்கிருந்து குறி தவருமல் சுட அவனுல் முடிந்திருக்கும்தான். ஆனுல் வெடிச் சத்தம் மற்ற ஜெர்மானியர் காதுகளை எட்டாது என்று அவனுல் உறுதியாக எண்ண முடியவில்லை. நேரத்துக்கு முன் சத்தம் கிளப்புவது நோக்கத் துக்குப் பாதகமாயிருந்தது. ஆகவே அவன் கைத் துப்பாக்கியை சட்டென உறைக்குள் மறுபடி வைத்து அது விழுந்து விடாதிருக்கும் பொருட்டு உறை யின் பொத்தானைப் போட்டான். தான் போரில் கைப்பற்றியிருந்த பின்லாந்துக் கட்டாரி உறை யில் சுளுவாகப் போகிறதா என்று சரி பார்த்தான்.

அப்போது ஜெர்மானியர்கள் வசந்தகாலத் தளிர்கள் தழைத்த பிர்ச் மரச் சோலையின் திறப்பில் முதன் முறையாக வெளிப்பட்டார்கள். வஸ்கோவ் எதிர்பார்த்தது போலவே அவர்கள் இருவர். வலது தோளில் தானியங்கித் துப்பாக்கியைத் தொங்க விட்டவாறு முன்னே நடந்தான் நெடிது வளர்ந்த ஓர் அரக்கன். இருவரையும் கைத்துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தச் சரியான தருணம், அருமையான வாய்ப்பு. ஆனுல் சார்ஜண்டு மேஜர் இந்த எண் ணத்தை மீண்டும் விரட்டினுர். வெடிச்சத்தத்துக்குப் பயந்ததனுல் அல்ல, சோனியாவை நினைத்துக் கொண்டதால். அந்த நினைவு வந்தபின் ஜெர்மானி யரைச் சுளுவான மரண தண்டனையோடு விட அவன் மனம் இசையவில்லை. கண்ணுக்குப் பதில் கண், கத்திக் குத்துக்குப் பதில் கத்திக் குத்து—அப்போது தான் பழி தீரும்.

ஜெர்மானியர் கலவரம் இன்றி விட்டாற்றியாக நடந்தார்கள். பின்னே வந்தவன் ஏதோ பிஸ்கோத்தைக் கூடக் கறவி உதடுகளை நக்கிக் கொண்டிருந்தான். சார்ஜண்டு மேஜர் அவர்களுடைய அடிகளின் அகலத்தைத் திட்டப்படுத்திக் கொண்டான், கணக்கிட்டான், தனக்கு நேராக அவர்கள் வரும் நேரத்தை எண்ணிப் பார்த்தான், கட்டாரியை உருவினன். முதல்வன் தாவிப் பிடிக்கும் தூரத்துக்கு வந்ததும் வாத்தைப் போலச் சுருக்கமாக இரண்டு தரம் கத்தினன். ஜெர்மானியர் சட்டென்று அண்ணாந்து பார்த்தார்கள். அதற்குள் ழேனியா அவர்களுக்குப் பின்னே துப்பாக்கிக் கட்டையால் பாறையில் தட்டென்று அடித்தாள். ஜெர்மானியர் சத்தம் வந்த திக்கில் திடீரென்று திரும்பினர்கள். அதே கணம் வஸ்கோவ் பாய்ந்தான்.

இந்தப் பாய்ச்சலை அவன் துல்லியமாகக் கணக்கிட்டிருந்தான். பாய வேண்டிய கணம், தூரம் இரண்டும் இம்மி பிசகாமல் கணக்கிடப்பட்டிருந்தன. முதல் ஜெர்மானியனின் முதுகுமேல் விழுந்து முழங்கால்களால் அவனுடைய முழங்கைகளை இறுக்கிக் கொண்டான். அந்த ஜெர்மானியன் மூச்சு விடவும் திடுக்கிடவும்கூட நேரம் கொடுக்காமல் இடது கையால் அவனுடைய உச்சி மயிரைப் பிடித்துத் தலையைப் பின்னே சாய்த்து, கட்டாரியின் கூர் முனையை அவனது துருத்திய குரல்வளையில் செலுத்தினன்.

இப்படித்தான் கொல்ல வேண்டும் என்று வஸ்கோவ் திட்டமிட்டிருந்தான்: ஆட்டைக் கொல்வது போல. பகைவன் கத்த முடியாதபடி. இரத்தம் கக்கியவாறு கமறும்படி. குத்துண்டவன் விழத் தொ

டங்குவதற்குள் வஸ்கோவ் கட்டாரியை உருவிக் கொண்டு அவன்மேலிருந்து குதித்து இரண்டாமவன் மேல் பாய்ந்தான்.

ஒரு கணம்தான் கழிந்திருந்தது. ஒரு கணம் மட்டுமே. இரண்டாவது ஜெர்மானியன் இன்னும் முதுகைக் காட்டியவாறு நின்றிருந்தான், இன்னும் திரும்பிக்கொண்டிருந்தான். ஆனால் மறு பாய்ச்சலுக்கு வேண்டிய பலம்தான் வஸ்கோவுக்குப் போதவில்லையோ, அவன்தான் கொஞ்சம் நேரம் தாழ்த்து விட்டானோ தெரியவில்லை. அவனுடைய கத்தி ஜெர்மானியன் மேல் படவில்லை. குருதியில் நனைந்து சோப்பு போன்று வழுவழுப்பாய் இருந்த கத்தி ஜெர்மானியனின் தானியங்கித் துப்பாக்கியை வீழ்த்தி விட்டுத் தானும் நழுவி விழுந்துவிட்டது.

அசட்டுத்தனமாக முடிந்தது: தாக்குதலுக்குப் பதிலாகக் கைகலப்பு, அடிபிடி சண்டை. ஜெர்மானியன் சாதாரண வளர்ச்சி உள்ளவன்தான், ஆனால் வலியவன், முறுக்கேறிய தசைநார்கள் கொண்டவன். அவன் உடலை வளைத்துத் தனக்கு அடியில் கிடத்தித் துவைக்க வஸ்கோவால் முடியவே இல்லை. பாறைகளுக்கும் பிர்ச் மரங்களுக்கும் நடுவே பாசிபடர்ந்த தரையில் இருவரும் கட்டிப் புரண்டார்கள். ஆனால் ஜெர்மானியன் அப்போதைக்கு வாயை மூடிக் கொண்டிருந்தான். சார்ஜண்டு மேஜரை வென்றுவிடலாம் என்று நினைத்தானோ அல்லது சக்தியை வீணாக்க வேண்டாம் என்று இருந்தானோ, தெரியவில்லை.

வஸ்கோவ் மறுபடி குறிதவறிவிட்டான்: ஜெர்மானியனை இன்னும் நன்றாகப் பற்றிக் கொள்ளும் நோக்கத்துடன் பிடியைத் தளர்த்தினான். ஜெர்மானி

யன் அக்கணமே துள்ளி எழுந்து தன் கட்டாரியை உறையிலிருந்து உருவிக் கொண்டான். வஸ்கோவ் இந்தக் கட்டாரி பாய்ந்துவிடுமோ என்ற அச்சத்தில் அதைத் தவிர்ப்பதற்குத் தன் ஆற்றலேயும் கவனத்தையும் அளவின்றிச் செலவிட்டு விட்டான் விளைவாக ஜெர்மானியன் முடிவில் அவன் மேல் ஏறி அமர்ந்து வலிய கால்களால் அழுத்திக்கொண்டு· கட்டாரி முனையை அவனது குரல்வளையில் பாய்ச்சக் கடு முயற்சி செய்யலானுன். சார்ஜண்டு மேஜர் இப்போதைக்கு அவனுடைய கையைப் பற்றிக் கொண்டிருந்தான், தன்னைக் காத்துக் கொண்டிருந்தான். ஆனுல் ஜெர்மானியன் மேலிருந்து உடல் கனம் முழுவதையும் கொண்டு நசுக்கினுன். ஆகவே வெகு நேரம் இப்படித் தாக்குப் பிடிப்பது வஸ்கோவுக்கு முடியாதிருந்தது. வஸ்கோவ் இதை உணர்ந்தான், ஜெர்மானியனும் தெரிந்து கொண்டான். அதனுல் தான் அவன் கண்களை இடுக்கிக் கொண்டு பற்களை நெறுநெறுத்தான்.

திடீரென்று அவன் துவண்டு விழுந்தான். மூட்டை போலத்துவண்டு சரிந்தான். முதலில் வஸ்கோவுக்குப் புரியவில்லை. முதல் அடி அவன் காதுக்குக் கேட்கவில்லை. இரண்டாவது அடி கேட்டது. உளுத்த அடிமரத்தில் படுவது போன்ற சொத்தென்ற அடி. வஸ்கோவின் முகத்தில் வெப்பமான இரத்தம் தெறித்தது. ஜெர்மானியன் கோணிய வாயால் மூச்சு இழுக்க முயன்றவாறு பின்னே சரிந்தான். சார்ஜண்டு மேஜர் அவனை விலக்கித் தள்ளி அவன் கட்டாரியைப் பிடுங்கி அவனுடைய இருதயத்தில் குத்தினுன்.

அதன் பிறகே திரும்பிப் பார்த்தான்: படை

யினள் ழேனியா துப்பாக்கிக் கட்டையைக் குண் டாந்தடிபோலப் பிடித்தவாறு நின்றிருந்தாள்.

''சபாஷ், ழேனியா... உனக்கு நன்றி... தெரிவிக் கிறேன்'' என்று மூச்சு இரைக்கக் கூறினுன் வஸ் கோவ்.

எழுந்திருக்க முயன்ருன், முடியவில்லே. மீனேப் போலக்காற்றை விழுங்கியவாறு அப்படியே தரை யில் குந்தியிருந்தான். முதலாவது ஜெர்மானியனே மட்டும் திரும்பிப் பார்த்தான். எருது போலப் பெருந் தடியனுக இருந்தான் அந்த ஆள். அவன் இன்னும் நெளிந்து துடித்துக் கமறிக் கொண்டிருந் தான். அவன் வாயிலிருந்து குருதி பொங்கிப் பொங்கிப் பீரிட்டுக் கொண்டிருந்தது. இரண்டாம வனே அசைவற்றுக் கிடந்தான். சாவதற்கு முன் துடித்து நெளிந்தவன் அப்படியே உயிரற்றுப் போனுன். காரியம் முடிந்து விட்டது.

''அவ்வளவுதான், ழேனியா. அவர்களில் இரண்டு பேர் குறைந்து விட்டார்கள்'' என்று தணிந்த குரலில் சொன்னுன்.

ழேனியா திடீரென்று துப்பாக்கியை எறிந்து விட்டு, உடம்பைக் கூனிக் கொண்டு குடிகாரிபோலத் தள்ளாடியவாறு புதர் மறைவுக்குச் சென்ருள். அங்கே முழங்கால்களே மடித்தவாறு விழுந்தாள். குமட்டிக் குமட்டி வாந்தி எடுத்தாள். பொருமிப் பொருமி அழுது ''அம்மா'', ''அம்மா'' என்று கூவி அழைத்தாள்...

சார்ஜண்டு மேஜர் எழுந்தான். அவனுடைய முழங்கால்கள் இன்னும் நடுங்கின, மார்புக்கூட்டில் கடுமையான வலி எடுத்தது. ஆனுல் இனி நேரத்தை வீணுக்குவது ஆபத்தாய் இருந்தது. அவன் ழேனி

யாவைத் தொடவோ அழைக்கவோ இல்லை. ''கொல்லாதே'' என்ற, வாழ்க்கை போன்றே இயல்பான சட்டத்தை மீறும் முதல் கைகலப்பு எந்த மனிதனையும் நிலை குலையச் செய்துவிடும் என்பதைத்தன் அனுபவத்திலிருந்து அவன் தெரிந்து கொண்டிருந்தான். இதில் பழக்கப்பட வேண்டும், நெஞ்சு காய்ப்பேற வேண்டும். ஜேனியா போன்றவர்கள் அல்ல, வலிய ஆண்கள் கூடத் தொடக்கத்தில் கடுமையான சித்திரவதையை அனுபவித்தார்கள். பிறகுதான் அவர்களுடைய மனச்சான்று புதிய நடைமுறைக்குத் தன்னை இசைவித்துக் கொண்டது. இங்கேயோ, பெண், உயிர்க் கொலைமேல் வெறுப்பை இயற்கையான பண்பாகக் கொண்ட வருங்காலத் தாய், உயிருள்ள தலையில் துப்பாக்கிக் கட்டையால் அடித்தாள். இந்தக் குற்றத்துக்கும் பொறுப்பாளிகள் ஜெர்மானியர்களே என்று எண்ணினன் வஸ்கோவ். அவர்கள் மனிதாபிமான விதிகளை மீறினர்கள். அதனுலேயே எல்லா வகை விதிகளுக்கும் புறம்பாகி விட்டார்கள். அதனுல்தான் இன்னும் சூடு ஆறுத உடல்களைச் சோதனை செய்து தேடிய போது அவனுக்கு அழுகிய பிணத்தைப் புரட்டுவது போன்ற ஆபாச உணர்ச்சி மட்டுமே ஏற்பட்டது...

கமறுவதை நிறுத்தி அப்போதுதான் உயிரை விட்டிருந்த தடியனின் சட்டைப் பையில் கிடைத்தது வஸ்கோவ் தேடிய பொருள்: அவனுடைய புகையிலைப் பை—**''அன்புக்குரிய தாய்நாட்டுக் காவலருக்கு''** என்ற சொற்கள் சித்திரத் தையலால் பொறிக்கப் பட்டிருந்த, சார்ஜண்டு மேஜருக்குச் சொந்தமான புகையிலைப்பை. வஸ்கோவ் அதைக் கையில் வைத்து

இறுக்கினுன்: பாவம், சோனியாவால் இதை எடுத்து வர முடியவில்லை... வழியைத் தடுத்துக் கிடந்த மயிரடர்ந்த கையை சோட்டால் விலக்கித் தள்ளிவிட்டு ழேனியாவிடம் போனுன். அவள் இன் னும் மண்டியிட்டு அமர்ந்து ஓக்காளம் இட்டுப் பொருமிக் கொண்டிருந்தாள்.

''அப்பால் போங்கள்'' என்ருள்.

அவன் இறுக்கிய கையை அவள் முகத்தின் அருகே கொண்டுவந்து விரித்து,புகையிலைப் பையைக் காட்டினுன். ழேனியா உடனே தலை நிமிர்ந்தாள். அடையாளம் கண்டு கொண்டாள்.

''எழுந்திரு, ழேனியா.''

அவள் எழுந்திருக்க உதவினுன். திறப்பு வெளிக்குத் திரும்ப இட்டுச் செல்ல விரும்பினுன். ழேனியா ஓர் அடி எடுத்து வைத்தவள், நின்று தலையைக் குலுக்கினுள்.

''அட விடு'', என்ருன் வஸ்கோவ். ''கொஞ்ச நேரம் வேதனைப் பட்டாய், போதும். இங்கே ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். இவர்கள் மனிதர்கள் அல்ல. மக்களும் அல்ல, விலங்குகளும் அல்ல, பாசிஸ்டுகள். ஆகவே, இவர்களை இந்த நோக்கோடு பார்.''

ழேனியாவால் அப்படிப் பார்க்க முடியவில்லை. வஸ்கோவும் வற்புறுத்தவில்லை. தானியங்கித் துப் பாக்கிகளையும் அதிகப்படித் தோட்டாச் சுருள்களை யும் எடுத்துக்கொண்டான். மதுக் குப்பிகளையும் எடுத்துக் கொள்ள விரும்பியவன், ழேனியாவைக் கடைக்கணித்து அந்த எண்ணத்தைக் கைவிட்டான். அவை நாசமாய்ப் போகட்டும்: பிரமாதம் ஒன்றும் இல்லை. ழேனியாவுக்கு வேதனை குறையும், கொல்

லப்பட்ட ஜெர்மானியரின் நினைவு அவ்வளவாக வராது.

கொல்லப்பட்டவர்களை மறைக்க வஸ்கோவ் முயலவில்லை. திறப்பில் பெருகியிருக்கும் இரத்தம் முழுவதையும் துடைத்து அகற்ற முடியாதே. தவிர, மறைப்பதில் அர்த்தமும் இல்லை. பொழுது சாயத் தொடங்கி இருந்தது. விரைவில் உதவி வந்து விட வேண்டும். ஜெர்மானியர்களுக்குக் கொஞ்ச நேரந் தான் பாக்கி இருந்தது. இந்த நேரத்தை அவர்கள் நிம்மதி இன்றிக் கழிக்க வேண்டும் என்று சார்ஜண்டு மேஜர் விரும்பினான். பதைபதைப்புடன் ஓடியாட் டும், தங்கள் வேவுகாரர்களைக் குத்திக் கொன்றது யார் என்று ஊகம் செய்து கொண்டிருக்கட்டும், ஒவ்வொரு சலசலப்பையும் கேட்டு, ஒவ்வொரு நிழலையும் கண்டு ஓடி ஒளியட்டும்.

முதலில் எதிர்ப்பட்ட நீர்க் குட்டத்திலேயே சார்ஜண்டு மேஜர் முகம் கை கழுவிக் கொண்டான், கிழிந்த சட்டைக் கழுத்துப் பட்டையைச் சரிப் படுத்திக் கொண்டான்.

''நீயும் உடம்பு கழுவிக்கொள்கிறாயா?'' என்று ழேனியாவிடம் கேட்டான்.

அவள் தலையை அசைத்தாள். இல்லை, இப் போது இவளிடம் பேச்சுக் கொடுக்க முடியாது, இவளுடைய கவனத்தைத் திருப்ப முடியாது... சார் ஜண்டு மேஜர் பெருமூச்செறிந்தான்:

''நம்மவர்கள் இருக்கும் இடத்திற்கு நீயே போவாயா, இல்லை, நான் கூட வர வேண்டுமா?''

''நானே போவேன்.''

''போ. எல்லோரும் சோனியாவிடம் வாருங்

கள். அதாவது, அந்த இடத்துக்கு... ஒருவேளை, தனியே போகப் பயமாய் இருக்கிறதோ?''

''இல்லை.''

''எதற்கும் ஜாக்கிரதையாகப் போ. நீ புரிந்து கொள்ள வேண்டும்.''

''எனக்குப் புரிகிறது.''

''நல்லது போ. அங்கே சுணங்காதீர்கள். வருத்தப்படுவது எல்லாம் அப்புறம் செய்து கொள்வோம்.''

அவர்கள் பிரிந்தார்கள். வஸ்கோவ் அவள் மறையும் வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் சரியாக நடக்கவில்லை. பகைவன் நடமாடும் சத்தத்தை உற்றுக் கேட்காமல் தன் எண்ணத்தில் ஆழ்ந்தவளாய் நடந்தாள். படையினராம், அழகுதான்...

சோனியா பாதி திறந்த விழிகளால் வானத்தை வெறிதே நோக்கிக் கொண்டிருந்தாள். சார்ஜண்டு மேஜர் அவற்றை மூடுவதற்கு மீண்டும் முயன்றான், பலிக்கவில்லை. பிறகு அவன் அவளுடைய சட்டைப் பைப் பொத்தானைக் கழற்றி, அதில் இருந்தவற்றை வெளியே எடுத்தான். இளங் கம்யூனிஸ்டுகள் சங்க உறுப்பினர் சீட்டு, மொழிபெயர்ப்பாளர் வகுப்புச் சான்றிதழ், இரண்டு கடிதங்கள், ஒரு நிழல்படம் ஆகியவை அவை. படத்தில் சிவில் ஆட்கள் நிறைய இருந்தார்கள். நடுவே இருந்த மனிதரை வஸ்கோவால் காண முடியவில்லை. கத்தி கணக்காக அங்கே பாய்ந்திருந்தது. ஆனால் சோனியாவை அவன் கண்டுகொண்டான். நீண்ட கைகளும் அகலமான கழுத்துப் பட்டையும் உள்ள கவுன் அணிந்து

பக்கவாட்டில் நின்றாள். அந்தக் கழுத்துப்பட்டை யிலிருந்து அவளுடைய மெல்லிய கழுத்து நீட்டிக் கொண்டிருந்தது. தலைக்கு நாள் நடந்த உரையாடலை யும் சோனியாவின் ஏக்கத்தையும் நினைவுபடுத்திக் கொண்டான். படையினள் சோனியா குர்விச்சின் வீர மரணம் பற்றிய தகவலை அனுப்புவதற்குக் கூட ஓரிடமும் இல்லையே என்று வருத்தத்துடன் எண்ணிக்கொண்டான். பின்பு அவளுடைய கைக் குட்டையை உமிழ் நீரால் நனைத்து அவளுடைய இமைகளில் படிந்திருந்த இரத்தத்தைத் துடைத் தான். முகத்தை அந்தக் கைக்குட்டையால் மூடி னான்.

காகிதங்களைத் தன் பையில் வைத்துக் கொண் டான்—தன் கட்சி உறுப்பினர் சீட்டு இருந்த இடது பையில். அருகே உட்கார்ந்து மும்மடங்கு நினைவுக்கு உரிய புகையிலைப் பையிலிருந்து புகையிலைத் தூள் எடுத்துச் சுருட்டிப் புகைத்தான்.

அவனுடைய சீற்றம் தணிந்து விட்டது, வலியும் குறைந்து விட்டது. ஏக்கம்தான் அவனுள் நிறைந் திருந்தது, தொண்டைக் குழி வரை. தொண்டை கரகரத்தது. இப்போது நிலைமையை ஆழ்ந்து சிந் தித்து, சீர்தூக்கிப் பார்த்து, வகைப்படுத்தி, மேற் கொண்டு எப்படிச் செயல்படுவது என்று புரிந்து கொள்ள முடிந்தது.

வேவுகாரர்களைத் தீர்த்துக் கட்டி அதன்மூலம் தன்னைக் காட்டிக்கொண்டு விட்டதற்காக அவன் வருந்தவில்லை. இப்போது நேரம் அவனுக்கு சாதக மாய் இருந்தது. இப்போது அவர்களையும் ஜெர்மன் அழிவுவேலையினரையும் பற்றிய தகவல்கள் எல்லா வழிகளிலும் அஞ்சல் ஆகிக் கொண்டிருந்தன, இந்த

ஜெர்மன்காரர்களை ஒழிப்பது எப்படி என்று படையினருக்கு இப்போது உத்தரவுகள் கொடுக்கப் பட்டுக் கொண்டிருக்கலாம். அவர்கள் நால்வரும் பதினுன்கு ஜெர்மானியரை எதிர்த்து இன்னும் மூன்று மணி நேரம் சண்டை போட வேண்டியிருக்கும். அட ஐந்து மணி நேரம் என்று வைத்துக் கொண்டால் கூட, சமாளித்து விடலாம். அதிலும் அவர்கள் ஜெர்மானியரைக் குழப்பத்தில் ஆழ்த்தி லெகோன்தவோ ஏரியைச் சுற்றிப் போகும்படி செய்து விட்டார்கள். ஏரியைச் சுற்றிப் போவதற்கோ, ஒரு பகலும் இரவும் நடந்தாக வேண்டும்.

அவனுடைய படையினர் எல்லாச் சாமான்களையும் எடுத்துக்கொண்டுவந்து சேர்ந்தார்கள். இருவர் —வெவ்வேறு திசைகளில்—போய் விட்டார்கள். ஆனல் அவர்களுடைய சாமான்கள் இருந்தன. படைப்பிரிவு செட்டும் கட்டுமான குடும்பம் போலப் பண்டங்களைப் பேணிக் காக்கத் தொடங்கியது. சோனியாவின் உடலைக் கண்டதும் காலியா வீரிட்டு அழத் தொடங்கினுள். ஆனல் ரீதா அவளை அதட்டினுள்.

''இந்தா, அழுகையை அடக்கு!''

காலியா மௌனமாகி விட்டாள். சோனியாவின் தலை மாட்டில் மண்டியிட்டு அமர்ந்து வாய்க்குள் தேம்பினுள். ரீதா பெருமூச்செறிந்தாள். ஆனல் அவளுடைய விழிகள் நிலக்கரித் துண்டுகள் போல ஈரமின்றி இருந்தன.

''சரி, தயார் படுத்துங்கள்'' என்ருன் சார்ஜண்டு மேஜர்.

கோடரியை எடுத்துக் கொண்டு (அட, இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து மண்வெட்டி

கொண்டுவர மறந்து விட்டான்!), புதைக்க இடம் தேடுவதற்காகப் பாறைகளின் நடுவே சென்றுன். தேடினுன், குத்திப் பார்த்தான். எங்கும் பாறைகள். தோண்ட முடியாது. நல்ல வேளேயாக ஒரு கிடங்கைக் கண்டான். கிளேகளே வெட்டி அடியில் பரப்பினுன், திரும்பி வந்தான்.

''படிப்பில் முதலாய் இருந்தாள். எல்லாப் பாடங்களிலும் கெட்டிக்காரியாய் இருந்தாள்—பள்ளிக்கூடத்திலும் சரி, பல்கலேக் கழகத்திலும் சரி'' என்றுள் ரீதா.

''ஆமாம், கவிதை படித்தாள்'' என்றுன் சார்ஜண்டு மேஜர்.

ஆனுல் தனக்குள் நினேத்துக் கொண்டான்: முக்கியமானது இது அல்ல. முக்கியமானது என்ன என்றுல் சோனியா குழந்தைகள் பெற்றிருப்பாள், அவர்கள் பேரர்களேயும் கொள்ளுப் பேரர்களேயும் பெற்றிருப்பார்கள். இப்போது இந்த வம்ச நூல் அறுந்து விட்டது மனித குலத்தின் முடிவற்ற சரட்டில் ஒரு சிறு இழை, கட்டாரியால் துணிக்கப் பட்டு விட்டது...

''தூக்குங்கள்'' என்றுன்.

ழேனியாவும் ரீதாவும் தோள்களேப் பிடித்துக் கொண்டார்கள். காலியா கால்களேப் பிடித்துக் கொண்டாள். இடறி விழுந்து தள்ளாடியவாறு தூக்கிச் சென்றுர்கள். காலியா புதிய மரப்பட்டைச் சோடு அணிந்த காலே இழுத்து இழுத்து வைத்தபடி நடந்தாள். வஸ்கோவ் சோனியாவின் மேல் கோட்டை எடுத்துக் கொண்டு பின்னே சென்றுன்.

கிடங்கின் அருகே சென்றதும் அவன், ''நில்லுங்கள். இப்போதைக்கு இங்கே கிடத்துங்கள்'' என்றுன்.

கிடங்கின் விளிம்பருகே கிடத்தினார்கள். தலை சரியாகக் கிடக்காமல் ஒரு பக்கம் சாய்ந்தது. ழேனியா தொப்பியைத் தலைக்கு அடியே ஒரு பக்கத்தில் வைத்தாள். வஸ்கோவ் சற்று சிந்தனை செய்துவிட்டு முகத்தைச் சுளித்தவாறு (ஐயோ! அவனுக்கு இவ்வாறு செய்ய விருப்பம் இல்லை. இல்லவே இல்லை!) ரீதாவைப் பார்க்காமலே, ''அவளுடைய இந்தக் காலைக் கொஞ்சம் பிடித்துக்கொள்'' என்று முணுமுணுத்தான்.

''எதற்காக?''

''பிடித்துக்கொள் என்றால் பிடித்துக் கொள்ளேன்! அட இங்கே இல்லை, முழங்கால்களை!''

பிறகு சோனியாவின் ஒரு சோட்டைப் பற்றி இழுத்தான்.

''எதற்காக?.. கழற்றுகிறீர்கள்!'' என்று கத்தினாள் ரீதா.

''ஒரு படையினள் வெறுங்காலோடு இருக்கிறாளே, அதற்காகத் தான்'' என்றான் சார்ஜண்டு மேஜர்.

''வேண்டாம், வேண்டாம், வேண்டாம்!'' என்று குமுறி அழுதாள் காலியா.

''இதோ பாருங்கள் பெண்களா, நாம் இங்கே கொஞ்சல் விளையாட்டு ஆடவில்லை. உயிரோடு இருப்பவர்களைப் பற்றி நினைக்க வேண்டும். போரில் இது தான் சட்டம். அஸ்யானினா, பிடித்துக்கொள். நான் உத்தரவிடுகிறேன், பிடித்துக்கொள்'' என்று கண்டிப்பாய்க் கூறினான் கமாண்டர்.

சோனியாவின் மறு சோட்டையும் கழற்றி காலியாவின் அருகே போட்டான்.

''சோடுகளை மாட்டிக் கொள். துக்கப்படாமல்

போட்டுக் கொள். ஜெர்மானியர் காத்திருக்க மாட்டார்கள்'' என்றான்.

கிடங்கில் இறங்கி, சோனியாவின் உடலை வாங்கி மேல் கோட்டால் சுற்றிப் போர்த்திக் கிடத்தினான். பின்பு பெண்கள் எடுத்துத் தந்த கற்களை அதன்மேல் அடுக்கினான். ஒரு திட்டு உருவாயிற்று. சார்ஜண்டு மேஜர் அதன் உச்சியில் தொப்பியை வைத்து அதை ஒரு கல்லினால் அழுத்தினான். ழேனியா பசுங்கிளையை உச்சியில் நாட்டினாள்.

''வரைபடத்தில் குறித்துக் கொள்வோம். சண்டை முடிந்த பிறகு அவளுக்கு நினைவுச் சின்னம் எழுப்புவோம்'' என்றான் வஸ்கோவ்.

வரைபடத்தில் இடத்தைக் கணக்கிட்டுச் சிலுவைக் குறி இட்டான். பார்த்தான், காலியா மரப் பட்டைச் சோடும் காலுமாக நின்று கொண்டிருந்தாள்.

''படையினள் செத்வெர்த்தாக்? என்ன சேதி? ஏன் இன்னும் சோடுகளைப் போட்டுக்கொள்ளவில்லை?''

காலியா வீரிட்டாள்:

''வேண்டாம், வேண்டாம், வேண்டாம்! இது கூடாது! கெடுதல்! என் தாயார் மருத்துவப் பணியினள்...''

''போதும் புளுகினது!'' என்று திடீரெனக் கத்தினாள் ரீதா. ''உனக்குத் தாயார் கிடையாது! முன்பும் இருக்கவில்லை! வெறுமே பாவனை செய்கிறாய் நீ. வீண் கதை கட்டாதே!..''

காலியா வாய் விட்டு அழுதாள். பொம்மையை யாரோ உடைத்துவிட்டதால் அழும் குழந்தை போலத் தேம்பித் தேம்பி அழுதாள்...

## 10

''அட நீ எதற்காக இப்படி, எதற்காக?'' என்று ரீதாவைக் கடிந்து, காலியாவை அணைத்துக் கொண்டாள் ழேனியா. ''நாம் வன்மம் பாராட்டக் கூடாது, இல்லாவிட்டால் கொடியவர்கள் ஆகிவிடுவோம். ஜெர்மானியர் போலக் கொடியவர்கள் ஆகிவிடுவோம்...''

ரீதா பேசாதிருந்தாள்.

காலியா உண்மையிலேயே பாவனைதான் செய்தாள். குலப்பெயர் கூட அனாதை விடுதியில் அவளுக்கு அளிக்கப் பட்டது. அவள் மற்ற குழந்தைகளை விட வளர்ச்சியில் கால் வாசி குறைவாய் இருந்ததால் கால் பங்கு என்று பொருள்படும் செத்வெர்த்தாக் என்ற பெயர் அவளுக்கு இடப்பட்டது.

அனாதைக் குழந்தைகள் விடுதி முன்னாள் கிறித்துவ மடம் ஒன்றில் இருந்தது. எதிரொலி மிக்க வளைவிட்டங்களிலிருந்து கொழுத்த மர வட்டைகள் உதிர்ந்தன. மோசமாக வண்ணம் தீற்றிய தாடி அடர்ந்த கணக்கற்ற முகங்கள் ஆலயங்களின் சுவர்களிலிருந்து பார்த்தன. இந்த ஆலயங்கள் அவசர அவசரமாக இருப்பிட விடுதிகள் ஆக்கப்பட்டிருந்தன. பொது அறைகள் நிலவறைகள் போலக் குளிர்ந்திருந்தன.

அந்த மடம் தோன்றியது முதல் கேட்டிராத புரளியைப் பத்தாவது வயதில் கிளப்பிவிட்டுப் பெயர் பெற்றாள் காலியா. இரவில் தன் இயற்கைத் தேவைகளுக்காகப் போனவள், பயங்கரமாக வீரிட்டு அலறி, விடுதியினர் எல்லோரையும் எழுப்பி விட்டு விட்டாள். திடுக்கிட்டுப் படுக்கைகளிலிருந்து

எழுந்து ஓடிவந்த வளர்ப்பாளர்கள் காலியா அரை இருட்டான இடை வழியில் கிடக்கக் கண்டார்கள். ஒரு தாடிக்காரக் கிழவன் தன்னை நிலவறைக்குத் தூக்கிப் போகப் பார்த்ததாக விவரித்தாள் காலியா.

''தாக்குதல் வழக்கு'' உருவாயிற்று. சுற்று வட்டத்தில் ஒரு தாடிக்காரன் கூட இல்லாதது வழக்கின் சிக்கலை அதிகமாக்கிற்று. வந்த விசாரணை அதிகாரிகளும் அமெச்சூர் துப்பறி நிபுணர்களும் காலியாவை விவரமாக விசாரித்தார்கள். உரையாடலுக்கு உரையாடல் நிகழ்ச்சியில் புதுப் புது விவரங்கள் சேர்ந்துகொண்டு போயின. விடுதி மேற்பார்வையாளன் முதியவன். காலியா அவனிடம் மிகுந்த நட்பு பாராட்டினுள், ஏனென்ருல் அவளுக்கு அவ்வளவு பொருத்தமான குலப்பெயர் சூட்டியவன் அவன்தான். இவன் காலியாவை நுட்பமாக விசாரித்து இதெல்லாம் வெறும் கற்பனை என்று தெரிந்து கொண்டான்.

எல்லோரும் காலியாவை வெகு காலம் எள்ளி நகையாடி இகழ்ந்தார்கள். அவள் ஒரு கதை புனைந்து சொன்னுள். அது சித்திரக் குள்ளன் கதையை வெகுவாக ஒத்திருந்தது உண்மையே. ஆனுல் முதலாவது, கதாநாயகனுக்குப் பதில் காலியா கதாநாயகியைக் கற்பனை செய்திருந்தாள். இரண்டாவது, தாடிக்காரக் கிழவர்களையும் இருண்ட நிலவறைகளையும் பற்றிய வருணனைகள் கதையில் நிறைய இருந்தன.

கதை எல்லோருக்கும் அலுத்துப் போனதும் காலியாவின் புகழும் போய் விட்டது. காலியா புதுக் கதை புனைய முற்படவில்லை. பாதிரிகள் நிதிகளைப் புதைத்து வைத்திருக்கிருர்கள் என்ற வதந்திக

மட்டும் அனாதை விடுதியில் பரவலாயின. புதையல் தேட்ட வெறி தொற்று நோய் போல வளர்ப் பாளர்களைக் பற்றிக் கொண்டது. குறுகிய காலத்திற் குள் மடத்தின் முகப்புவெளி மணல் கிடங்காக மாறி விட்டது. நிர்வாகத் தலைவர்கள் இந்த விபத்தைச் சமாளிப்பதற்குள் அலையடிக்கும் வெள்ளை ஆடை கள் அணிந்த பிசாசுகள் நிலவறைகளிலிருந்து வெளி வரத் தொடங்கின. இந்தப் பிசாசுகளை நிறையப் பெயர் கண்டார்கள். இரவு நேரங்களில் அறை களிலிருந்து வெளியே போகவும் அதன் பின் நேரும் விளைவுகளை அனுபவிக்கவும் சிறுவர்கள் அறவே மறுத்தார்கள். விவகாரம் பெரு விபத்தின் அளவை எட்டி விடவே, வளர்ப்பாளர்கள் பிசாசுகளை இர கசியமாக வேட்டையாட வேண்டியதாயிற்று. அர சாங்கத் துப்பட்டியால் முக்காடு இட்டிருந்த முதல் பெண் பேயைக் கையும் மெய்யுமாகப் பிடித்த வளர்ப்பாளர்கள், அவள் காலியாதான் என்பதைக் கண்டார்கள்.

இதன்பின் காலியா அடங்கியிருந்தாள். மும்முர மாகப் படித்தாள், சிறு குழந்தைகளைச் சீராட்டி னாள். அவள் சிறு வயது முதல் விரும்பியவை தனியே பாடுவதும் நீண்ட உடைகளும் எல்லோ ராலும் பாராட்டப்படுவதுமே. ஆயினும் அவள் பாட்டுக் குழுவில் சேர்ந்து பாடவும் இசைந்தாள். அப்போது அவளுக்கு ஏற்பட்டது முதல் காதல். ஆனால் எல்லாவற்றையும் மர்மத் திரையால் மூடி அவள் பழகிவிட்ட படியால் விரைவிலேயே அனா தைக் குழந்தைகள் விடுதியில் துண்டுக் குறிப்பு களும் கடிதங்களும் கண்ணீரும் சந்திப்புக்களுமாகப் பெருத்த அமளி ஏற்பட்டது. குறும்புக்காரி மறுபடி

பிடிபட்டாள். அதிகாரிகள் அவளை நூலகப் பயிற்சிப் பள்ளியில் அதிகப்படி உபகாரச் சம்பளத்துடன் சேர்த்து அவளிடமிருந்து விடுதலை பெற்ருர்கள்.

யுத்தம் மூண்ட போது காலியா மூன்ருவது ஆண்டுப் பயிற்சி வகுப்பில் படித்துக்கொண்டிருந் தாள். முதல் திங்கள் கிழமை அன்றே அவளுடைய வகுப்பு மாணவர்கள் எல்லோரும் படைத் தலைமை அலுவலகத்தில் ஆஜராஞர்கள். எல்லா மாணவர் களும் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள், ஆஞல் காலியா சேர்க்கப்படவில்லை. ஏனென்ருல் உயரத்திலும் வயதிலும் அவள் இராணுவ அளவு மானங்களுக்கு ஏற்றவளாக இல்லை. காலியாவோ, மனம் சோராமல் படைத் தலைமை அலுவலகத்தின் மீது பிடிவாதமாகப் படையெடுத்த வண்ணமாய் இருந்தாள், கூசாமல் புளுகிஞள். எனவே, உறக்க மின்மையால் மூளை கலங்கிப் போயிருந்த லெப்டி னண்டு கர்னல் ஒரேயடியாகக் குழப்பம் அடைந்து விதிவிலக்காக அவளை விமான எதிர்ப்புப் படைக்கு அனுப்பி வைத்தார்.

நிறைவேறிய விருப்பம் எப்போதுமே கவர்ச்சி யை இழந்து விடுகிறது. எதார்த்த உலகம் கடுமை யும் கொடூரமும் உள்ளதாய் இருந்தது. அதற்குத் தேவைப்பட்டது வீரக் கிளர்ச்சி அல்ல, இராணுவ விதிகள் பிசகின்றி நிறைவேற்றப்படுவது தான். களி நிறைந்த புதுமை விரைவில் மறைந்து விட் டது. அன்ருட வேலைகளோ, போர்முனை பற்றிய கா லியாவின் கற்பனைக்குக் கொஞ்சங்கூடப் பொருந்த வில்லை. காலியா நெஞ்சு கலங்கிச் சோர்ந்து போ ஞள். இரவு நேரங்களில் இரகசியமாக அழுதாள். அப்போது ழேனியா வந்து சேர்ந்தாள். உலகம்

மீண்டும் விரைவாகவும் களிப்புடனும் இயங்கலாயிற்று.

ஆனல் பொய் பேசாதிருக்க காலியாவால் முடியவே இல்லே. உண்மையில் அவள் சொன்னது பொய் அல்ல, உள்ளது போன்று வெளியிடப்பட்ட விருப்பம் மட்டுமே. இவ்வாறே, மருத்துவப் பணி செய்யும் தாயார் உருவானுள். அவள் நிலவுவதை காலியாவே அனேகமாக நம்பினுள்...

மிகுந்த நேரம் வீணுகி விட்டதால் வஸ்கோவ் கடும் பதற்றம் அடைந்தான். இந்த இடத்தை விட்டு விரைவில் போய், ஜெர்மானியர்கள் இருக்கும் இடத்தை உணர்ந்து அவர்களே விடாது பின் தொடர வேண்டும். அதன் பின் அவர்கள் தங்கள் முன்னேடிகளேக் கண்டு கொள்ளட்டும், பரவாயில்லே. அப்போது சார்ஜண்டு மேஜர் அவர்களுக்கு மேலே கவிவான், அவர்கள் அவனுக்கு மேலே கவிய மாட்டார்கள். அவன் அவர்களுக்கு மேலே கவிந்து, அவர்களே இழுத்து வேண்டிய திக்கில் செலுத்துவான்... காத்திருப்பான். நம்மவர்கள் வந்து, பகைவர்களேச் சூழ்ந்து பிடிக்கத் தொடங்குவதற்காகக் காத்திருப்பான்.

ஆனல்... அவர்கள் நேரம் போக்கிவிட்டார்கள். சோனியாவை அடக்கம் செய்தார்கள், காலியாவுடன் பேசி இணங்க வைத்தார்கள். இப்படி நேரம் கழிந்து விட்டது. வஸ்கோவ் தானியங்கித் துப்பாக்கிகளேச் சரிபார்த்தான், அதிகப்படித் துப்பாக்கிகளே—லீஸாவுடையதையும் சோனியாவுடையதையும்—பத்திரமான இடத்தில் மறைத்து வைத்தான், தோட்டாக்களேச் சமமாகப் பகிர்ந்து கொண்டான்.

''தானியங்கித் துப்பாக்கியால் சுட்டு இருக்கிரு யா?'' என்று ரீதாவிடம் கேட்டான்.

''நம்முடையதால் மட்டுமே.''

''இந்தா, ஜெர்மன் துப்பாக்கியை வைத்துக் கொள். பழகி விடுவாய் என்று நினைக்கிறேன்.'' அதை எப்படி இயக்குவது என்று காட்டினுன். ''நீள மாகச் சுடாதே: மேலே தூக்கிக் கொள்ளும். குட்டையாக இழுத்துச் சுடு'' என்று எச்சரித்தான்.

புறப்பட்டார்கள், நல்ல காலமாக... வஸ் கோவ் முன்னே நடந்தான். காலியாவும் ழேனியாவும் நடுவிலும் ரீதா பின்னுலும் வந்தார்கள். ஜாக்கிரதையாக, சந்தடி இன்றி நடந்தார்கள். ஆனுல் பகைவர் நடமாட்டத்தைக் கவனிக்காமல் தங்கள் நடைச் சத்தத்தையே உற்றுக் கேட்டுக் கொண்டு இருந்து விட்டார்கள் போலும், ஏனென்ருல் ஜெர்மானியருக்கு நேரே வராமல் மயிரிழை தப்பினுர்கள். மயிரிழை, கதைகளில் வருவதுபோல.

நல்ல வேளையாக சார்ஜண்டு மேஜர் அவர்களை முதலில் பார்த்தான். பாறையின் பின்னிருந்து தலையை நீட்டியதுமே அவர்களைக் கண்டான்: இருவர் நேரே அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் அவர்களைத் தொடர்ந்தார்கள். வஸ்கோவ் ஏழு அடிகள் தாமதித்திருந்தாஞே, அவர்கள் பாடு அதோடு தீர்ந்திருக்கும். இரண்டே குண்டு வரிசைகளில் தீர்ந்திருக்கும்.

ஆனுல் இந்த ஏழு அடிகள் அவன் நடக்கவில்லை. எனவே நிகழ்ச்சிப் போக்கு திசை திரும்பி விட்டது. பகைவரிடமிருந்து மறைந்து கொள்ளவும், சிதறி ஓடி மறையும்படி பெண்களுக்குக் கைச் சாடை காட்டவும் காற்சட்டைப் பையிலிருந்து கைக்குண்டை

எடுக்கவும் அவனுக்கு நேரம் கிடைத்தது. கைக் குண்டு வெடித்திரியோடு இருந்தது நல்லதாயிற்று. பாறையின் மறைவிலிருந்து அதை ஜெர்மானியர் மேல் எறிந்தான். அது வெடித்ததும் தானியங்கித் துப்பாக்கியால் சுட்டான்.

விதிகளில் இது எதிர்ச் சண்டை என்று குறிக்கப் படும். இதற்கு இயல்பானது என்ன என்முல் பகை வனுக்கு நம்முடைய பலம் தெரியாது. நாம் வேவுப் படையினரா, முன்னோடிகளா என்பது அவனுக்குப் புரியாது. எனவே அவனுக்குச் சுதாரிக்க இடந் தரக் கூடாது என்பது இதில் முக்கியமானது.

வஸ்கோவ் இதைப் பற்றி நினைக்கவில்லை. இது அவன் உள்ளத்தில் பதிந்திருந்தது, ஆயுட்காலம் முழுவதும் அழியாதபடி பதிந்திருந்தது. சுட வேண் டும் என்று மட்டுமே அவன் நினைத்தான். தன் படை யினர் மறைந்து கொண்டார்களா, விழுந்து கிடக் கிருர்களா அல்லது ஓடிவிட்டார்களா என்ற எண் ணமும் அவனுக்கு வந்தது.

ஜெர்மானியரும் எல்லாத் தானியங்கித் துப் பாக்கிகளாலும் வஸ்கோவின் பாறையில் சுட்டார் கள். எனவே குண்டு வெடிச் சத்தம் காதுகளைச் செவிடாக்கிற்று. ஒரு கல் துணுக்கு வஸ்கோவின் முகத்தை வெட்டி விட்டது. கண்ணில் புழுதி சிதறி விட்டது. அவனுக்கு அனேகமாகக் கண் தெரிய வில்லை. கண்ணீர் ஆருகப் பெருகிற்று. துடைத்துக் கொள்ள நேரம் இல்லை.

அவனுடைய தானியங்கித் துப்பாக்கியின் கொண்டி பின்னே துள்ளிக் கிளிக்கிட்டது: தோட் டாக்கள் தீர்ந்துவிட்டன. இப்படி நேருமோ என்று வஸ்கோவ் பயந்து கொண்டிருந்தான். புதிய தோட்

டாச் சட்டத்தை மாட்டுவதற்குச் சில விஞடிகள் பிடித்தன. அப்போது இந்த விஞடிகள் ஒரு முழு ஆயுட்காலத்துக்குச் சமமாய் இருந்தன. ஜெர்மானியர் ஓசை அடங்கிய தானியங்கித் துப்பாக்கியை நோக்கிப் பாய்ந்து, இடையிலிருந்த பத்து மீட்டர் தூரத்தைத் தாவிக் கடந்து விட்டால் போயிற்று. எல்லோரும் சமாதி ஆக வேண்டியதுதான்.

ஆனல் அழிவுவேலையினர் முன்னே வரவில்லை. தலைகளைக் கூட நிமிர்த்தவில்லை அவர்கள். ஏனென்ருல் அவர்களை நெருக்கியது இரண்டாவது தானியங்கித் துப்பாக்கி, ரீதாவுடையது. சுருக்கமாக, குறிபார்த்து நேரே சுட்டாள். சார்ஜண்டு மேஜருக்கு இடை நேரம் தந்தாள். வாழ்நாள் முழுவதும் நன்றி பாராட்டத் தக்க இடை நேரம்.

இந்தச் சண்டை எவ்வளவு நேரம் நீடித்தது என்பது ஒருவருக்கும் நினைவில்லை. சாதாரண நேரப்படி கணக்கிட்டால் சண்டை விரைவில் முடிந்து விட்டது—எதிர்ச் சண்டை எப்படி முடிய வேண்டும் என்று விதிகளில் குறிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே. ஆனல் அனுபவித்ததை—செலவிடப்பட்ட சக்தி, இறுக்கம், ஆபத்து ஆகியவற்றை—வைத்துக் கணக்கிட்டால் ஆயுளின் பெரும் பகுதி, சிலருக்கு வாழ்நாள் முழுவதும் நீடித்தது இந்தச் சண்டை.

காலியா செத்வெர்த்தாக் ஒரேயடியாகக் கிலி கொண்டுவிட்டதால் ஒரு தரங்கூட அவளால் சுட முடியவில்லை. முகத்தைப் பாறைக்குப்பின் மறைத்துக் கொண்டு, காதுகளைக் கைகளால் பொத்தியவாறு படுத்துக் கிடந்தாள். அவளுடைய துப்பாக்கி ஒரு புறம் கிடந்தது. ஆனல் ழேனியா விரைவில் சுதா

ரித்துக் கொண்டாள். குருட்டாம் போக்கில் சுட்டாள். யார் மேலாவது பட்டதா, படவில்லையா என்று அவள் கவலைப்படவில்லை. இது பயிற்சிக் களம் அல்லவே. குறி பார்க்க நேரம் இல்லையே.

இரண்டு தானியங்கித் துப்பாக்கிகளும் ஒரு சாதாரணத் துப்பாக்கியும். இவ்வளவு தான் அவர்களுடைய சுடு திறன். ஆனாலும் ஜெர்மானியர் எதிர்த்து நிற்கவில்லை. பயந்து விட்டதால் அல்ல, விளங்காமையால். சற்று நேரம் சுட்டு விட்டுப் பின் வாங்கி விட்டார்கள். காப்புச் சுடுகைக்கோ தடைக்கோ ஏற்பாடு செய்யாமல் பின்வாங்கிவிட்டார்கள். காட்டுக்குள் புகுந்து விட்டார்கள் என்பது அப்புறம் தெரிய வந்தது.

திடீரென்று குண்டுச் சத்தம் அடங்கி விட்டது. ழேனியா மட்டுமே துப்பாக்கி எதிர்த்தடிக்கையில் உடலோடு நடுங்கியவாறு இன்னும் சுட்டுக் கொண்டிருந்தாள். தோட்டா வார் முழுவதையும் சுட்ட பின்பே நிறுத்தினாள். நீரில் மூழ்கி வெளிவந்தவள் போல வஸ்கோவை நோக்கினாள்.

''முடிந்தது'' என்று பெருமூச்சு விட்டான் வஸ்கோவ்.

கல்லறையின் நிசப்தம் குடி கொண்டது. காதுகளிலோ ஒரே இரைச்சல். வெடி மருந்து நாற்றமும் கல் தூள் நெடியும் தீய்ந்த வாடையும் அடித்தன. சார்ஜண்டு மேஜர் முகத்தைத் துடைத்துக் கொண்டான் — உள்ளங் கைகளில் இரத்தம் அப்பியது. சிதர்கள் முகத்தைக் கீறியிருந்தன.

''உங்களுக்குக் காயம் பட்டுவிட்டதோ?'' என்று இரகசியமாகக் கேட்டாள் ரீதா.

''இல்லே. நீ அங்கே பார் ரீதா'' என்ருன் சார்ஜண்டு மேஜர்.

பாறையின் பின்னிருந்து எட்டிப் பார்த்தான். பகைவர்கள் கூடவில்லே. உற்று நோக்கினன். காட்டுடன் இணைந்திருந்த தூரத்து பிர்ச் மரச் சோலேயில் மர முடிகள் சற்றே அசைந்தன. கைத் துப்பாக்கியைத் தயாராகப் பிடித்தவாறு ஜாக்கிரதையாக முன்னே நகர்ந்தான். பாய்ந்து ஓடி இன்னெரு பாறையின் பின் மறைந்து கொண்டு மறுபடி எட்டிப் பார்த்தான். கைக்குண்டு வெடித்ததால் சிதறிய பாசியில் இரத்தம் படிந்திருந்தது. நிறைய இரத்தம். ஆனல் உடலேக் காணவில்லே. எடுத்துப் போய் விட்டார்கள்.

பாறைகள் வழியாகவும் புதர்களின் ஊடாகவும் ஊர்ந்து போய், பகைவர்கள் தடையாக ஒரு வரையும் விடவில்லே என்று உறுதிப்படுத்திக் கொண்ட பின் வஸ்கோவ் எழுந்து நிம்மதியாக நடந்து தன்னவர்களிடம் திரும்பினன். முகம் காந்தியது, இரும்புப் பாலத்தால் நசுக்குண்டது போல உடலெல்லாம் ஓய்ந்து வந்தது. புகை குடிக்கக் கூட விருப்பம் உண்டாகவில்லே. படுத்தால் நன்ருயிருக்கும், ஒரு பத்து நிமிடங்களாவது படுத்தால் அப்பாடா என்றிருக்கும். ஆனல் அவன் இடத்தை அடைந்ததும் அடையாததுமாக ரீதா கேட்டாள்:

''நீங்கள் கம்யூனிஸ்டா, தோழர் சார்ஜண்டு மேஜர்?''

''போல்ஷிவிக் கட்சி உறுப்பினன்...''

''இளங் கம்யூனிஸ்டுகள் கூட்டத்துக்குத் தலேமை ஏற்கும்படி கேட்டுக்கொள்கிருேம்.''

வஸ்கோவ் திகைத்தான்.

''கூட்டமா?..''

பார்த்தான். காலியா மாலை மாலையாகக் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்தாள். வெடி மருந்துக் கறையால் ழேனியாவின் முகமெல்லாம் கறுப்பேறியிருந்தது. அவளுடைய விழிகள் சுடர்ந்தன:

''கோழைத்தனம்!''

அப்படியா சங்கதி...

''கூட்டம் கூட்டுவது நல்லதுதான்'' என்று கொடூர நகையுடன் தொடங்கினான் வஸ்கோவ். ''அருமையானது கூட்டம் கூட்டுவது! நடவடிக்கை எடுத்துக் கொள்வோம், மனக் கலக்கத்தைக் காட்டியதற்காகத் தோழர் காலியா செத்வெர்த்தாக்கைக் கண்டனம் செய்வோம், தீர்மானத்தை நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதுவோம். அப்படித்தானே?''

பெண்கள் பேசாதிருந்தார்கள். காலியா கூட அழுவதை நிறுத்திவிட்டு மூக்கை உறிஞ்சியவாறு கேட்டாள்.

''இந்த நிகழ்ச்சிக் குறிப்பில் ஜெர்மானியர் தங்கள் தீர்மானத்தைச் சுமத்துவார்கள். அது சரியாகுமா?.. சரியாகாது. ஆகவே, சார்ஜண்டு மேஜர் என்ற முறையிலும் கம்யூனிஸ்டு என்ற முறையிலும் எல்லா விதக் கூட்டங்களையும் இந்த சந்தர்ப்பத்தில் ரத்து செய்கிறேன். நிலைமையை அறிவிக்கிறேன்: ஜெர்மானியர் காட்டுக்குள் போய் விட்டார்கள். கைக்குண்டு வெடித்த இடத்தில் நிறைய இரத்தம் காணப்படுகிறது. எவனையோ நாம் ஒழித்து விட்டோம் என்று தெரிகிறது. ஆகவே ஜெர்மானியர் பதின்மூன்று பெயர் இருப்பதாக எண்ணவேண்டும். இது முதல் விஷயம். இரண்டாவது விஷயம்,

என் தானியங்கித் துப்பாக்கியில் ஒரு தோட்டாச் சட்டம் முழுதாக மிச்சம் இருக்கிறது. உன்னிடம், ரீதா?''

''ஒன்றரை.''

''இதுதான் நிலைமை. கோழைத்தனத்தைப் பொறுத்த வரை, அது இருக்கவே இல்லை. கோழைத் தனம் இரண்டாவது சண்டையில் தான் தெரிய வரும். இது வெறும் மனக் கலக்கம். அனுபவம் இல்லாததால் ஏற்பட்டது. சரிதானே, காலியா?''

''சரிதான்...''

''அப்படியானால் கண்களையும் மூக்கையும் துடைத்துக் கொள்ளும்படி உத்தரவிடுகிறேன். அஸ்யானிஞ முன்னே போய்க் காட்டைக் கண்காணிக்க வேண்டும். மற்ற படையினர் சாப்பிட்டு, முடிந்த வரை ஒய்வு கொள்ள வேண்டும். ஏதேனும் கேள்வி உண்டா?இல்லை என்ருல் உத்தரவை நிறைவேற்றுங் கள்.''

மௌனமாகச் சாப்பிட்டார்கள். வஸ்கோவ் சாப்பிட விரும்பவே இல்லை. கால்களை நீட்டி உட்கார்ந்து கொள்ளவே விரும்பினுன். ஆனுலும் ரொட்டியை உற்சாகமாக மென்று விழுங்கினுன்: சக்தி தேவைப்பட்டதே. அவனுடைய படையினர் ஒருவரை ஒருவர் பார்க்காமல் இளைஞர்களுக்கு உரிய ஆர்வத்துடன் மொச்சு மொச்சென்று சவைத்து விழுங்கினுர்கள். ஒரே சத்தம். அதுவும் நல்லதே. அவர்கள் சோர்வடையவில்லை. இன்னும் உற்சாக மாய் இருந்தார்கள்.

சூரியன் மேற்கே இறங்கிவிட்டது. காட்டு ஓரத் தில் இருள்படரலாயிற்று. சார்ஜண்டு மேஜர் மனக்

கலக்கம் அடைந்தான். உதவி எதனுலோ வரத் தாமதித்தது. இந்த வெண்மங்குலில் ஜெர்மானியர் ஒன்று மறுபடி அவனைத் தாக்கலாம், இல்லாவிட்டால் இரண்டு ஏரிகளுக்கும் நடுவிலிருந்த கணவாய் வழியே ஒரு பக்கமாக முன்னேறலாம், அல்லது காட்டுக்குள் பதுங்கி விடலாம்: அப்புறம் அவர்களைத் தேடுவது சாத்தியமா? நிலைமையைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு மறுபடி அவர்களைத் தேடுவதும் மறுபடி அவர்களை விடாது பின்தொடர்வதும் அவசியமாய் இருந்தன. அவசியமாய் இருந்தன, ஆனுல் திராணி இல்லை.

ஆமாம், இப்போதைக்கு நிலைமை ஒழுங்கின்றி, ஒரே தாறுமாருகப் போய்க்கொண்டிருந்தது. ஒரு படையினனைச் சாகக் கொடுத்து விட்டான், தன்னைக் காட்டிக் கொண்டு விட்டான், இளைப்பாறுவதும் தேவையாய் இருந்தது. உதவியோ, இன்னும் வரக் காணேம்...

ரீதா சாப்பிட்டு முடிக்கும்வரை சார்ஜண்டு மேஜர் கொஞ்சம் இளைப்பாறினுன். பிறகு எழுந்து இடைவாரை இறுக்கிக் கொண்டு கடுகடுப்புடன் சொன்னுன்:

''வேவு பார்ப்பதற்கு என்னேடு வருவாள் படையினள் செத்வெர்த்தாக். இங்கே அஸ்யாணிஞ தலைவி. உங்கள் வேலை, வெகு தூரத்தில் எங்களைப் பின்தொடர்வது. குண்டு வெடிக்கும் சத்தம் கேட்டால் மறைந்து கொள்ளும்படி உத்தரவிடுகிறேன். மறைந்து கொண்டு நாங்கள் வரும்வரை காத்திருக்க வேண்டும். நாங்கள் வராவிட்டால் நீங்கள் பின்வாங்குங்கள். முறைவாகப் பின் வாங்கி நமது முந்திய அரண்கள் வழியாக மேற்கே போங்கள்.

நம் ஆட்களைச் சந்திக்கும் வரை போய், நிலைமையை அறிவியுங்கள்.''

இந்த மாதிரிக் காரியத்துக்கு காலியாவை உடன் அழைத்துச் செல்வது கூடாது என்ற எண்ணம் தோன்றத்தான் செய்தது. ழேனியாதான் இதற்கு ஏற்றவள். சோதித்துச் சரி பார்க்கப்பட்டவள். ஒரே நாளில் இரண்டு தடவைகள் சோதனையில் தேறியவள். அபூர்வமாகத்தான் எவனுவது ஆண் மகன் இத்தகைய சாதனை புரிந்திருப்பான். இதெல் லாம் சரிதான். ஆனுல் கமாண்டர் என்பவன் படைத் தலைவன் மட்டும் அல்லவே, பயிற்சி ஆசானும் ஆயிற்றே. தன் கீழ் பணி ஆற்றுபவர்களைப் போ தித்துப் பயிற்றுவதும் அவனுடைய பொறுப்பு அல்லவா? விதிகளில் அப்படிக் கூறப்பட்டிருந்தது.

சார்ஜண்டு மேஜர் வஸ்கோவ் விதிகளை மதித் தான். மதித்தான், மனப்பாடமாக அறிந்திருந்தான், இம்மி பிசகாமல் நிறைவேற்றினுன். அதனுல்தான் அவன் காலியாவிடம் சொன்னுன்:

''சாமான் மூட்டையையும் மேல்கோட்டையும் இங்கே வைத்துவிடு. என் பின்னே அடி ஒற்றி நட. நான் செய்வதைக் கவனித்துப் பார். என்ன நடந் தாலும் மௌனமாய் இரு. வாய் திறக்கக் கூடாது, கண்ணீரையும் மறந்துவிட வேண்டும்.''

அவன் கூறியதைக் கேட்டு காலியா திகிலுடன் சட்டென்று தலையாட்டினுள்...

## 11

ஜெர்மானியர்கள் சண்டையிலிருந்து விலகியது ஏன்? அனுபவம் உள்ள காதுகளால் எதிரிளின்

சுடு திறனை (அல்லது சரியாகச் சொன்னால், திறன் இன்மையை) மதிப்பிட்ட பிறகு ஏன் விலகிவிட்டார்கள்?

இவை வீண் கேள்விகள் அல்ல. வஸ்கோவ் இவற்றைக் கேட்டு மூளையைக் குடைந்து கொண்டது வெறும் ஆவல் காரணமாக அல்ல. பகைவனைப் புரிந்து கொள்வது அவசியமாய் இருந்தது. அவனுடைய ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு அசைவும் நமக்குத் தெட்டத் தெளிவாக விளங்க வேண்டும். அவன் எப்படிச் சிந்திக்கிறான் என்று நாம் தெரிந்து கொள்ளும் போதுதான் அவன் இடத்தில் சிந்தனை செய்வது நமக்குச் சாத்தியம் ஆகும். போர் என்பது யார் யாரைத் துப்பாக்கிச் சண்டையில் தோற்கடிக்கிறார்கள் என்பது மட்டும் அல்ல. போர் என்பது யார் சிந்தனையில் மற்றவரை முந்திக் கொள்கிறார்கள் என்பதாகும். விதிகள் இயற்றப்பட்டிருப்பது நம் மூளைக்கு விடுதலை அளித்து, நாம் எதிரிகளின் தரப்பில், பகைவர்களின் நோக்கில் சிந்தனை செய்ய வாய்ப்பு அளிப்பதற்காகவே.

வஸ்கோவ் நிகழ்ச்சிகளை எப்படி எல்லாமோ ஆராய்ந்தும், எப்படி எல்லாமோ ஆலோசித்துப் பார்த்தும் ஒரே முடிவுக்குத்தான் வர வேண்டி இருந்தது: ஜெர்மானியர்களுக்கு அவர்களைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை என்பதே அந்த முடிவு. தெரியவில்லை என்றால், அவன் கட்டாரிக்கு இரை ஆக்கிய இருவரும் முன்னோடிகள் அல்ல, வேவுகாரர்கள். அவர்களுக்கு நேர்ந்ததை அறியாமல் மற்ற ஜெர்மன்காரர்கள் அவர்களைத் தொடர்ந்து நிம்மதியாக முன்னேறினார்கள். இதுவே அவன் கண்ட முடிவு. இவை எல்லாவற்றிலிருந்தும் அவன் என்ன சாதகம்

பெற முடியும் என்பது தற்போதைக்கு விளங்க வில்லை.

சார்ஜண்டு மேஜர் எண்ணமிட்டான், மூளையைக் குடைந்து கொண்டான், சீட்டுக் கட்டைப் போல மெய் விவரங்களை மறுபடி மறுபடி கலைத்துச் சேர்த்தான். ஆனாலும் காரியத்தில் கண்ணாய் இருந்தான். ஓசையின்றித் துடியாக நழுவிச் சென்றான்; உற்றுக் கேட்டவாறு நடந்தான். ஆனால் காற்று ஒலியையோ மணத்தையோ கொண்டுவரவில்லை. வஸ்கோவ் எங்கும் நிற்காமல் நடந்தவாறு இருந்தான். அந்தக் கூர் கெட்ட பெண் பின்னே வந்தாள். வஸ்கோவ் அடிக்கடி அவளைத் திரும்பிப் பார்த்தான். எதுவும் குறை சொல்ல இடமில்லை. உத்தரவுப்படி ஒழுங்காக நடந்தாள். ஆனால் லாகவம் இல்லாமல், தளர்வுடன் நடந்தாள். அதற்குக் காரணம் அவள் அனுபவித்த நிகழ்ச்சிகளும் தலைக்கு மேல் பறந்த குண்டுகளுமாய் இருக்கும்.

காலியாவோ, இந்தக் குண்டுகளை இப்போது நினைவுபடுத்திக் கொள்ளவில்லை. அவள் கண்கள் முன்னே தெரிந்தது வேறு காட்சி: சோனியாவின் சாம்பல் நிறமான, கூரிய முகமும், பாதி மூடிய உயிரற்ற விழிகளும் இரத்தத்தில் நனைந்து முடமுடப்பாயிருந்த உடுப்பும். அவற்றோடு... மார்பில் இரண்டு துளைகள். கத்தி அலகு போன்று குறுகலானவை. அவள் சோனியாவையோ சாவையோ பற்றி நினைக்கவில்லை. துணியைத் துளைத்துப் புகும் கட்டாரியின் ஸ்பரிசத்தைத் தன் தன் மேனியில், குமட்டல் எடுக்கும் அளவுக்கு உணர்ந்தாள், கிழி படும் சதையின் ஓசையைக் கேட்டாள், இரத்தத்தின் கடு நெடியை முகர்ந்தாள். எதார்த்த உலகைவிடக்

கற்பனை உலகில் அவள் எப்போதும் அதிகத் துடி யாகச் சஞ்சரித்துவந்தாள். இப்போது இந்தக் கற் பனையை மறந்துவிட, அழித்துவிட விரும்பினுள், ஆனுல் அவளால் முடியவில்லை. இந்தக் கற்பனையின் விளைவாக நெஞ்சைப் பாருங்கல்லாய் அழுத்திய பெருந் திகில் அவளை ஆட்கொண்டது. வேறு எதையும் புரிந்து கொள்ளாமல், இந்தத் திகிலால் நசுக்கப்பட்டவளாக நடந்தாள்.

வஸ்கோவுக்கு இந்த விஷயம் தெரியாது. தான் வாழ்வையும் சாவையும் சமமாக வைத்தவாறு எவ ளோடு சேர்ந்து நடந்தானே அவள் ஏற்கெனவே கொல்லப்பட்டுவிட்டாள் என்பதை அவன் அறிய வில்லை. ஜெர்மானியரை நெருங்காமல், பகைவன் மேல் ஒரு தரம் கூடச் சுடாமல் அவள் இறந்து விட்டாள்...

வஸ்கோவ் கையை உயர்த்திஞன். வலப் புறம் சென்றது அடித் தடம். கற்குவியல்கள் மேல் லேசாகவும் அரிதாகவே புலப்படும் விதத்திலும் படிந் திருந்த தடம் இங்கே, அடர் பாசிமீது, நீர்தேங்கிய பள்ளங்களில் கரேல் என்று தெரிந்தது. பாரம் சுமந்து வந்த ஜெர்மானியர்களுக்கு இந்த இடத்தில் கால் இடறிவிட்டது போல் இருந்தது. நீண்ட அகன்ற பாதங்கள் வஸ்கோவின் முன் வரைபடங் களாகக் காட்சி அளித்தன.

''இரு'' என்று கிசுகிசுத்தான் சார்ஜண்டு மேஜர்.

அடித் தடத்தை ஒரு புறம் விட்டு விட்டு வலப் பக்கமாகச் சென்றுன். செடியைச் சற்று வளைத் தான். பள்ளத்தில், அவசரமாகப் பரப்பிய மிலாறு களின் அடியில் கொஞ்சம் வெளித் தெரிந்தன உடல் கள். வஸ்கோவ் சுள்ளிகளை ஜாக்கிரதையாக நகர்த்

றினன். கிடங்கில் முகம் குப்புறக் கிடந்தார்கள் இருவர். வஸ்கோவ் மண்டியிட்டு அமர்ந்து உற்று நோக்கினன். மேலே இருந்தவனுடைய பின் மண்டையில், இரத்தம் இல்லாத ஒழுங்கான துளை ஒன்று காணப்பட்டது. குட்டையாகக் கத்தரித்த முடி பின் மண்டையில் சுருண்டிருந்தது, நெருப்பில் பொசுங்கியிருந்தது.

''இவர்களுடைய ஆட்களே இவர்களுடைய பின்மண்டையில் சுட்டிருக்கிறுர்கள்'' என்று தீர்மானித்தான் சார்ஜண்டு மேஜர். ''காயம் அடைந்தவனைக் கொன்றுவிட்டார்கள். அது அவர்களுடைய சட்டம் போலிருக்கிறது...''

துப்பினன் வஸ்கோவ். இறந்தவர்கள்மேல் துப்புவது எல்லாவற்றிலும் பெரிய பாவம், ஆனுலும் துப்பினன். அவர்கள் மேல் இகழ்ச்சியைத் தவிர வேறு எந்த உணர்வும் அவனுக்கு உண்டாகவில்லை. அவனுடைய நோக்கில் அவர்கள் சட்டத்துக்குப் புறம்பானவர்களாய் இருந்தார்கள். மனிதனை வரையறுக்கும் கோட்டுக்கு வெளியே இருந்தார்கள்.

மனிதனை விலங்கிலிருந்து பிரிப்பது, தான் மனிதன் என்ற புரிவு தானே. இந்தப் புரிவு இல்லாதவன் விலங்கு தான். இரண்டு கால்களும் இரண்டு கைகளும் உள்ள விலங்கு. கொடிய விலங்கு, பயங்கரத்திலும் பயங்கரமானது. அப்படியானுல் அதைப் பொறுத்தமட்டில் மனிதாபிமானமோ, இரக்கமோ, பரிவோ எதுவுமே இருக்க முடியாது. அடிக்க வேண்டும் அதை. குகைக்குள் புகுந்து கொள்ளும் வரை அடிக்க வேண்டும். மனிதனுக இருந்தோம் என்பதை நினைவுபடுத்திக்

கொள்ளும் வரை, புரிந்து கொள்ளும் வரை அங் கேயும் அதை நொய்யப் புடைக்க வேண்டும்.

அன்று பகலில் கூட, சில மணி நேரத்துக்கு முன்பு கூட, வன்மம் அவனை ஆட்கொண்டிருந்தது. தாகத்தைப் போன்று இயல்பான, குருதிக்குப் பதில் குருதி என்ற வன்மம். இப்பொழுது எல்லாம் அகன்று விட்டது, படிந்து விட்டது, நிம்மதி அடைந்து விட்டது, முதிர்ந்து கூட விட்டது. வெறுப்பும் முதிர்ந்து விட்டது, உணர்ச்சி அற்ற, கணக்குப் பார்க்கும் வெறுப்பாக, கோபம் இல்லாத வெறுப்பாக.

''ஆக, இதுதான் சட்டமோ?.. கவனத்தில் வைத்துக் கொள்வோம்.''

நிம்மதியாக இன்னும் இருவரைக் கழித்தான். பன்னிரண்டு ஜெர்மானியர் பாக்கி இருந்தார்கள்.

காலியா காத்துக்கொண்டிருந்த இடத்துக்குத் திரும்பினன். அவளுடைய பார்வையைச் சந்தித்த தும் அவனுக்குள் ஏதோ அறுந்து விட்டது போல் இருந்தது. அவள் திகில் அடைந்திருந்தாள். மோச மாக, உள்ளார்ந்த திகில் கொண்டிருந்தாள். இது வாழ்நாள் முழுவதும் மனத்தில் வேரூன்றி விடக் கூடிய திகில். எனவேதான் சார்ஜண்டு மேஜர் தன் உற்சாகத்தை எல்லாம் கணப் போதில் திரட்டிக் கொண்டு அவளைப் பார்த்துப் புன்னகை செய்து கண் சிமிட்டினன்:

''இரண்டு பேரை அங்கே தீர்த்து விட்டோம், காலியா! இரண்டு பேரை. ஆகையால் இன்னும் பன்னிரண்டு பெயர் தான் பாக்கி. இது நமக்குப் பிரமாதமில்லை. இது நமக்கு அற்ப விஷயம்!..''

அவள் பதில் ஒன்றும் சொல்லவில்லை. புன்

னகைக்கக் கூட இல்லை. கண்களைப் பிதுக்கியவாறு விழித்தாள். ஆண்மகனை இந்த மாதிரி சந்தர்ப்பங் களில் வாயார வைது திட்ட வேண்டும், அல்லது கன்னத்தில் அறைய வேண்டும்—அவனுக்கு ஆத்தி ரம் உண்டாகும்படி. சொந்த அனுபவத்திலிருந்து வஸ்கோவ் இதை அறிந்திருந்தான். இந்தப் பெண்ணை என்ன செய்வது என்பதுதான் அவ னுக்குத் தெரியவில்லை. இந்த விஷயத்தில் அவ னுக்கு அனுபவம் இல்லை. விதிகளிலும் இதைப் பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை.

''பாவெல் கர்ச்சாகினைப்* பற்றிப் படித்திருக் கிறாயா எப்போதாவது?''

காலியா பைத்தியக்காரனைப் பார்ப்பது போல அவனைப் பார்த்தாள், ஆனால் தலையை ஆட்டினாள். வஸ்கோவ் உற்சாகம் அடைந்தான்.

''படித்திருக்கிறாயாக்கும். நான் அவனை நேரே பார்த்திருக்கிறேன், இப்போது உன்னைப் பார்ப்பது போல. படைக் கலையிலும் அரசியலிலும் நன்றாகத் தேறிய எங்களை மாஸ்கோவுக்கு அழைத்துப் போனார்கள். அங்கே லெனின் சமாதியைப் பார்த் தோம், பல வித அரண்மனைகளையும் பொருட் காட்சி சாலைகளையும் பார்வையிட்டோம். அவனை யும் கண்டோம். அவன்—பெரிய பதவியில் இருந் தான் என்றாலும்—சாதாரண மனிதன். மனங்க லந்து பழகினான். எங்களை உட்காரச் சொல்லி, தேநீர் கொடுத்து உபசரித்தான். படைப்பணி எப்படி இருக்கிறது என்று விசாரித்தான்...''

---

* இளங் கம்யூனிஸ்டுகளின் பிரதானமான முன்னோடி, ''வீரம் விளைந்தது'' என்னும் கதையின் பாத்திரம்.

''ஆமாம், எதற்காக ஏமாற்றுகிறீர்கள்?'' என்று தணிந்த குரலில் சொன்னுள் காலியா. ''பாரி சவாயு கர்ச்சாகினைக் கிடத்திவிட்டதே. தவிர அவன் கர்ச்சாகின் அல்ல, அஸ்திரோவ்ஸ்கி. அவருக்குப் பார்வை போய்விட்டது, அசையவும் முடிவதில்லை. எங்கள் பயிற்சிப் பள்ளியிலிருந்து நாங்கள் அவருக்குக் கடிதம் எழுதினேம்.''

''ஒருவேளை இவன் வேறு கர்ச்சாகினே?..''

வஸ்கோவுக்கு வெட்கமாயிருந்தது. உடம்பில் சூடு கூட குப்பென்று ஏறிற்று. போதாக் குறைக்குக் கொசுக்கள் வேறு பிடுங்கி. எடுத்தன. மாலைக் கொசுக்கள், தனிவகையானவை.

''ஒரு வேளை நான் எண்ணியது தவருய் இருக்கலாம். அறியேன். மற்றவர்கள்தாம் சொன்னுர்கள்...''

முன்னுல் கிளை நெறுநெறுத்தது. கனத்த காலின் அடியில் நெறுநெறுத்தது என்பது துலக்கமாகத் தெரிந்தது. வஸ்கோவுக்கு மகிழ்ச்சி கூட உண்டாயிற்று. பிறந்தது முதல் அவன் தாஞகப் பொய் சொன்னதில்லை, தனக்குக் கீழ் பணியாற்றியவர்களின் அவமதிப்பை அனுபவித்ததில்லை. இந்த அழுமூஞ்சிப் பெண்ணின் நிந்தனையைப் பொறுப்பதைவிடப் பகைவர்கள் எல்லோருடனும் சண்டை போட அவன் தயாராய் இருந்தான்.

''புதருக்குள் போ!.. அசையாமல் கிட!'' என்று கிசுகிசுத்தான்.

அவளைப் புதருக்குள் நுழைத்துக் கிளைகளைச் சரிப்படுத்தி விட்டுப் பக்கத்துப் பாறையின் பின் விழுந்து மறைந்து கொண்டான். சரியான நேரத்தில். பார்த்தான்: மறுபடி இருவர் வந்து கொண்

டிருந்தார்கள். தானியங்கித் துப்பாக்கிகளைத் தயாராகப் பிடித்தவாறு, பழுக்கக் காய்ந்த இரும்பு மேல் நடப்பவர்கள் போல எச்சரிக்கையுடன் அடி எடுத்து வைத்து நடந்தார்கள். ஜெர்மானியர் மறுபடி மறுபடி இருவரை அனுப்புவதைப் பற்றி சார்ஜண்டு மேஜர் வியப்பதற்குள் இந்த இருவருக்கும் பின்னுலும் இடது பக்கத்திலும் செடிகள் நடுங்கியதைக் கண்டான். இரு மருங்கிலும் முன்னேடிகள் வருகிருர்கள் என்றும் திடீர் எதிர்ப்பினுலும் தங்கள் வேவுகாரர்களின் மறைவினுலும் ஜெர்மானியர் ஆழ்ந்த கவலே கொண்டிருக்கிருர்கள் என்றும் புரிந்து கொண்டான்.

ஆனுல் அவன் அவர்களேக் கண்டுகொண்டான். அவர்கள் அவனேப் பார்க்கவில்லே. எனவே பெரிய துருப்புச் சீட்டு அவனிடம் இருந்தது.ஒரே துருப்புச் சீட்டுதான், ஆனுலும் அதைக் கொண்டு மிகக் கடுமையாக அவர்களேத் தாக்க அவனுல் முடியும். இந்த விஷயத்தில் அவசரப்படுவது மட்டும் கூடாது. ஆகவே வஸ்கோவ் பாசியோடு பாசியாக உடம்பு முழுவதாலும் ஒண்டிக் கொண்டான். வியர்த்த நெற்றியிலிருந்து கொசுக்களே விரட்டக் கூட அஞ்சினுன். வரட்டும் பதுங்கிப் பதுங்கி, அவனுக்கு முதுகைக் காட்டியவாறு முன்னே போகட்டும், எந்தத் திக்கில் தேட்டம் நடத்துகிருர்கள் என்பதைக் காட்டட்டும். பிறகு அவன் விளேயாட்டைத் தொடங்குவான், தன் சீட்டை இறக்குவான். பெரிய துருப்புச் சீட்டை...

ஆபத்தில் மனிதன் ஒன்ரு சிந்தனேயே செய்வதில்லே, இல்லாவிட்டால் இருவருக்குச் சேர்த்துச் சிந்தனே செய்கிருன். மேற்கொண்டு என்ன செய்வது

என்று ஒருவன் கணக்கிடும்போதே மற்றவன் நிகழும் விளைவு பற்றிக் கவலை எடுத்துக் கொள்கிறான்: எல்லாவற்றையும் காண்கிறான், எல்லாவற்றையும் கவனிக்கிறான். பெரிய துருப்புச் சீட்டை இறக்குவது பற்றி எண்ணிக் கொண்டிருந்த அதே சமயத்தில் வஸ்கோவ் அழிவுவேலையினரை ஒரு கணங் கூடப் பார்வையிலிருந்து தப்ப விடவில்லை, காலியாவையும் கணமேனும் மறக்கவில்லை. அவள் நன்றாக மறைக்கப்பட்டிருந்தாள், நம்பகமாக. தவிர ஜெர்மானியர் அவளை ஒரு புறம் விட்டு விட்டு மேலே சென்றார்கள். ஆகவே இங்கே அபாயம் நேர வாய்ப்பு இல்லை. ஜெர்மானியர்கள் இடத்தைப் பகுதிகளாகக் கூறு போட்டிருந்தார்கள். அவனும் அவனுடைய படையினரும் இந்தப் பகுதிகளின் நடுவில்—வெவ்வேறு துண்டுகளில்தான்—இருந்தார்கள். எனவே, ஜெர்மானியர்கள் கடந்து செல்லும் வரை மூச்சுக் காட்டாமல், பாசியிலும் புதர்களிலும் ஒன்றியவாறு பதுங்கி இருக்க வேண்டி இருந்தது. அதன் பிறகே நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். பின்பு ஒன்று கூடி, இலக்குகளை வரையறை செய்து கொண்டு சொந்தத் துப்பாக்கியாலும் ஜெர்மன் தானியங்கித் துப்பாக்கியாலும் சுட்டுத் தள்ள வேண்டும்.

நிலைமையைச் சீர்தூக்கிப் பார்த்தபோது, ஜெர்மானியர் மீண்டும் முந்திய வழியையே எச்சரிக்கையுடன் மேற்கொள்வதாகத் தெரிந்தது. விரைவில் அவர்கள் ரீதாவும் ஷேனியாவும் இருக்கும் இடத்தை அடைவார்கள். இது சார்ஜண்டு மேஜருக்குக் கவலை அளிக்கத்தான் செய்தது, ஆனால் நிரம்ப என்று சொல்ல முடியாது. அந்த இரு பெண்களும் சண்டைக்குப் பழகி இருந்தார்கள், விஷயத்

தைப் புரிந்து கொண்டார்கள். சுயமாகச் சிந்தித்து மறைந்து கொள்ளவோ, தொலைவில் பின்வாங்கிச் செல்லவோ அவர்களுக்குத் திறன் இருந்தது. தவிர, ஜெர்மானியர் தன்னைக் கடந்து சென்று இரண்டு நெருப்புக்களுக்கு நடுவே இருக்கும் தருணம் பார்த்துத் தன் துருப்புச் சீட்டை இறக்க அவன் திட்டமிட்டிருந்தான்.

அழிவுவேலையினர் காலியா மறைந்திருந்த புதரை ஒரு இருபது மீட்டர் இடப்புறம் விட்டு விட்டு நேரே சென்றார்கள். மருங்குகளில் வந்த முன்னோடிகள் தங்களைக் காட்டிக் கொள்ளவில்லை, ஆனால் அவர்கள் எங்கே கடந்து செல்வார்கள் என்பதை வஸ்கோவ் அறிந்திருந்தான். யாரும் திடீரென்று எதிர்ப்பட முடியாதிருந்தது, என்றாலும் சார்ஜண்டு மேஜர் தானியங்கித் துப்பாக்கிப் பூட்டை ஜாக்கிரதையாகக் கழற்றி வைத்துக் கொண்டான்.

ஜெர்மானியர்கள் தானியங்கித் துப்பாக்கிகளைத் தயாராகப் பிடித்தவாறு குனிந்து, பேசாமல் நடந்தார்கள். முன்னோடிகளின் காப்பில் இருந்தமையால் அவர்கள் அனேகமாக அக்கம் பக்கம் பார்க்காமல், எதிரே கூர்ந்து நோக்கி, எதிரிலிருந்து துப்பாக்கிச் சூட்டை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்தவாறு வந்தார்கள். இன்னும் சில அடிகள் நடந்தும் அவர்கள் வஸ்கோவுக்கும் காலியாவுக்கும் நடுமையப் புள்ளியை அடைந்து விடுவார்கள். அந்தக் கணம் முதல் அவர்களுடைய முதுகுகள் சார்ஜண்டு மேஜரின் வேட்டைக்காரப் பார்வைக்கு இலக்கு ஆகிவிடும்.

புதர்கள் ஓசையுடன் விலகின. அவற்றிலிருந்து திடீரென வெளியே பாய்ந்தாள் காலியா. குனிந்து, கைகளைத் தலைக்குப் பின் வைத்தவாறு, எதையும் பாராமலும் புரிந்து கொள்ளாமலும் அழிவுவேலையினரைக் குறுக்காகக் கடந்து திறப்பில் ஓடினாள் அவள்.

''ஆ-ஆ-ஆ...''

தானியங்கித் துப்பாக்கி சுருக்கமாகச் சுட்டது. ஓட்டத்தில் விரைத்த, மெல்லிய முதுகைப் பத்து தாவடி தூரத்திலிருந்து தாக்கியது. காலியா ஓட்ட வேகத்தில் துள்ளி, தரையில் முகங்குப்புற விழுந்தாள். கிலியினால் தலைக்குப் பின் வைத்திருந்த அவளுடைய கைகள் அப்படியே இருந்தன. அவளுடைய கடைசிக் கத்தல் களகளக்கும் கமறலில் அமிழ்ந்து விட்டது. கால்கள் இன்னும் ஓடிக்கொண்டிருந்தன, சோனியாவின் சோட்டு முனைகளைப் பாசியில் குத்தியவாறு அடித்துக் கொண்டிருந்தன.

திறப்பில் எல்லாம் அசைவற்றுவிட்டன. ஒரு நொடி நேரத்துக்கு அசைவற்றுவிட்டன. காலியாவின் கால்கள் கூடக் கனவில் போல மெதுவாக அசைந்தன. வஸ்கோவ் தன் பாறையின் பின்னே இன்னமும் அசையாது கிடந்தான். தனது திட்டங்கள் எல்லாம் தகர்ந்து விட்டன, பெரிய துருப்புச் சீட்டுக்குப் பதில் தன் கையில் உதவாக்கரைச் சீட்டு தான் இருந்தது என்பதைப் புரிந்து கொள்ளக்கூட அவனுக்கு இன்னும் முடியவில்லை. அவன் எவ்வளவு நேரம் அப்படியே கிடந்திருப்பானோ, மேற்கொண்டு எப்படிச் செயல்பட்டிருப்பானோ, தெரியாது. ஆனால் அவன் முதுகுப் புறம் சடசடப்பும் காலடிச் சத்தமும் கேட்டன. வலப்புறம் முன்னோடி இந்தப்

பக்கம் ஓடி வருகிறுன் என்பதை அவன் ஊகித்துக் கொண்டான்.

நிலைமையைச் சீர்தூக்கிப் பார்க்க நேரம் இல்லை. சிந்திக்க நேரம் இல்லை. எனவே ஜெர்மானியர்களை அப்பால் இட்டுச் செல்வது என்ற முக்கியமான முடிவை மட்டும் செய்தான் வஸ்கோவ். அவர்களைத் தன் பின்னே இட்டுச் செல்வது, கவர்ந்து இழுப்பது, தன் கடைசிப் படையினரிடமிருந்து விலக்கிப் போவது என்று முடிவு செய்து, மறைவிலிருந்து வெளியே தாவி, காலியா மீது குனிந்திருந்த இரண்டு உருவங்களைச் சுட்டுவிட்டு, காலடிச் சத்தம் வந்த திக்கில் ஒரு வரிசை குண்டுகளைப் பொழிந்தான். பின்பு குனிந்து சினியூஹின் குன்றுத் தொடரிலிருந்து தூர விலகிக் காட்டை நோக்கிப் பாய்ந்தோடிஞன்.

தான் சுட்ட குண்டுகள் யாரையாவது தாக்கினவா என்பதை அவன் பார்க்கவில்லை. அதற்கு நேரமில்லை. இப்போது ஜெர்மானியர்களை ஊடுருவிக் கொண்டு போக வேண்டி இருந்தது. காடு வரை தான் பத்திரமாகப் போய்ச் சேர்வதும் பெண்களைக் காப்பதும் அவசியமாய் இருந்தன. அவர்களை, கடைசிப் படையினரை அவன் கட்டாயம் காத்து ஆக வேண்டியிருந்தது. ஆண்மகன், கமாண்டர் என்ற முறையில் இவ்வாறு செய்யத் தன் மனச்சான்றுக்கு அவன் கடமைப்பட்டிருந்தான். இதுவரை கொல்லப்பட்டவர்கள் போதும். ஆயுள் முடியும் வரை போதும்.

அன்று மாலை ஓடியது போல சார்ஜண்டு மேஜர் வெகு காலமாக ஓடவில்லை. புதர்களின் ஊடாகப் பாய்ந்தான், பாறைகளுக்கு இடையே புகுந்து ஓடி

னன். தலைக்கு மேல் இலைகளைத் தாக்கிய குண்டுகள் படாமல் விலகி விழுந்தான் நாற்புறமும் காணப் பட்ட உருவங்கள் மீது சுருக்கமான குண்டு வரிசைகள் சுட்டான், ஆரவாரித்தான். செடிகளை முறித்தான், கால்களைத் தொப்பென்று அடித்தான், தொண்டை கரகரத்துப் போகும் வரை கத்திக் கூப்பாடு போட் டான். ஏனென்றால், ஜெர்மானியரைத் தன் பின்னே கவர்ந்து இழுக்காமல் விலகிச் செல்ல அவனுக்கு உரிமை இல்லை. அவர்களைக் கவர்ந்து இழுக்க வேண்டி இருந்தது, நெருப்புடன் விளையாட வேண்டி இருந்தது.

ஒரு விஷயத்தில் அவன் அனேகமாக நிம்மதி யாய் இருந்தான்: ஜெர்மானியர்களால் அவனைச் சுற்றி வளைக்க முடியவில்லை. அவர்கள் இடத்தை அறிந்திருக்கவில்லை, சுற்றி வளைப்பதற்கு வேண்டிய ஆட்களும் அவர்களிடம் இல்லை. முக்கியமாக, அந்த எதிர்பாராத சண்டையை, எதிர்ப் போரை அவர் கள் நன்றாக நினைவு வைத்திருந்தார்கள், அதனால் எச்சரிக்கையுடன் ஓடினார்கள். ஆகையால்தான் அவன் இப்போதைக்கு அவர்களிடமிருந்து சுளு வாகத் தப்பிச் சென்றான், அவர்களை வேண்டு மென்றே பரிகாசம் செய்தான். அவர்கள் துரத்து வதை நிறுத்திவிடக் கூடாது, கண்டிப்பாக மதிப் பிட்டால் இங்கே அவன் ஒருவன், தனியாள் என் பதை அவர்கள் கண்டுகொள்ளக் கூடாது என்பதற் காக, அவர்களைச் சுதாரித்துக் கொள்ள விடாமல் ஆத்திரம் ஊட்டினான்.

அதோடு மூடுபனியும் உதவியது. அந்த வசந் தம் மூடுபனி மிகுந்ததாக இருந்தது. சூரியன் தொடு வானுக்கு அப்பால் சென்றதுமே தாழ்நிலப் பகுதி

கள் புகைபோன்ற மூட்டத்தில் ஆழ்ந்தன. மூடுபனி மேலும் மேலும் அடர்ந்தது, புதர்கள் மீது கவிந்தது. கெட்டிப் பால் போன்ற அந்த வெண் மூட்டத்தில் தனி ஆள் மட்டும் அல்ல, முழு ரெஜிமெண்டு தாராளமாக மறைந்து கொள்ள முடிந்திருக்கும். வஸ்கோவ் எந்தக் கணத்திலும் இந்த மேகத்தில் மூழ்கி மறைந்திருக்கலாம். அப்புறம் அவனை எங்கே தேடுவது! ஆனால் இந்த மூடுபனிப் படலங்கள் ஏரிகளின் திக்கில் படர்ந்தன. வஸ்கோவோ, ஜெர்மானியரைக் காட்டுக்கு இட்டுச் செல்ல முயன்றான். ஆகவே, வேறு வழியே இல்லாமல் போன சமயங்களில் மட்டுமே அவன் மூடுபனிக்குள் புகுந்து மறைந்து கொண்டான். பின்பு மறுபடி வெளியே வந்து ஜெர்மானியருக்குத் தான் உயிரோடு இருப்பதைக் காட்டினான்...

மொத்தத்தில் அதிர்ஷ்டம் அவன் பக்கத்தில் இருந்தது. இன்னும் குறைவான துப்பாக்கிச் சூடுகளில் கூட, குண்டுகள் ஆளைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து விடுவது உண்டு. இங்கோ, குண்டுகள் அவனைக் கடந்து பாய்ந்தன. சாவுடன் போதுமான அளவு கண்ணும் பூச்சி விளையாடினான், ஆனால் காட்டுக்குத் தனியே ஓடவில்லை: இந்த ஜெர்மன் கும்பல் முழுவதும் அவனைத் துரத்திக்கொண்டு வந்தது. அந்த சந்தர்ப்பத்தில் அவனுடைய தானியங்கித் துப்பாக்கி கடைசி வெடி தீர்த்துவிட்டு ஓசை அடங்கிப் போயிற்று. தோட்டாக்கள் தீர்ந்து விட்டன. மறுபடி கெட்டிக்கத் தோட்டாக்கள் இல்லை. வெற்றுத் துப்பாக்கி சார்ஜண்டு மேஜரின் கைகளுக்கு வீண் சுமையாய் இருந்தது. எனவே அவன் அதை சருகுக் குவியலில் எறிந்து விட்டு ஆயு

தம் இல்லாமல் விட்டாற்றியாகப் பின்வாங்கலாளுன்.

இங்கே மூடுபனி இல்லை. குண்டுகள் மரங்களைப் பட் பட்டென்று தாக்கின. இப்போது ஜெர்மானியரிடமிருந்து விலகி ஓட முடிந்தது. தன்னைப் பற்றி நினைக்கத் தக்க தருணம் வந்துவிட்டது. ஆனால் ஆத்திரம் அடைந்த ஜெர்மானியர் கடைசியில் அவனை அரை வளையமாகச் சூழ்ந்து கொண்டு, இளைப்பாற இடை நேரம் இல்லாதவாறு துரத்தினார்கள். அவனைச் சதுப்பு நிலத்துக்கு விரட்டி உயிரோடு வளைத்துப் பிடிக்க அவர்கள் திட்டமிட்டிருந்தது தெரிந்தது. அவர்களுடைய நிலைமையில், வஸ்வோவ் அவர்களுடைய கமாண்டரின் இடத்தில் இருந்தால், பகைவர்களைப் பற்றி உளவு தெரிவிக்கக் கூடிய ஒருவனை உயிரோடு பிடிப்பவர்களுக்குப் பதக்கங்கள் வழங்கத் தயங்கி இருக்க மாட்டான் —ஒரு குத்து அள்ளித் தந்திருப்பான்.

அவன் இவ்வாறு நினைத்து, ஜெர்மானியர் தன்னைக் குறிவைத்துச் சுட மாட்டார்கள் என்று மகிழ்ந்து கொண்டிருக்கையில் அவன் கையில் ஒரு குண்டு தாக்கியது. முழங்கைக்குக் கீழே, சதையில் பாய்ந்தது குண்டு. ஓட்ட அவசரத்தில் வஸ்கோவ் புரிந்து கொள்ளவில்லை. தெரியாமல் உலர்ந்த கொம்பில் குத்திக்கொண்டு விட்டதாக நினைத்தான். அப்போது புறங்கையில் சூடான இரத்தம் வழிந்தது. குருதிப் பெருக்கு மிகுதியாய் இல்லை, ஆனால் அடர்த்தியாய் இருந்தது: குண்டு இரத்த நாளத்தைத் துளைத்து விட்டது. வஸ்கோவின் உடல் சில்லிட்டுப் போயிற்று: துளையிட்ட இரத்த நாளத்துடன் எவ்வளவு

நேரம் சண்டை போட முடியும்? ஏற்பாடு செய்வது அவசியம். காயத்துக்குக் கட்டுப் போட்டு, சற்று ஓய்வு கொள்ள வேண்டும். இப்போது ஜெர்மானியரின் வளையத்தை ஊடுருவுவது, அவர்களிடமிருந்து கத்தரித்துக் கொள்வது சாத்தியம் இல்லை. சதுப்பு நிலத்தின் பக்கமாகப் பின் வாங்கும் ஒரு வழி தான் எஞ்சி இருந்தது. கால்களைப் பற்றிக் கவலைப்படாமல் ஓட வேண்டும்.

வஸ்கோவ் இந்த ஓட்டத்தில் தன் சக்தி முழுவதையும் துளிமிச்சம் வைக்காமல் ஈடுபடுத்தினன். அடையாளத் தேவதாரு மரத்தை அவன் அடைந்த போது இருதயம் தொண்டைக் குழியில் அடித்துக் கொண்டது. கொம்பை எடுத்துக் கொண்டான். ஐந்து கொம்புகள் எஞ்சி இருந்ததைக் கவனித்தான். ஆனால் சிந்திக்க நேரம் இல்லை. காடு ஜெர்மன் காலடிகளால் சடசடத்தது, ஜெர்மன் குரல்களால் ஒலித்தது, ஜெர்மன் குண்டுகளால் சீழ்க்கை அடித்தது.

சதுப்பு நிலத்தின் வழியாகத் திட்டுக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தோம் என்பது வஸ்கோவுக்கு நினைவே இல்லை. கரடுதட்டிய தேவதாரு மரங்களின் அடியில்தான் அவன் சுய நினைவுக்கு வந்தான். குளிர் காரணமாகச் சுய நினைவுக்கு வந்தான்: அவன் உடம்பு நடுங்கியது, பற்கள் கட கடவென்று அடித்துக் கொண்டன. கை குத்திக் குத்தி வலித்தது. ஈரம் தாக்கியதாலோ என்னவோ...

எவ்வளவு நேரம் அங்கே கிடந்தானே வஸ்கோவால் நினைவுபடுத்திக் கொள்ள முடியவில்லை. நிறைய நேரம் கடந்திருக்க வேண்டும், ஏனென்றால்

சுற்றிலும் மரண நிசப்தம் சூழ்ந்திருந்தது. ஜெர்மானியர் போய்விட்டார்கள். பொழுது விடியும் தறுவாயில் மூடுபனி அடர்த்தி ஆகி, தரையில் படிந்திருந்தது. அந்த ஈரிப்பு வஸ்கோவின் ஒவ்வொர் எலும்புக் குள்ளும் துளைத்துப் புகுந்தது. ஆனால் காயத்திலிருந்து இரத்தம் வரவில்லை. கையில் தோள்வரை சதுப்பு நிலச் சேறு அப்பி இருந்தது. துளையைப் பூசி அடைத்துவிட்டது போலும். வஸ்கோவ் அதை வழித்து அகற்ற முற்படவில்லை. நல்ல வேளையாகச் சட்டைப் பையில் பட்டித் துணி இருந்தது. அதனால் காயத்துக்குக் கட்டுப் போட்டு விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

காட்டிற்கு அப்பால் வெளிச்சமாய் இருந்தது. சதுப்பு நிலத்துக்கு மேல் உயரத்தில் வானம் வெட்டி வெட்டி ஒளிர்ந்தது. மூடுபனி தரைமீது படிந்தது. ஆனால் இங்கே, சதுப்பு நிலத்தின் நடுவில் பனிக்கட்டியில் வைத்த பாலில் மூழ்குவது போலக் குளிர்ந்து விரைத்தது. வஸ்கோவ் குளிரில் நடுங்கியவாறு இன்ப மதுப் குப்பியை நினைத்து ஏங்கினான். குளிரைப் போக்கிக் கொள்ள ஒரு வழிதான் இருந்தது: குதிப்பது. வியர்த்து வடியும் வரை துள்ளித் துள்ளிக் குதித்தான். அதற்குள் மூடுபனி விலகலாயிற்று. நாற்புறமும் பார்வை செலுத்த முடிந்தது.

ஜெர்மானியரின் தரப்பில் ஆபத்தானது எதுவும் காணப்படவில்லை. வஸ்கோவ் எவ்வளவோ கூர்ந்து கவனித்தபோதும் அப்படி ஒன்றும் தெரியவில்லை. அவன் திரும்பி வருவான் என்று எதிர்பார்த்து ஜெர்மானியர் பதுங்கி இருக்கக் கூடும் தான். ஆனால் அவர்கள் அப்படிச் செய்வார்கள் என்று எதிர்

பார்க்கத் தகுந்த காரணங்கள் இல்லை. அவர்களுக்குத் தெரிந்த வரையில் சதுப்பு நிலம் கடக்க முடியாத தாக இருந்தது. எனவே, சார்ஜண்டு மேஜர் வஸ் கோவ் எப்போதோ மூழ்கி மடிந்து விட்டதாக வே அவர்கள் எண்ணி இருப்பார்கள்.

நமது பக்கத்தில், கிளை நிலையத்துக்கு, நேரே மரீயா நிக்கீபரவ்னுவிடம் இட்டுச் செல்லும் திசை யில் வஸ்கோவ் அவ்வளவாகப் பார்வை செலுத்த வில்லை. அந்தத் திக்கில் அபாயம் ஒன்றும் இல்லை. மாருக அந்தப் பக்கம் இருந்தது வாழ்க்கை: ஒரு அரைக் குவளை மது, சுவையான, ஊட்டம் உள்ள உணவு, வீட்டுக்காரியின் காதல் அணைப்பு, எல்லாம் அங்கே இருந்தன. ஆசைக்கு இடம் கொடுக்காதிருக் கும் பொருட்டு வஸ்கோவ் அந்தப் பக்கம் பார்க் காமலே இருந்திருப்பான். ஆனுல் அங்கிருந்து உதவி வருகிற வழியாய்க் காணேம். எனவே அவன் பார் வை வேறு வகையின்றி அந்தப் பக்கம் சென் றது.

அங்கே ஏதோ கறுப்பாகத் தெரிந்தது. அது என்ன என்று சார்ஜண்டு மேஜருக்கு விளங்கவில்லை. அந்தப் புள்ளியை அருகே போய்ப் பார்ப்போம் என்று ஒரு கணம் நினைத்தான். ஆனுல் துள்ளிக் குதித்து உடற்பயிற்சி செய்ததால் மூச்சு இரைத் தது. எனவே, கொஞ்ச நேரம் இளைப்பாற முடிவு செய்தான். இளைப்பாறி முடிவதற்குள் போதிய வெளிச்சம் பரவிற்று. சதுப்பு நிலப் புதை சேற்றில் கறுப்பாய்த் தெரிந்தது என்ன என்பது வஸ்கோ வுக்கு விளங்கிவிட்டது. விளங்கியதுமே அடையாளத் தேவதாரு மரத்தின் அருகே இப்போது ஐந்து

கொம்புகள் மீதம் இருப்பது அவன் நினைவுக்கு வந்தது. ஐந்து என்றால், படையினள் லீஸா இந்தப் பாழாய்ப் போகிற உளை சேற்றில் ஊன்றுகோல் இல்லாமலே இறங்கியிருக்கிறாள் என்று அர்த்தம் ஆயிற்று...

அவளிடமிருந்து எஞ்சியது இராணுவ ஸ்கர்ட்டு மட்டுமே. வேறு எதுவும்—உதவி வரும் என்ற நம்பிக்கைகூட—எஞ்சவில்லை...

## 12

...காட்டிலிருந்து வெளி வந்த அழிவுவேலை யினரைத் தான் கணக்கிட்ட காலையை வஸ்கோவ் திடீரென நினைத்துக் கொண்டான். இடது தோளருகே சோனியா கிசுகிசுத்ததையும் லீஸா பிரீச்கினாவின் அகலத் திறந்த விழிகளையும் மரப்பட்டைச் சோடு அணிந்த காலியாவையும் நினைவுபடுத்திக் கொண்டான். நினைவுபடுத்திக் கொண்டு உரக்க, வாய் விட்டுச் சொன்னான்:

''லீஸா இடம் போய்ச் சேரவில்லை போல் இருக்கிறது...''

தடிமல் பிடித்த, கரகரத்த குரல் சதுப்பு நிலத்தில் மந்தமாகப் பரவி மறைந்தது. பின்பு முன் போலவே நிசப்தம் நிலவியது. இந்த அழிந்து போன இடத்தில் கொசுக்கள் கூட ரீங்காரம் இன்றி அமர்ந்திருந்தன. சார்ஜண்டு மேஜர் பெருமூச்சு விட்டு. உறுதியுடன் சேற்றில் இறங்கினான். கொம்பை ஊன்றி நடந்து கரை சேர்ந்தவன், ழேனியாவையும் ரீதாவையும் நினைத்து, அவர்கள் உயிரோடு இருப்

பதாக நம்பினுன். தன்னிடம் இருந்த ஆயுதம் எல்லாம், இடையில் தொங்கிய கைத்துப்பாக்கி ஒன்று தான் என்பதையும் நினைவு படுத்திக் கொண்டான்.

ஜெர்மானியர் இங்கே ஓர் ஆளை நிறுத்தியிருந்தார்களானுல் கூட சார்ஜண்டு மேஜர் சேற்றில் முகங் குப்புற விழுந்து மட்கிப் போக நேர்ந்திருக்கும். இரண்டு அடி தூரத்திலிருந்து பகைவர்கள் அவனைச் சுட்டுத் தீர்த்திருக்க முடியும், ஏனென்ருல் அவன் மார்பால் சேற்றைத் தள்ளிக்கொண்டு கரைக்குச் சென்ருன். விழுந்து மறைந்து கொள்ளக் கூட வகை இல்லாதிருந்தது. ஆனுல் ஜெர்மானியர் ஒருவனையும் நிறுத்தி வைக்கவில்லை, எனவே வஸ்கோவ் தங்கு தடையில்லாமல் அறிமுகமான ஆற்றுப் பெருக்கை அடைந்து ஒரு விதமாக முகங்கை கழுவிக் கொண்டு வயிறு நிறையத் தண்ணீர் பருகினுன். பிறகு சட்டைப் பையைத் துழாவி ஒரு காகிதத்தை எடுத்து உலர்ந்த பாசியை அதில் வைத்துச் சுருட்டி, புகைத்தான். இப்போது சிந்தனை செய்யவும் முடிந்தது.

பகைவரில் சரியாகக் கால்வாசிப் பெயரைக் கொன்று விட்டான் என்ருலும் முந்திய நாள் சண்டை முழுவதிலும் அவன் தோல்வியே அடைந்தான் என்று தோன்றியது. ஜெர்மானியரைத் தடுத்து நிறுத்த அவனுல் முடியவில்லை, தன் படையினரில் சரி பாதிப் பெயரையும் எல்லாப் போர்த் தளவாடங்களையும் இழந்து விட்டான், ஒரே கைத்துப் பாக்கி அவனிடம் எஞ்சி இருந்தது என்பதால் அவன் தோல்வி அடைந்தான் என்பது தெளிவாய் இருந்தது. என்னதான் மழுப்பினுலும், என்ன

தான் சப்பைக்கட்டு கட்டினாலும் நிலைமை படு மோசமாய் இருந்தது. எல்லாவற்றிலும் மோசமானது என்னவென்றால், ஜெர்மன் அழிவுவேலையினரை எந்தத் திக்கில் தேடுவது என்பது அவனுக்குத் தெரியாதிருந்ததுதான், வஸ்கோவுக்குக் கைப்பாய் இருந்தது. பசியினாலோ, நாற்றப் பாசிச் சுருட்டினாலோ, தனிமையாலும் குளவிகள் போல மூளையில் மொய்த்த எண்ணங்களாலுமோ தெரியவில்லை. இந்த எண்ணங்கள் குளவிகள் போலக் கொட்டத்தான் செய்தன, தேன் தரவில்லை...

தன் படையினரிடம் அவன் போய்ச் சேர்வது சந்தேகமின்றி அவசியமாய் இருந்தது. அவனிடம் எஞ்சியவர்கள் இரண்டு பெண்கள்தாம் என்றாலும் மிகவும் விஷயம் தெரிந்தவர்கள். அவர்கள் மூவரும் சேர்ந்து வலிய படையாக இருந்தார்கள், ஆனால் அவர்களிடம் தாக்குவதற்குப் போர்த் தளவாடங்கள் இல்லை. ஆகவே, கமாண்டர் என்ற முறையில் அவன் இரண்டு கேள்விகளுக்கு ஒரே சமயத்தில் பதில் கண்டு பிடித்தாக வேண்டி இருந்தது. என்ன செய்வது, எதைக் கொண்டு சண்டை செய்வது என்பவை அந்தக் கேள்விகள். முதலில் தானே நிலைமையைத் தெளிவுபடுத்திக் கொள்வதும் ஜெர்மானியரைத் தேடிப் பிடிப்பதும் ஆயுதங்களை முயன்று பெறுவதுமே இவற்றுக்கு விடை காண்பதற்கான ஒரே வழி.

தலைக்கு நாள் ஓட்டத்தின் போது ஜெர்மானியர் தயக்கமில்லாமல் அடி வைத்தார்கள். ஆகையால் காலடிச் சுவடுகள் நிறைய இருந்தன. வஸ்கோவ் வரைபடத்தைப் போல அவற்றை வழிகாட்டியாகக் கொண்டு நடந்தான், எந்தச் சுவடு எதைச் சேர்ந்

தது என்பதை ஆராய்ந்து பார்த்துக் கணக்கிட்டான். இந்தக் கணக்கின் படி அவனைத் துரத்திக் கொண்டு வந்த ஜெர்மானியரின் எண்ணிக்கை பத்துக்கு மேல் இல்லை என்று தெரிந்தது. ஒன்று ஒருவன் சாமான்களைப் பார்த்துக் கொள்வதற்கு அமர்த்தப் பட்டிருப்பான், அல்லது இன்னும் ஒரு ஜெர்மானியனை வஸ்கோவ் சுட்டுத் தள்ளியிருக்க வேண்டும். ஆயினும் ஜெர்மானியர் பன்னிரண்டு பெயர் என்று எண்ணுவதே சரியாகப் பட்டது, ஏனென்றால் தலைக்கு நாள் குறிபார்த்துச் சுட நேரம் இல்லை.

இவ்வாறு அடிச் சுவடுகளைப் பின்பற்றிக் காட்டோரத்தை அடைந்தான் வஸ்கோவ். அங்கிருந்து வோப் ஏரியும் சினியூஹின் குன்றுத் தொடரும் மீண்டும் பரந்திருந்தன. வலப்புறம் சென்றிருந்தன தேவதாரு மரச் சோலையும் புதர்களும். வஸ்கோவ் அந்த இடத்தில் சற்று நின்று சுற்று முற்றும் கண்ணோட்டினான். ஆனால் தன்னவர்களோ வேற்றாரோ அவன் பார்வையில் படவில்லை. அவனுக்கு எதிரே இருந்தது அமைதி, நிசப்தம், காலையின் வனப்பு. இந்த வனப்பில் எங்கோ மறைந்திருந்தார்கள் ஜெர்மன் தானியங்கித் துப்பாக்கிப் படையினரும் சாதாரணத் துப்பாக்கிகள் வைத்திருந்த இரண்டு ருஷ்யப் பெண்களும்.

அந்தப் பாறைகளில் பெண்களைத் தேடிக் காண எவ்வளவோ ஆசை உண்டாயிற்று எனினும் சார்ஜண்டு மேஜர் காட்டிலிருந்து வெளிவரவில்லை. அவன் தன்னை ஆபத்துக்கு உள்ளாக்கிக் கொள்வது கூடாததாய் இருந்தது அறவே கூடாததாய் இருந்தது. ஏனெனில் வெல்லப்பட்டுவிட்ட வருத்தமும் சோர்வும் எவ்வளவுதான் இருந்தாலும் தான்

தோற்றுவிட்டதாக மனதுக்குள் கூட அவன் ஒப்புக் கொள்ளவில்லை. அவனைப் பொறுத்த வரை சண்டை இத்துடன் தீர்ந்துவிட முடியவில்லை. சுற்றுப்புறப் பரப்பையும் அமைதியையும் பார்வையிட்டபின் வஸ்கோவ் மீண்டும் காட்டுக்குள் புகுந்து குன்றுத் தொடரைச் சுற்றிக் கொண்டு லெகோன்தவோ ஏரிக்கரையை நோக்கி நடந்தான்.

இப்போது கணக்கிடுவது கழித்தல் கணக்கு போன்று எளிதாய் இருந்தது. தலைக்கு நாள் ஜெர் மானியர் இரவு வெகு நேரம்வரை அவனைத் துரத் தினார்கள். வெளிர் இரவுக் காலந்தான் என்றாலும் தெளிவற்ற நிலைமையில் முன்னேறுவது ஜெர்மானி யருக்குச் சாதகமாய் இல்லை. அவர்கள் விடியும் வரை காத்திருக்க வேண்டியிருந்தது. அவ்வாறு காத்திருப்பதற்கு எல்லாவற்றிலும் சௌகரியமான இடம் லெகோன்தவோ ஏரியை அடுத்த காடு தான், ஏனென்றால் ஏதேனும் நேர்ந்தால் சதுப்பு நிலத்தின் பக்கம் பின்வாங்க வேண்டியிராது. எனவே தான் வஸ்கோவ் பழக்கமான கணவாய்ப் பாறை களிலிருந்து பழக்கமற்ற இடத்துக்கு நடந் தான்.

இங்கே அடிச் சுவடுகள் திடீரென மறைந்து விட்டன. எனவே வஸ்கோவ் எச்சரிக்கையுடன், ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்துக்கு நடந்தான். ஆனால் காட்டில் சந்தடி இல்லை. பட்சிகள் மட்டுமே தத்திப் பறந்து கொண்டிருந்தன. அக்கம் பக்கத்தில் ஆட்கள் இல்லை என்பதை அவற்றின் கத்தல்களி லிருந்து வஸ்கோவ் தெரிந்து கொண்டான்.

இவ்வாறு அவன் நெடு நேரம் நடந்தான். தான் வீணாக நடப்பதாகவும் கணக்கில் பிசகு செய்து

விட்டதாகவும் ஜெர்மானியரை அவர்கள் இல்லாத இடத்தில் தேடுவதாகவும் அவனுக்குத் தோன்றலாயிற்று. ஆனுல் உள்ளுணர்வு தவிர வேறு வழிகாட்டிக் குறிகள் இப்போது அவனிடம் இல்லே. உள்ளுணர்வோ, அவன் தெரிந்தெடுத்தது சரியான வழியே என்று கூறியது. தன்னுடைய வேட்டைக்கார உள்ளுணர்வைச் சந்தேகிக்கவும் நிலேமையை மீண்டும் ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்க்கவும் அவன் தொடங்கினுன். அதற்குள் ஒரு முயல் அவன் எதிரே துள்ளி ஓடிற்று. அது திறப்புக்குப் பாய்ந்து சென்று, வஸ்கோவ் இருப்பதை உணராமல், பின்கால்களில் அமர்ந்து திரும்பிப் பார்க்கலாயிற்று. அது மிரண்டிருந்தது. மனிதர்களே அவ்வளவாக அறியாத அந்த முயல் மனிதர்களேக் கண்டு மிரண்டு, ஆவலுடன் பார்த்தது. சார்ஜண்டு மேஜரும் முயல் போலவே காதுகளேக் கூராக்கிக் கொண்டு அது பார்த்த திக்கில் நோக்கலானுன்.

ஆனுல் அவன் எவ்வளவோ கூர்ந்து பார்த்தும், எவ்வளவோ கவனமாகக் கேட்டும் அசாதாரணமான எதுவும் அவனுக்குப் புலப்படவில்லே. முயல் ஆல்டர் மரச் சோலேக்குள் ஓடிவிட்டது. வஸ்கோவின் கண்களில் கூச்சத்தால் கண்ணீர் துளித்தது. ஆயினும் அவன் அங்கேயே நின்றுகொண்டிருந்தான். ஏனென்ருல் தனது செவிகளேக் காட்டிலும் அதிகமாக இந்த முயலே அவன் நம்பினுன். அதனுல்தான் அந்த முயல் நோக்கிய திக்கில் ஓசையின்றி மிக மெதுவாக நிழல்போலப் படர்ந்து சென்ருன்.

முதலில் அவன் கண்களுக்கு ஒன்றும் தட்டுப்படவில்லே. பின்பு புதர்களின் ஊடாகப் பழுப்பான

ஒன்று தென்பட்டது. சில இடங்களில் பாசி படர்ந்த ஏதோ விந்தையான ஒன்று. வஸ்கோவ் மூச்சுக் காட்டாமல் நடந்து, புதர்களைக் கைகளால் விலக்கியவன், குடில் ஒன்றின் பாசி படர்ந்த பழங்காலச் சுவற்றைக் கண்ணுற்றான்.

''லெகோன்தவ் மடம்'' என்று புரிந்து கொண்டான் வஸ்கோவ்.

மெதுவாக நகர்ந்து சுவற்றின் மூலையை அடைந்தான். கிணற்றின் உளுத்த மரக் கைப்பிடிச் சுவரும் புல் மண்டிய பாதையும் ஒற்றைக் கீலில் கோணலாகத் தொங்கிக் கொண்டிருந்த கதவும் அவன் பார்வையில் பட்டன. கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டு காதுகள் இரையும் வரை உற்றுக் கேட்டு விட்டுக் கதவருகே சென்று நிலைச் சட்டத்தையும் துருவேறிய தாழ்ப்பாளையும் உற்று நோக்கினான். மிதிபட்ட புல்லையும் படியில் இன்னும் உலராத அடிச் சுவட்டையும் கண்டான். இந்தக் கதவு ஒரு மணி நேரம் முன்புதான் உடைத்துத் திறக்கப்பட்டிருக்கும் என்று புரிந்து கொண்டான்.

எதற்காக? என்ற கேள்வி எழுந்தது. ஆளற்ற மடத்தின் கதவை ஜெர்மானியர் வெறும் ஆவல் காரணமாக உடைத்திருக்க மாட்டார்கள். அது அவர்களுக்குத் தேவைப்பட்டிருக்கிறது. அப்படியானால், அவர்கள் தங்கிடம் தேடினார்கள் என்று ஆகிறது. ஒரு வேளை அவர்களில் காயம்பட்டவர்கள் இருப்பார்கள். அல்லது, எதையேனும் மறைத்து வைப்பது அவசியம் ஆகி இருக்கும். வேறு காரணம் சார்ஜண்டு மேஜருக்குப் புலப்படவில்லை. எனவே, அடிச் சுவட்டை வீணாகப் பதிக்காமல் இருக்கும் பொருட்டு மிகுந்த எச்சரிக்கையுடன் புதர் மறை

வுக்குத் திரும்பினான். அடர்ந்த புதர்களுக்குள் பதுங்கிக் கொண்டான்.

கொசுக்கள் அவனை விடாது கடித்தன. அதற்குள் எங்கோ கரிச்சான் கத்திற்று. பின்பு கிளை சடசடத்தது, ஏதோ கிணுகிணுத்தது. பின்னர் காட்டிலிருந்து பன்னிரண்டு ஜெர்மானியரும் ஒருவர் பின் ஒருவராக லெகோன்தவ் மடத்துக்கு வந்தார்கள். பதினொரு பெயர் சுமைகளை (சுரங்க வெடிகள் என்று தீர்மானித்தான் சார்ஜண்டு மேஜர்) எடுத்து வந்தார்கள். பனிரண்டாமவன் தடியை ஊன்றிய வாறு கடுமையாக நொண்டி நொண்டி நடந்தான். அவர்கள் மடத்தை நெருங்கி, சிப்பங்களை வைத்தார்கள். காயம் அடைந்தவன் உடனே படியில் உட்கார்ந்து விட்டான். ஒருவன் சுரங்க வெடிகளைக் குடிலுக்குள் கொண்டு வைக்கத் தொடங்கினான். மற்றவர்கள் புகை பிடித்தவாறு, ஒருவர் மாற்றி ஒருவராக வரைபடத்தைப் பார்த்து ஏதோ பேசிக் கொண்டார்கள்.

கொசுக்கள் வஸ்கோவைப் பிடுங்கித் தின்றன, குருதியை உறிஞ்சின. அவனோ, கண்கொட்டக் கூட அஞ்சினான். பக்கத்தில், ஜெர்மானியரிடமிருந்து இரண்டே அடி தூரத்தில், கைத்துப்பாக்கியை இறுகப் பிடித்தவாறு உட்கார்ந்து எல்லா வார்த்தைகளையும் கேட்டான், ஆனால் அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. உரையாடல் புத்தகத்தில் ஒரு எட்டு ஜெர்மன் வார்த்தைகளை மனப்பாடம் செய்திருந்தான். அவற்றையும் ருஷ்யன் எவனாவது நீட்டி முழக்கி உச்சரித்தால்தான் புரிந்து கொண்டான்.

ஆனால் ஊகம் செய்யத் தேவைப்படவில்லை. வரைபடப் பெட்டியை வைத்துக்கொண்டு நடுவில்

நின்ற முதுநிலை அதிகாரி கையை ஆட்டினான். உடனே அந்தப் பத்து பெயரும் தானியங்கித் துப்பாக்கிகளை எடுத்துக் கொண்டு காட்டில் புகுந்தார்கள். அவர்கள் காட்டுக்குள் போய்க் கொண்டிருக்கையில், சிப்பங்களை உள்ளே எடுத்து வைத்தவன் காயம்பட்டவன் எழுந்திருக்க உதவிக் குடிலுக்குள் இட்டுச் சென்றான்.

கடைசியில் வஸ்கோவ் தாராளமாக மூச்சு விடவும் கொசுக்களை அடித்து விரட்டவும் முடிந்தது. இப்போது எல்லாம் தெளிவாகி விட்டது. விவகாரத்தின் முடிவு நேரத்தைப் பொறுத்திருந்தது. ஜெர்மானியர் சினியூஹின் குன்றுத் தொடருக்குப் போனது காட்டுப் பழங்கள் பறிப்பதற்காக அல்லவே. லெகோன்தவோ ஏரியைச் சுற்றிக் கொண்டு வளையமிட அவர்கள் விரும்பவில்லை. கணவாய் வழியே செல்லவே அவர்கள் விடாப்பிடியாக முயன்றார்கள். இப்போது இடைவெளியை வேவு பார்க்கும் பொருட்டுச் சுமைகளை வைத்துவிட்டுச் சென்றார்கள்.

அவர்களை முந்திப் போய், பெண்களைத் தேடிக் கண்டு பிடித்து மறுபடி சண்டை தொடங்குவது வஸ்கோவுக்கு எளிதாய்த்தான் இருந்தது. ஆனால் ஆயுதங்கள் இல்லாதது தடையாய் இருந்தது. வெறுங்கைகளுடன் ஜெர்மானியரை வழி மறித்து நிற்பது பற்றி எண்ணவே இடமில்லை.

இந்தக் குடிலில், கோணல் கதவின் மறு புறம் இப்போது இருந்தன இரண்டு தானியங்கித் துப்பாக்கிகள். முழுதாக இரண்டு, பெரும் செல்வம். ஆனால் இந்தச் செல்வத்தை எப்படிக் கைப்பற்றுவது என்று வஸ்கோவுக்கு இன்னும் தெரியவில்லை.

தூக்கமற்ற இரவுக்குப் பின், குண்டுபட்ட கையுடன் ஆபத்தை மேற்கொள்வது பயனற்ற செயல். எனவே வஸ்கோவ் நிலைமையைத் தீர்க்கமாக ஆலோசனை செய்து ஜெர்மானியன் குடிலிலிருந்து வெளிவருவதை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

அவன் எதிர்பார்த்தது வீண்போகவில்லை. அந்த அழிவு வேலையினன், கொசுக் கடியால் வீங்கிய முகத்துடன், நிச்சயமான அழிவை மேற்கொள்ள வெளியே வந்தான். அவனுக்குத் தாகம் எடுத்தது போலும். தானியங்கித் துப்பாக்கியைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு, இரண்டு குப்பிகளை இடையில் தொங்கவிட்டவாறு ஜாக்கிரதையாக வெளியே வந்தான். வெகு நேரம் உற்றுப் பார்த்தான், கூர்ந்து கேட்டான், கடைசியில் சுவற்றை விட்டு விலகிக் கிணற்றை நோக்கி அடி எடுத்து வைத்தான். அப்போது வஸ்கோவ் கைத்துப்பாக்கியை மெதுவாக உயர்த்தி, போட்டிகளில் செய்வது போல மூச்சை அடக்கிக் கொண்டு, பதற்றமில்லாமல் குதிரையை இழுத்து விட்டான். குண்டு வெடித்தது. ஜெர்மானியன் திடுக்கிட்டு முன்னே சாய்ந்தான். உறுதிப்படுத்திக் கொள்வதற்காக வஸ்கோவ் இன்னொரு முறை அவன் மேல் சுட்டான். பின்பு துள்ளி எழப் போனவன் கதவு இடுக்கில் துப்பாக்கிக் குழாய் பளிச்சிட்டதைத் தற்செயலாகக் கண்டு அசைவற்றுப் போனான். காயமடைந்த இரண்டாமவன் தன் தோழனுக்குக் காப்பாகத் துப்பாக்கியைத் தயாராகப் பிடித்தவாறு எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான். வஸ்கோவ் கிணற்றுக்கு ஓடினால் குண்டுக்கு இரையாவது திண்ணமாய் இருந்தது.

வஸ்கோவின் நெஞ்சு சில்லிட்டுப் போயிற்று. இதோ இந்த நொண்டி குண்டுகளை வரிசையாக சுடப் போகிறான். எதையும் குறி வைக்காமல், வெறுமே வானத்தில் சுடுவான், ஒலி எழுப்பி மற்ற ஜெர்மானியருக்கு அபாயத்தை அறிவிப்பதற்காக. ஒரு நொடியில் மற்ற ஜெர்மானியர்கள் ஓடி வருவார்கள், காட்டைத் துருவித் தேடுவார்கள், அதோடு சார்ஜண்டு மேஜரின் ஆட்டம் ஒய்ந்து விடும். இரண்டாவது தடவை கடுக்காய் கொடுப்பது சாத்தியமாய் இராது.

ஆனால் அந்த ஜெர்மானியன் எதனாலோ சுடாதிருந்தான். எதேயோ எதிர்பார்த்தான், துப்பாக்கிக் குழாயை எச்சரிக்கையாக அசைத்தான், ஆனால் அபாய அறிவிப்பு செய்யவில்லை. தன் தோழன் கிணற்றின் சுவற்றில் முகத்தை அழுத்தியவாறு இன்னும் துடி துடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான், ஆனாலும் உதவிக்கு மற்றவர்களை அழைக்கவில்லை. எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். எதை?..

திடீரென்று வஸ்கோவ் புரிந்து கொண்டான்: தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இப்படிச் செய்தான், இந்த பாசிஸ்டு பதடி! சாகிறவனும் இராணுவ உத்தரவும் ஏரிக்குப் போன நண்பர்களும் இவனுக்கு ஒரு பொருட்டல்ல. தன்மேல் பகைவனின் கவனம் திரும்பிவிடக் கூடாது என்பது ஒன்றுதான் இவன் கவலை எல்லாம். கண்ணுக்குத் தெரியாத எதிரியிடம் பயந்து நடுங்கினான். பருத்த கட்டைகளாலான சுவற்றின் பின்னே சத்தம் காட்டாமல் கிடந்து உயிர் தப்பிவிட வேண்டும் என்பது ஒன்றே இவனுடைய பிரார்த்தனை.

ஆமாம், சாவைக் கண்முன்னே கண்டதும் ஜெர்

மானியன் கோழை ஆகிவிட்டான். படு கோழை ஆகி விட்டான். இதைப் புரிந்து கொண்டதும் சார்ஜண்டு மேஜர் நிம்மதியாக மூச்சு விட்டான்.

கைத்துப்பாக்கியை உறையில் வைத்துவிட்டு ஜாக்கிரதையாகப் பின்னே நகர்ந்து விரைவாக மடத்தைச் சுற்றிச் சென்று மறு புறமிருந்து கிணற்றை நெருங்கினான். அவன் நினைத்தபடியே காயமடைந்த ஜெர்மானியன் கொல்லப்பட்டவன் பக்கம் பார்க்கவில்லை. சார்ஜண்டு மேஜர் பதற்றமின்றி அவன் அருகே ஊர்ந்து சென்று தானியங்கித் துப்பாக்கியையும் இடைவாரிலிருந்து அதிகப்படித் தோட்டாச் சட்டங்கள் கொண்ட பையையும் எடுத்துக் கொண்டு காட்டுக்குத் திரும்பினான்.

இப்போது எல்லாம் அவனுடைய விரைவைப் பொறுத்திருந்தது. ஏனென்றால் அவன் சுற்று வழியாக நடந்தான். இங்கே ஆபத்தை மேற்கொள்ள நேர்ந்தது, அவன் தயங்காமல் மேற்கொண்டான். தலை தெறிக்க ஓடினான். குன்றுத் தொடருக்கு இட்டுச் சென்ற தேவதாரு மரச் சோலையை அடைந்த பின்பே இளைப்பாறினான்.

இங்கே இருந்தன பழக்கமான இடங்கள்—அவன் மார்பால் ஊர்ந்து பார்த்த இடங்கள். இங்கே தான் எங்கோ ஒளிந்திருப்பார்கள் அவனுடைய பெண்கள்—அவர்கள் கிழக்கே போயிராவிட்டால். ஏதேனும் நேர்ந்தால் பின்வாங்கி விடும்படி அவர்களுக்கு உத்தரவிட்டிருந்தான் என்றாலும், அவர்கள் தன் கட்டளையை அப்படியே நிறைவேற்றியிருப்பார்கள் என்று இப்போது வஸ்கோவுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. நம்பவிருப்பமும் இல்லை.

அவன் இளைப்பாறினான், எங்காவது ஜெர்மானி யரின் குரல்கள் கேட்கின்றனவா என்று உற்றுக் கவனித்தான். பின்பு, ஒரு நாள் முன்னர் ரீதாவுடன் நடந்த பாதை வழியே சினியூஹின் குன்றுத் தொடருக்குச் சென்றான். அப்போது எல்லோரும் உயிரோடு இருந்தார்கள். லீஸா பிரீச்கினா தவிர எல்லோரும்...

ரீதாவும் ழேனியாவும் பின்வாங்கிச் சென்று தான் இருந்தார்கள். வெகு தூரம் அல்ல, தலைக்கு நாள் காலை ஜெர்மானியரை ஏய்ப்பதற்காக நாடகமாடிய மறு கரைக்கு. வஸ்கோவ் இதைப் பற்றி நினைக்கவில்லை. பாறைகளின் இடையிலோ முந்திய இடங்களிலோ அவர்களைக் காணாமையால் ஆற்றின் கரைக்கு வந்தான், தேடுவதற்காக அல்ல, வெறும் மனக் கலக்கம் காரணமாக. தான் தனியாளாக எஞ்சியிருப்பதை, குண்டுபட்ட கையுடன் தன்னந் தனியன் ஆகிவிட்டதைத் திடீரென்று புரிந்து கொண்டான். அவனுடைய மனத்தை ஏக்கம் கவ்வி யது. மூளை ஒரேயடியாகக் குழம்பிற்று. அவன் கரைக்கு வந்த போது சுய நினைவே அற்றவனாக இருந்தான். ஆற்று நீரைக் குடிப்பதற்காக மண்டி யிட்டு அமர்ந்தான், அதற்குள், ''வஸ்கோவ்...'' என்று யாரோ கிசுகிசுத்தது அவன் காதில் பட்டது.

''வஸ்கோவ்!.. தோழர் சார்ஜண்டு மேஜர்!'' என்று அதைத் தொடர்ந்து யாரோ கூவி அழைத் தார்கள்.

தலையைச் சட்டெனத் திருப்பினான். அவர்கள் ஆற்றின் குறுக்கே ஓடி வந்தார்கள். ஸ்கர்ட்டுகளைத் தூக்கிக் கொள்ளாமல் நேரே தண்ணீரில் ஓடி வந்

தார்கள். அவன் அவர்களை நோக்கிப் பாய்ந்தான். அங்கே தண்ணீரிலேயே தழுவிக் கொண்டார்கள். இரண்டு பெயரும் ஒரே சமயத்தில் அவனைக் கட்டிக் கொண்டு தொங்கி, அழுக்கடைந்து, வியர்த்த, மழிக்காத முகத்தில் முத்தமிட்டார்கள்...

''அட என்ன நீங்கள், பெண்களா, என்ன நீங் கள்!..''

ஆனால் அவன் கண்கள் நீர் மல்கின. இமைகளில் கண்ணீர் துளித்து நின்றது. அவன் பலமிழந்து விட்டான் போலும். தனது பெண்களின் தோள்களை அணைத்தவாறு அவர்களோடு அக்கரை சென்றான். மேனியா அவனோடு ஒட்டிக்கொண்டு, அவனுடைய மழிக்காத முகத்தை வருடினாள்.

''அட என் பெண்களே, அருமைப் பெண்களே! ஏதாவது சாப்பிட்டீர்களா? கொஞ்சமாவது உறங்கி னீர்களா?''

''எங்களுக்கு விருப்பம் உண்டாகவில்லை, தோழர் சார்ஜண்டு மேஜர்...''

''உங்களுக்கு நான் இப்போது எந்த வகையில் சார்ஜண்டு மேஜர், தங்கச்சிகளே! நான் இப்போது உங்கள் அண்ணன். என்னை பெதோத் என்றே கூப் பிடுங்கள். அல்லது அம்மா கூப்பிட்டது போல பேத்யா என்று அழையுங்கள்...''

அவர்களுடைய சாமான் பைகளும் சுருட்டிய மேல் கோட்டுக்களும் துப்பாக்கிகளும் புதர்களுக் குள் வைக்கப்பட்டிருந்தன. வஸ்கோவ் தன் சாமான் பையை உடனே எடுத்து அவிழ்க்கத் தொடங் கினான். அதற்குள், ''காலியாவோ?'' என்று கேட் டாள் மேனியா.

தணிந்த குரலில், தயக்கத்துடன் கேட்டாள்.

அவர்கள் விஷயத்தைப் புரிந்து கொண்டு விட்டார்கள். நிச்சயப்படுத்திக் கொள்வது தான் தேவைப் பட்டது. சார்ஜண்டு மேஜர் பதில் சொல்லவில்லை. மௌனமாகப் பையை அவிழ்த்து விரைத்துப் போயிருந்த ரொட்டியையும் கொழுப்பையும் மதுக் குப்பியையும் எடுத்தான். மூன்று குவளைகளில் மது ஊற்றினன், ரொட்டியைத் துண்டுகளாக விண்டான், கொழுப்பை நறுக்கினன். பெண்களுக்குக் கொடுத்துவிட்டுத் தன் குவளையை உயர்த்தினன்.

''நம்முடைய தோழர்கள் வீரமரணம் அடைந்து விட்டார்கள். காலியா துப்பாக்கிச் சண்டையில் உயிர் துறந்தாள், லீஸா பிரீச்கினு புதை சேற்றில் அமிழ்ந்து விட்டாள். ஆகவே சோனியாவைச் சேர்த்து மூன்று பெயரை நாம் இழந்து விட்டோம். இது உண்மை, ஆனல் முழுதாக ஒரு பகலும் இரவும் பகைவர்களை இங்கே ஏரிகளின் நடுவே சுற்ற வைத்தோம். ஒரு முழு நாள்!.. இப்போது இன்னும் ஒரு நாள் அவர்களைத் தடுத்து நிறுத்துவது நம்முடைய பொறுப்பு. நமக்கு உதவி கிடைக்காது. ஜெர்மானியர் இங்கே வருகிருர்கள். ஆகவே, நமது சகோதரிகளின் நினைவுக்கு அஞ்சலி செலுத்துவோம். பிறகு சண்டை போட நேரம் வந்து விடும். இது கடைசிச் சண்டையாக இருக்கும் என்று எண்ணுகிறேன்...''

## 13

ஒரு வகையான துயரம் சடைக் கரடி போன்றது. மேலே விழுந்து பிய்த்துப் பிடுங்கும், ஒளியே தென்படாதபடி. ஆனால் அது விலகியதும் பரவாயில்லை, மூச்சு விடலாம், உயிர் வாழலாம், செயல் புரியலாம் என்று தோன்றும். ஒன்றும் நடக்காதது போல.

ஆனால் சில வேளைகளில் அற்பமான கவனப் பிசகு நேரிடும். சிறு தவறு. ஆனால் இந்தச் சிறு தவறு நம்மை வதைத்து எடுத்துக் கதற அடிக்கும்.

சாப்பிட்ட பின் போருக்கு ஆயத்தங்கள் செய்கையில் இந்த மாதிரி அற்பப் பிசகு ஒன்றை வஸ்கோவ் கண்டு பிடித்தான். தன் சாமான் பையை மறுபடி மறுபடி உதறிப் பார்த்தான், ஒவ்வொரு சாமானையும் மும்மூன்று தடவைகள் தட்டித் தடவிப் பார்த்தான். இல்லை, அவன் தேடியவை காணப்படவில்லை.

இரண்டாவது கைக்குண்டுக்கு உரிய வெடித்திரியும் கைத்துப்பாக்கிக்குத் தோட்டாக்களும் அற்ப விஷயங்கள் தாம். ஆனால் வெடித்திரி இல்லாத கைக்குண்டு வெறும் இரும்புத் துண்டு மாத்திரமே. கூழாங்கல் போன்ற வெற்றுத் துண்டு மட்டுமே.

''பெண்களா, இப்போது நம்மிடம் பீரங்கிப் படை இல்லை.''

இவ்வாறு புன்னகையுடன் சொன்னான், அவர்கள் கலக்கம் அடையாமல் இருப்பதற்காக. அந்த அசடுகளோ, பதிலுக்கு முகம் மலர முறுவலித்தார்கள்.

''பரவாயில்லே, பெதோத், அடித்து விரட்டி விடுவோம்!''

இப்படிச் சொன்னவள் ழேனியா. அவன் பெயரைச் சொல்லும் போது கொஞ்சம் குழறிஞள். முகம் சிவந்தாள். பழக்கம் இல்லாததால். கமாண்டரைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவது கடினம் தானே.

சுடு கருவிகள், மூன்று துப்பாக்கிகளும் இரண்டு தானியங்கித் துப்பாக்கிகளும் ஒரு கைத்துப்பாக்கியும். தானியங்கித் துப்பாக்கிகளைக் கொண்ட பத்துப் பேரோடு சண்டை போடுவதற்கு இவை பிரமாத உதவி செய்துவிட மாட்டா. ஆஞலும் சொந்தக் காடு காப்பாற்றும் என்று நம்ப வேண்டும். காடும் ஆறும்.

''இந்தா ரீதா, தானியங்கித் துப்பாக்கிக்கு இன்ஞெரு தோட்டாச் சட்டம். ஆஞல் தூரத்திலிருந்து சுடாதே. ஆற்றின் அக்கரையில் வெறும் துப்பாக்கியால் சுடு. தானியங்கித் துப்பாக்கியைப் பத்திரமாக வைத்திரு. பகைவர்கள் ஆற்றைக் கடக்க முற்படும்போது அது மிகவும் பயன்படும். நிரம்ப. புரிந்ததா?''

''புரிந்தது, பெதோத்...''

இவளும் குழறிஞள். வஸ்கோவ் சிரித்துக் கொண்டான்.

''பேத்யா என்று கூப்பிடுவது லேசாய் இருக்கும். என் பெயர் ஒழுங்கானது இல்லேதான். ஆஞல் இருப்பதை மாற்ற முடியாதே'' என்ருன்.

இந்த நாட்களில் ஜெர்மானியர் நிறையக் கற்றுக் கொண்டு விட்டார்கள். அவர்கள மும் மடங்கு எச்சரிக்கை கடைப்பிடித்தார்கள். ஆகையால்

ஒவ்வொரு பாறையின் பின்னேயும் உற்றுப் பார்த் தவாறு மெதுவாக நகர்ந்தார்கள். முடிந்தவை எல்லாவற்றையும் துருவிப் பார்த்தார்கள். இவ் வாறு அவர்கள் ஆற்றின் கரையை அடைந்த போது சூரியன் உச்சிக்கு வந்து விட்டது. நிகழ்ச்சி கள் எல்லாம் முன்போலவே திரும்ப நடந்தன. ஆனால் இந்தத் தடவை அவர்களுக்கு எதிர்ப்புறம் இருந்த காடு பெண்களின் குரல்களால் ஆரவாரிக்க வில்லை. மர்மமும் அபாயமும் நிறைந்த மௌனம் சாதித்தது. இந்த அபாயத்தை உணர்ந்த ஜெர் மானியர் வெகு நேரம் வரை நீரை நெருங்காமல் எதிர்க் கரைப் புதர்களில் அங்கும் இங்கும் சற்றே தென்பட மட்டும் செய்தார்கள்.

வஸ்கோவ், அகன்ற நீர்ப்பரப்பை ஒட்டிப் பெண்களுக்கு இடம் தெரிந்தெடுத்து, திசைகாட்டிக் குறிகளை விளக்கி, நிற்க வைத்தான். ஒரு நாள் முன்னர் ழேனியா தன் மேனியால் ஜெர்மானிய ரைத் தடுத்து நிறுத்திய முனையில் தான் இருந்து கொண்டான். இங்கே இரு கரைகளும் அனேகமாக ஒன்று சேர்ந்தன, இரு மருங்கிலும் காடு நீரை ஒட்டி வளர்ந்திருந்தது. நீர்த் தடையைக் கடப் பதற்கு இதைவிட ஏற்ற இடம் வேறு எதுவும் இல்லை. மிகையான பதற்றம் கொண்ட பகைவனைக் குண்டு சுடுவதற்குத் தூண்டும் பொருட்டு இந்த இடத்தில்தான் ஜெர்மன்காரர்கள் தங்களை அடிக்கடி வெளிக் காட்டிக் கொண்டார்கள். ஆனால் பதற்றம் உள்ளவர்கள் யாரும் இல்லை. ஏனென்றால், ஜெர் மானியர் நீரில் இறங்கிய பிறகே சுடும்படி வஸ் கோவ் தன் படையினருக்கு மிகமிகக் கண்டிப்பாகக் கட்டளை இட்டிருந்தான். அதுவரை, பட்சிகள் கத்து

வதை நிறுத்தாதபடி மூச்சைக் கூடச் செட்டாக விடும்படி சொல்லியிருந்தான்.

எல்லாம் கைக்கருகே தயாராக இருந்தன. தோட்டாக்கள் முன்பே கெட்டிக்கப்பட்டு விட்டன, துப்பாக்கிகளின் காப்புப் பூட்டுகள் கழற்றப்பட்டிருந்தன வேளை வரும்போது சட்டெனச் சுட வாக்காக. சார்ஜண்டு மேஜர் அனேகமாக நிம்மதியுடன் மறு கரையைப் பார்த்துக்கொண்டிருந்தான். கை தான் வலி வந்த பல் போல விண் விண்ணென்று தெறித்துக் கொண்டிருந்தது.

அங்கே, எதிர்க் கரையிலோ, எல்லாம் நேர் மாறாக இருந்தது: பட்சிகள் ஒலிப்பதை நிறுத்தி விட்டன. கரிச்சான்கள் கிளம்பிப் பறந்தன. இவை எல்லாவற்றையும் வஸ்கோவ் இப்போது கவனித்து, மதிப்பிட்டு வகைப்படுத்தி வைத்துக் கொண்டான் — வெறும் பார்வை விளையாட்டு ஜெர்மானியருக்குச் சலித்துப் போகும் தருணத்தை நழுவ விடாதிருக்கும் பொருட்டு.

ஆனால் முதல் குண்டு சுட அவனுக்கு வாய்க்கவில்லை. இந்தக் குண்டு வெடிப்பை அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் ஆயினும் அதைக் கேட்டுத் திடுக்கிட்டான். துப்பாக்கிச் சுடு எப்போதுமே எதிர்பாரா நிகழ்ச்சி, திடீர் நிகழ்ச்சி. குண்டு இடப்புறம், ஆற்றின் போக்கில் கீழே தாக்கியது. முதல் குண்டைத் தொடர்ந்து அடுத்தடுத்து குண்டுகள் வெடித்தன. வஸ்கோவ் பார்த்தான். நீர்ப்பரப்பில் ஒரு ஜெர்மானியன் தண்ணீரிலிருந்து கரைக்குத் தவழ்ந்து சென்றான், தன்னவர்களிடம் திரும்பிப் போய்க் கொண்டிருந்தான். குண்டுகள் அவனைச் சுற்றிச் சட சடத்தன, ஆனால் அவன் மேல்

படவில்லை. ஜெர்மானியன் கலகலவென்று ஒலித்த கூழாங்கற்கள் மீது காலை இழுத்து வைத்தவாறு விரைவாகத் தவழ்ந்து சென்றான்.

காயம் பட்டவனுக்குக் காப்பாகக் குண்டுகள் பொழிந்தன தானியங்கித் துப்பாக்கிகள். சார் ஜண்டு மேஜர் துள்ளி எழுந்து தன்னவர்களிடம் பாய்ந்து செல்ல விரும்பியவன், அந்த ஆசையை அடக்கிக் கொண்டான். சரியான நேரத்தில். ஏனென்றால், புதர்களின் ஊடாக எதிர்க் கரைக்கு நால்வர் ஒரே சமயத்தில் பாய்ந்து வந்தார்கள். குண்டுச் சூட்டின் காப்பில் ஆற்றைக் கடந்து காட்டில் மறைந்து கொள்ள நினைத்தார்கள் போலும். வெறும் துப்பாக்கியால் இங்கே ஒன்றும் செய்ய முடியாதிருந்தது. ஏனென்றால் ஒரு தரம் சுட்ட பின் கொண்டியை இழுத்துவிட நேரம் இல்லை. எனவே, வஸ்கோவ் தானியங்கித் துப்பாக்கியை எடுத்துக் கொண்டான். அதன் குதிரையை அழுத்தினான். அதற்குள் எதிர்க்கரையில் இரண்டு நெருப்புப் பொறிகள் சுடர்ந்தன. விசிறி வடிவில் குண்டுகள் அவன் தலைக்கு மேலாகக் காற்றைக் கிழித்துச் சென்றன.

இந்தச் சண்டையில் வஸ்கோவ் ஒரு விஷயத்தை அறிந்திருந்தான்: பின்வாங்கக் கூடாது. இக் கரையில் இம்மியளவு இடங்கூட ஜெர்மானியருக்கு விட்டுக் கொடுக்கக் கூடாது. எவ்வளவு கடினமாயிருந்தாலும் எவ்வளவு நம்பிக்கைக்கு இடம் இல்லாதிருந்தாலும் சரியே, நிலைத்து நிற்க வேண்டும். இந்த இடத்தைக் காத்து நிற்க வேண்டும். இல்லாவிட்டால் பகைவர்கள் இதை மிதித்துத் துவைத்து விடுவார்கள். அதோடு எல்லாம் தீர்ந்து

விடும். தனக்கு பின்னே ருஷ்யா அனைத்தும் ஒன்று திரண்டு இருப்பதாகவும் அதன் கடைசி மகன், கடைசிக் காப்பாளன் தான், வஸ்கோவ் ஒருவனே என்றும் அவனுக்கு உணர்வு உண்டாயிற்று. உலகம் முழுவதிலும் வேறு யாரும் இல்லை: அவனும் பகைவர்களும் ருஷ்யாவும் மட்டுமே இருந்தார்கள்.

இந்த நிலையிலும் ஏதோ மூன்றாவது செவியால் பெண்களின் அரவத்தையும் கேட்டுக் கொண்டிருந்தான்——அவர்களுடைய துப்பாக்கிகள் இன்னும் சுடுகின்றனவா இல்லையா என்று. சுட்டுக் கொண்டிருந்தன. எனவே, அவர்கள் உயிரோடு இருந்தார்கள். தங்கள் போர் முனையை, தங்கள் ருஷ்யாவைக் காத்து நின்றார்கள். உறுதியாக நின்றார்கள்!..

பகைவர்களின் கைக்குண்டுகள் வெடிக்கத் தொடங்கிய போதும் அவன் பயப்படவில்லை. பகைவனுடைய பலம் எவ்வளவு என்று அறியாதிருக்கையில் நீடித்த போர் நடத்த ஜெர்மானியரால் முடியாது, எனவே இதோ இடை நிறுத்தம் தொடங்கி விடும் என்று அவன் எதிர்பார்த்தான். நிலைமையைச் சீர்தூக்கிப் பார்ப்பதும் தங்கள் நடவடிக்கைகளை மறுபடி முறைப்படுத்திக் கொள்வதும் அதன் பின்பே புதிய செயல்கள் தொடங்குவதும் ஜெர்மானியருக்கும் அவசியமாய் இருந்தன. அவனை நோக்கி வந்த நால்வரும் அக்கணமே பின்வாங்கி விட்டார்கள், அவன் யாரையாவது காயப்படுத்தினானோ என்று கவனிக்கக் கூட முடியாதபடி அவ்வளவு சாமர்த்தியமாக அகன்றுவிட்டார்கள். புதர்களின் மறைவில் இருந்து கொண்டு பயம் காட்டுவதற்காகச் சிறிது நேரம் சுட்டுவிட்டு மீண்டும்

அடங்கிப் போனூர்கள். தண்ணீருக்கு மேலே புகை தான் இன்னமும் மிதந்து கொண்டிருந்தது.

சில நிமிடங்கள் தாக்காட்டி ஆயிற்று. ஆனல் இன்று நிமிடங்களைக் கணக்கிட்டுப் பயன் இல்லை. ஏனெனில் உதவி எங்கிருந்தும் வரும் என்ற நம்பிக்கை இல்லை. என்ருலும் அவர்கள் பகைவனைக் கடித்து, தங்கள் கூர் பற்களைக் காட்டி விட்டார் கள். இனி இரண்டாந் தரம் அவன் இந்த இடத்தில் அவ்வளவு சுளுவாக முன்னேற மாட்டான். அவன் இன்னும் எங்கோ இடுக்கு கிடைக்குமா என்று தேட முயல்வான். ஆற்றுப் பெருக்கின் கீழ்ப் புறத்தில் பாறைகள் நீரையொட்டிச் செங்குத்தாக எழுந் தன. எனவே பெருக்கின் மேற்புறத்தில் தான் பகை வர்கள் ஆற்றைக் கடக்க முயல்வார்கள். எனவே வஸ்கோவ் உடனே வலப்புறம் ஓடிச் செல்வதே சரியாய் இருந்தது. இந்த இடத்தில் கையோடு காவ லாக ஒரு பெண்ணை நிற்க வைத்தால் போதும்...

வஸ்கோவ் தனது ஏற்பாடுகளை முடிவுவரை முறைப்படுத்த வாய்க்கவில்லை. பின்னல் கேட்ட காலடி ஓசை குறுக்கிட்டது. திரும்பிப் பார்த்தான். ழேனியா புதர்களின் ஊடாக நேரே ஓடி வந்து கொண்டிருந்தாள்.

''குனிந்து கொள்!..''

''சீக்கிரம்!.. ரீதா!..''

ரீதாவுக்கு என்ன என்று வஸ்கோவ் கேட்க வில்லை. ழேனியாவின் விழிகளிலிருந்தே விஷயத் தைத் தெரிந்து கொண்டான். துப்பாக்கியை எடுத்துக்கொண்டு ழேனியாவுக்கு முந்தி விரைந்து ஓடினன். ரீதா தேவதாரு மரத்தின் மீது முதுகைச் சாய்த்தவாறு மண்டியிட்டு அமர்ந்திருந்தாள். சாம்

பல் நிற உதடுகளை அடிக்கடி நக்கியவாறு வலிந்து புன்னகை செய்தாள். வயிற்றின் மீது ஒன்றன் குறுக்கே ஒன்ருக அழுத்தி வைத்திருந்த கைகளுக்கு அடியிலிருந்து குருதி பெருகிக்கொண்டிருந்தது.

''எதனுல்?'' என்று மட்டுமே கேட்டான் வஸ்கோவ்.

''கைக்குண்டால்...''

வஸ்கோவ் ரீதாவை மல்லாக்கக் கிடத்தினுன். கைகளை எடுக்கப் போனுன். அவள் விடவில்லை. வலிக்குப் பயந்தாள். கைகளை மெதுவாக விலக்கியவன் காரியம் முடிந்துவிட்டது என்று புரிந்து கொண்டான்... நன்ருகப் பார்ப்பது கூடக் கடினமாய் இருந்தது. ஏனெனில் இரத்தமும் கிழிந்த உடுப்பும் பிய்ந்து வயிற்றில் நசுங்கியிருந்த இராணுவ இடைவாரும் எல்லாம் ஒன்ருகக் குழம்பியிருந்தன.

''துணி!'' என்று கத்தினுன் வஸ்கோவ். ''உள்ளாடையைக் கொடு!''

ழேனியா நடுங்கும் கைகளால் தன் சாமான் பையிலிருந்து எதையோ உருவினுள். லேசான, வழுவழுப்பான ஒன்றை...

''அட பட்டு வேண்டாம்! சணல் துணி கொடு!''

''இல்லை.''

''அட, சைத்தான்!..'' வஸ்கோவ் தன்னுடைய சாமான் பையருகே பாய்ந்து அதை அவிழ்க்கலானுன்.

''ஜெர்மானியர்கள்...'' என்று வெறும் உதடுகளால் கிசுகிசுத்தாள் ரீதா ''எங்கே ஜெர்மானியர்கள்?''

ழேனியா ஒரு கணம் அவளை உறுத்துப் பார்த்தாள். பின்பு, தானியங்கித் துப்பாக்கியை எடுத்துக்

கொண்டு திரும்பிப் பார்க்காமல் ஆற்றின் கரைக்கு ஓடினுள்.

சார்ஜண்டு மேஜர் சட்டையையும் உள்கால் சட்டையையும் சேமிப்பாக வைத்திருந்த இரண்டு பட்டித் துணிச் சுருள்களேயும் எடுத்துக் கொண்டு திரும்பினுன். ரீதா ஏதோ சொல்ல முயன்ருள். அவன் காதில் படவில்லே. அவளது இராணுவ உடுப்பையும் ஸ்கர்ட்டையும் உள்ளாடையையும் கத்தியால் கிழித்தான். அவற்றிலிருந்து குருதி வடிந்து கொண்டிருந்தது. வஸ்கோவ் பற்களே இறுக்கிக் கொண்டான். குண்டுச் சிதர் வயிற்றைக் கிழித்துக் கொண்டு சாய்வாகப் பாய்ந்து வெளியேறி இருந்தது. கரிய இரத்தத்தின் ஊடாக நடுங்கின சாம்பல் நிற உள்ளுறுப்புக்கள். வஸ்கோவ் வயிற்றின் மேல் சட்டையை வைத்துப் பட்டித் துணியால் கட்டினுன்.

''பரவாயில்லே, ரீதா, பரவாயில்லே. குண்டுச் சில்லு மேலாகக் கிழித்துக் கொண்டு போயிருக்கிறது. குடல்கள் சேதம் அடையவில்லே, காயம் ஆறிவிடும்...''

ஆற்றின் கரையில் குண்டு வரிசை சட-சடத்தது. மீண்டும் நாற்புறமும் அதிர்ந்தொலித்தது. இலேகள் உதிர்ந்தன. வஸ்கோவ் கட்டக் கட்ட, துணிகள் உடனே குருதியில் நனேந்தன.

''போ... அங்கே போ... ழேனியா அங்கே இருக்கிருள்...'' என்று சிரமத்துடன் சொன்னுள் ரீதா.

ஒரு குண்டு வரிசை அருகாகச் சென்றது. அவர்களுக்கு உயரே அல்ல. அவர்களேயே இலக்காகக் கொண்டு. ஆனுல் படவில்லே. சார்ஜண்டு மேஜர் திரும்பிப் பார்த்தான். கைத்துப்பாக்கியை உருவி

அங்கே தெரிந்த உருவத்தின்மேல் இரண்டு தடவை சுட்டான்: ஜெர்மானியர் ஆற்றைக் கடந்து விட்டார்கள்.

ஆனால் ழேனியாவின் தானியங்கித் துப்பாக்கி இன்னமும் எங்கோ சுட்டுக் கொண்டிருந்தது. காட்டுக்குள் மேலும் மேலும் தொலைவில் சென்றவாறு சடசடத்துக் கொண்டிருந்தது. ழேனியா குண்டுகள் சுட்டவாறு ஜெர்மானியரைத் தன்னுடன் இழுத்துச் செல்கிறாள் என்று வஸ்கோவ் புரிந்து கொண்டான். இழுத்துச் சென்றாள். ஆனால் எல்லோரையும் அல்ல. இன்னும் எங்கோ ஒரு ஜெர்மானியன் தென்பட்டான், சார்ஜண்டு மேஜர் இன்னொரு தரம் அவன் மீது குண்டு சுட்டான். ரீதாவை எடுத்துக் கொண்டு அப்பால் போய்விடுவது அவசியமாய் இருந்தது. ஏனென்றால் ஜெர்மானியர் அருகே வட்டமிட்டார்கள், எந்தக் கணமும் இறுதிக் கணம் ஆகிவிடக் கூடியதாய் இருந்தது.

ரீதா சாம்பல் நிற உதடுகளைக் கடித்துக் கொண்டு கிசுகிசுத்ததைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அவளை வாரி எடுத்தான். துப்பாக்கியையும் எடுத்துக் கொள்ள விரும்பினான், ஆனால் முடியவில்லை. பல்வலி போன்று குத்தல் எடுத்த அடிபட்ட கையின் பலம் நொடிக்கு நொடி குறைவதை உணர்ந்தவாறு புதர் மறைவுக்கு ஓடினான்.

சாமான் மூட்டைகளும் துப்பாக்கிகளும் சுருட்டிய மேல் கோட்டுக்களும் சார்ஜண்டு மேஜர் எறிந்து விட்ட ழேனியாவின் உள்ளாடைகளும் தேவதாரு மரத்தடியில் கிடந்தன. ழேனியாவின் உள்ளாடைகள் இளமையும் மென்மையும் பெண்மைக் கவர்ச்சியும் கொண்டிருந்தன...

அழகான உள்ளாடைகளில் ழேனியாவுக்கு மோகம். எத்தனையோ பொருள்கள் இல்லாமல் அவளால் சுலபமாகச் சமாளித்துக் கொள்ள முடிந்தது. ஏனென்றால் களிப்பும் புன்னகையும் உள்ள சுபாவம் அவளுக்கு. ஆனால் போர் மூளும் தறுவாயில் தாயார் பரிசளித்த உள்ளாடைகளை இராணுவச் சாமான் மூட்டைகளில் வைத்து எங்கும் எடுத்துச் சென்றாள். இதற்காகக் கண்டனங்களும் அதிகப்படி மட்டி வேலைத் தண்டனையும் பிறவும் ஓயாமல் கிடைத்தன. ஆனாலும் அவள் பொருட்படுத்தவில்லை.

சிறப்பாக ஓர் உள் சட்டையும் இருந்தது—பார்த்தாலே தலைக் கிறுக்கம் ஏற்படும். ழேனியாவின் தகப்பனார்கூட உறுமினார்:

''இந்தா, ழேனியா, இது மட்டுமீறிப் போய் விட்டது. எங்கே கிளம்புகிறாய்?''

''மாலைக் கூட்டத்துக்கு!'' என்று பெருமையுடன் சொன்னாள் ழேனியா. தகப்பனார் கேட்டது இதை அல்ல என்பது அவளுக்குத் தெரியும்.

தந்தையும் மகளும் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொண்டார்கள்.

''காட்டுப் பன்றி வேட்டைக்கு வருகிறாயா என்னோடு?''

''விட மாட்டேன்!'' தாயார் பயந்தாள். ''உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது: பெண்ணை வேட்டைக்கு இழுத்துப் போகிறேன் என்கிறாயே!''

''பழகட்டும்!'' என்று சிரித்தார் தந்தை. ''செம்படைக் கமாண்டரின் மகள் எதற்கும் அஞ்சக் கூடாது.''

ழேனியா எதற்கும் அஞ்சுவதில்லை. குதிரைச் சவாரி செய்வாள், சுடு பயிற்சிச் சாலையில் துப்பாக்கி சுடுவாள், தகப்பனாருடன் காட்டுப் பன்றிகளுக்காகப் பதிபோடுவாள், தகப்பனாரின் மோட்டார் சைக்கிளில் இராணுவ நகரில் சுற்றி வருவாள். விதம் விதமான நடனங்கள் வேறு ஆடுவாள், கித்தார் வாசித்துக்கொண்டு பாடுவாள், வடிவமைந்த மேனியரான லெப்டினண்டுகளுடன் காதல் விளை யாட்டு ஆடுவாள். உண்மைக் காதல் இன்றி, உல்லா சமாக, வேடிக்கையாகக் காதல் விளையாட்டு ஆடு வாள்.

''ழேனியா, லெப்டினண்டு செர்கேயிச்சை நீ பைத்தியமாக அடித்து விட்டாய். இன்றைக்கு என் னிடம் அறிக்கை செய்து கொண்ட போது, 'தோ ழர் ழேனியா... ஜெனரல்...' என்று குழறுகிறான்.''

''பொய் சொல்லுகிறாய், அப்பா.''

இன்பமான, குதூகலம் நிறைந்த காலம் அது. தாயாரோ ஓயாமல் முகம் சுளிப்பாள், பெருமூச் செறிவாள்: வயது வந்த பெண், மங்கைப் பருவத் தினள், எப்படி நடந்து கொள்கிறாள்... புரியாத விதமாக நடந்து கொள்கிறாள்: துப்பாக்கிப் பயிற் சியும் குதிரை யேற்றமும் மோட்டார் சைக்கிள் சவாரியும், விடிய விடிய நடனங்களும் மலர்ச் செண்டுகள் பரிசளிக்கும் லெப்டினண்டுகளும் ஜன் னலோரமாக நின்று அவர்கள் பாடும் காதல் பாட்டுக்களும், அனுப்பும் செய்யுள் கடிதங்களும்.

''ழேனியா, இப்படி நடந்து கொள்ளக் கூடாது. ஊர்க்காரர்கள் உன்னை என்ன சொல்லுகிறார்கள், தெரியுமா?''

''என்ன வேண்டுமானாலும் உளறட்டும், அம்மா!''

''கர்னல் லூழினுடன் உன்னைப் பல முறை பார்த்ததாகச் சொல்லுகிறார்கள். அவன் பிள்ளை குட்டிக்காரன் ஆயிற்றே. இப்படிச் செய்யலாமா நீ?''

''ரொம்பத்தான் வேண்டும் எனக்கு லூழின்!'' என்று தோள்களைக் குலுக்கிவிட்டு ஓடிவிட்டாள் ழேனியா.

லூழின் அழகன், மர்மமானவன், வீரன். ஹால் ஹின்-கோல் சண்டையில் செங்கொடி விருதும் பின் லாந்துப் போரில் நட்சத்திரமும் பெற்றிருந்தான். ழேனியா இந்தப் பேச்சைத் தட்டிக் கழிப்பது வெறுமே அல்ல என்று உணர்ந்தாள் தாயார். உணர்ந்தாள், பயந்தாள்...

பெற்றோர் கொல்லப்பட்ட பின் ழேனியா தன்னந் தனியளாகப் போர்முனைக்கு வந்தபோது லூழின் தான் அவளை உற்சாகப்படுத்தி அரவணைத்து ஆதரித்தான். அவளுடைய நிர்க்கதியான நிலைமையை அவன் பயன்படுத்திக் கொண்டான், அவளைத் தன்னோடு ஒட்டிக் கொண்டான் என்று சொல்ல முடியாது. அப்போது அவளுக்கு இந்த ஆதரவு தேவைப்பட்டது. யாரிடமாவது ஒண்டிக் கொள்வதும் அழுது முறையிடுவதும் யாராலாவது கொஞ்சிச் சீராட்டப்படுவதும் பயங்கரமான, போரிடும் உலகில் மீண்டும் தன் பலம் கொண்டு நிற்பதும் அவளுக்கு அவசியமாய் இருந்தன. எல்லாம் வேண்டியபடியே நடந்தன. ழேனியா மனம் கலங்கவில்லை. அவள் ஒருபோதுமே மனம் கலங்கியதில்லை. தன்மேல் நம்பிக்கை கொண்டிருந்தாள். இப்போ

தும், ஜெர்மானியரை ரீதாவிடமிருந்து வேறு புறம் இழுத்துச் செல்கையில்கூட, எல்லாம் நலமே முடியும் என்பதில் அவள் கணமேனும் சந்தேகம் கொள்ளவில்லை.

முதல் குண்டு விலாவில் தாக்கியபோதும் அவள் வியப்பே அடைந்தாள். பத்தொன்பதாம் வயதில் இறப்பது அவ்வளவு அசட்டுத்தனமாக, அபத்தமாக, உண்மைக்குப் பொருந்தாததாக இருந்தது.

ஜெர்மானியர் கண்மூடித்தனமாக, தழைகளின் ஊடாகச் சுட்டுக் காயப்படுத்திஞர்கள். அவள் மறைந்து கொண்டிருக்கலாம், விலகிக்கூடப் போயிருக்கலாம். ஆனுல் அவள் தோட்டாக்கள் இருந்தவரை சுட்டுக் கொண்டிருந்தாள். ஓட முயலாமல் தரையில் கிடந்த வண்ணம் சுட்டுக் கொண்டிருந்தாள், ஏனெனில் இரத்தப் பெருக்கோடு அவளுடைய சக்தியும் வெளிப் போய்க் கொண்டிருந்தது. ஜெர்மானியர் அவள் மீது நேராகக் குண்டுகளைப் பாய்ச்சிஞர்கள். பின்னர், உயிரிழந்த பிறகும் பெருமிதமும் எழிலும் துலங்கிய அவளது வதனத்தை நெடு நேரம் வியந்து நோக்கிக் கொண்டிருந்தார்கள்...

## 14

தனக்குப் பட்டிருந்தது மரணக் காயம் என்பதையும், நீண்ட நேரம் வதைபட்ட பின்பே தனக்குச் சாவு வரும் என்பதையும் ரீதா அறிந்திருந்தாள். இப்போதைக்கு வலி அனேகமாக இல்லை. வயிற்றைத் தான் வர வர அதிகமாகக் காந்தியது, தாகம் எடுத்தது. ஆனுல் தண்ணீர் குடிப்பது கூடாததாய் இருந்தது. ரீதா துணியை நீர்க் குட்டத்தில்

நனைத்து உதடுகள் மேல் வைத்துக் கொண்டாள்.

ஒரு பிர் மரம் வேரோடு சாய்ந்திருந்த பள்ளத்தில் அவளைக் கிடத்தி, அவள்மேல் கிளைகளைப் போட்டு மூடிவிட்டுப் போனான் வஸ்கோவ். அப்போதும் குண்டுகள் வெடித்துக் கொண்டிருந்தன, ஆனால் விரைவில் நிசப்தம் குடிகொண்டது. ரீதா அழுதாள். சத்தமின்றி, விம்மல் இன்றி அழுதாள். முகத்தில் மட்டுமே கண்ணீர் பெருகி வழிந்தது. ழேனியா உயிரோடு இல்லை என்பதை அவள் புரிந்து கொண்டாள்...

பின்னர் கண்ணீரும் வற்றிவிட்டது. அவளுக்கு இப்போது எதிர்ப்பட்டிருந்த பெரிய காரியம் கண்ணீரைப் போக்கி விட்டது. இந்தக் காரியத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வதும் அதற்கு ஆயத்தம் ஆவதும் அவசியமாய் இருந்தன. குளிர் நிறைந்து கறுத்த அடியற்ற பள்ளம் அவள் கால்களின் அருகே திறந்து கிடந்தது. ரீதா துணிவுடன் அதைக் கடுத்து நோக்கினாள்.

தனக்காகவோ, தனது வாழ்க்கையையும் இளமையையும் எண்ணியோ அவள் வருந்தவில்லை. ஏனென்றால் தன்னை விட எவ்வளவோ முக்கியமான ஒன்றைப் பற்றியே அவள் ஓயாது சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய மகன் அனாதையாக, தன்னந் தனியனாக, அவளுடைய நோயுற்ற தாயினிடம் இருந்தான். யுத்தத்தில் அவன் என்ன துன்பங்களை அனுபவிப்பான், அதன் பின் அவனது வாழ்க்கை எப்படி அமையும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள் ரீதா.

வஸ்கோவ் விரைவில் திரும்பி வந்தான். கிளைகளை அகற்றிவிட்டுப் பேசாமல் அருகே உட்

கார்ந்தான். அடிபட்ட கையைப் பிடித்துக்கொண்டு அசைந்தாடினுன்.

''மேளியா கொல்லப்பட்டு விட்டாளோ?''

அவன் தலையை ஆட்டினுன். பின்பு சொன்னுன்:

''நம் சாமான் மூட்டைகளைக் காணும். மூட்டைகளும் இல்லை, துப்பாக்கிகளும் இல்லை. ஜெர்மானியர் ஒன்று எடுத்துப் போய்விட்டார்கள், இல்லாவிட்டால் மறைத்து வைத்திருக்கிருர்கள்.''

''மேளியா உடனே... மரித்துவிட்டாளோ?''

''உடனே'' என்றுன் வஸ்கோவ். அவன் சொன்னது உண்மை அல்ல என்பதை அவள் உணர்ந்தாள். ''அவர்கள் போய்விட்டார்கள். சுரங்க வெடிகளை எடுத்து வருவதற்காக என்று தோன்றுகிறது...'' அவளுடைய மங்கிய, எல்லாவற்றையும் புரிந்து கொண்ட பார்வையை அவனுடைய விழிகள் சந்தித்தன. ''அவர்கள் நம்மை வெல்லவில்லை, புரிந்து கொண்டாயா? நான் இன்னும் உயிரோடு இருக்கிறேன். என்னை வீழ்த்தியாக வேண்டும் இன்னும்!'' என்று கத்தினுன்.

பற்களை நெரித்தவாறு, கை வலியைப் போக்கும் பொருட்டு அசைந்தாடிக் கொண்டு அவன் பேசாதிருந்தான்.

''வலிக்கிறதோ?''

''எனக்கு இங்கே வலிக்கிறது'' என்று நெஞ்சை விரலால் சுட்டினுன் வஸ்கோவ். ''இங்கே கொடிய வலி எடுக்கிறது. பொறுக்க முடியாத வலி!.. உங்கள் எல்லோரையும் மாய்த்து விட்டேன், ஐந்து பேரையும் மடித்தேனே, எதற்காக? ஒரு பத்து ஜெர்மானியருக்காகவா?''

''அட எதற்காக நீ இப்படி அலட்டிக் கொள்கிறாய்?.. எல்லாம் புரிந்தது தானே, யுத்தம்...''

''யுத்தம் நடக்கிற வரையில் புரியும். பிறகு, சமாதானம் வந்ததுமோ? நீங்கள் ஏன் சாக நேர்ந்தது என்பது புரியுமா? நான் இந்த ஜெர்மானியர்களை ஏன் மேலே போக விடவில்லை, எதற்காக அப்படி முடிவு செய்தேன் என்பது விளங்குமா? 'என்ன ஐயா நீங்கள், ஆண்பிள்ளைகள், எங்கள் தாய்மாரைத் துப்பாக்கிக் குண்டுகளிலிருந்து காக்க முடியாமல் போய்விட்டீர்கள்? அவர்களைச் சாவுக்கு மணம் முடித்து வைத்து விட்டு நீங்கள் மட்டும் உயிரோடு இருக்கிறீர்களே, என்ன ஐயா இது? கீரவ் ரெயில் பாதையையும் பெலமோர் கால்வாயையும் காப்பாற்றினீர்களாக்கும்? அங்கேயும் தானே காவல் இருந்தது. ஐந்து பெண்களையும் கைத்துப்பாக்கி வைத்திருந்த சார்ஜண்டு மேஜரையும் விட அதிக ஆட்கள் அங்கே இருந்தார்களே!' என்று இளைஞர்கள் கேட்கும்போது என்ன பதில் சொல்வது?''

''வேண்டாம்'' என்று தணிந்த குரலில் மொழிந்தாள். ரீதா. ''தாய்நாடு கால்வாய்களில் தொடங்குவதில்லையே. நிச்சயமாக இல்லை. நாம் தாய்நாட்டைக் காத்துச் சண்டை போட்டோம். முதலில் தாய்நாட்டை, பின்புதான் கால்வாயை.''

''ஆமாம்...'' வஸ்கோவ் துயரப் பெரு மூச்சு விட்டு, சற்று நேரம் பேசாதிருந்தான். ''நீ கொஞ்சம் படுத்திரு, நான் நாலு பக்கமும் சுற்றிப பார்க்கிறேன். இல்லாவிட்டால் பகைவர்கள் திடீரென்று வந்து விடுவார்கள், நம் காரியம் தீர்ந்துவிடும்.'' அவன் கைத்துப்பாக்கியை எடுத்து எதற்காகவோ அதைக் கவனமாகச் சட்டைக் கையால் துடைத்

தான். ''இந்தா. இதில் இரண்டு தோட்டாக்கள் தான் மிச்சம். இருந்தாலும் இது இருந்தால் நிம்மதி யாக இருக்கும்.''

''பொறு!'' ரீதா அவன் முகத்தைக் கடந்து, கிளை களால் மறைக்கப்பட்டிருந்த வானத்தில் எங்கோ பார்த்தாள். ''நினைவு இருக்கிறதா, கிளை நிலையத் தின் அருகே நான் ஜெர்மானியர்களைத் திடீரென்று கண்டது? நான் அப்போது அம்மாவைப் பார்க்கப் பட்டணம் போயிருந்தேன். என் மகன் அங்கே இருக் கிறான். மூன்று வயது. அவன் பெயர் ஆல்பெர்ட். என் தாயார் கடும் நோயாளி. நெடுநாள் உயிரோடு இருக்க மாட்டாள். என் தகப்பனார் போன இடமே தெரியவில்லை.''

''கவலைப்படாதே, ரீதா நான் எல்லாவற்றை யும் புரிந்து கொண்டேன்.''

''உனக்கு நன்றி.'' நிறமிழந்த உதடுகளால் அவள் புன்னகைத்தாள். ''என் கடைசி வேண்டு கோளை நிறைவேற்றுவாயா?''

''மாட்டேன்'' என்றான் வஸ்கோவ்.

''இது அர்த்தமில்லாதது. எப்படியும் நான் சாகத்தான் போகிறேன். வதைபடுவது தான் மிச் சம்.''

''நான் வேவு பார்த்துவிட்டு வருகிறேன். நடு நிசிக்குள் நம்மவர்களிடம் போய்ச் சேர்ந்து விடு வோம்.''

''என்னை முத்தமிடு'' என்று திடீரெனச் சொன் னாள் ரீதா.

அவன் பாங்கின்றிக் குனிந்து, கூச்சத்துடன் அவள் நெற்றியில் உதடுகளை அழுத்தினான்.

''முள் மயிர்...'' என்று அனேகமாக வாய்க்குள்

மொழிந்தாள் ரீதா. ''போ. என் மேல் கிளைகளைப் போட்டு மூடிவிட்டுப் போ.''

அவளுடைய உட்குழிந்த சாம்பல் கன்னங்களில் கண்ணீர் மெதுவாக வழிந்தது. வஸ்கோவ் ஓசையின்றி எழுந்து ரீதாவைக் கிளைகளால் நன்கு மூடிவிட்டு, ஜெர்மானியரை எதிர்நோக்கி ஆற்றுக்கு விரைவாக நடந்தான்.

பையில் கனமாக ஆடியது பயனற்ற கைக்குண்டு. அவனிடம் இருந்த ஒரே ஆயுதம்...

கிளைகளில் அமிழ்ந்த மந்தமான வெடி ஓசையை அவன் கேட்டான் என்பதைவிட உணர்ந்தான் என்பதே சரியாய் இருக்கும். காட்டின் நிசப்தத்தை உற்றுக் கேட்டவாறு அசையாது நின்றான். பின்பு, நம்புவதற்கு அஞ்சியவனாக, வேருடன் சாய்ந்து விழுந்திருந்த பிரமாண்டமான பிர் மரத்துக்குத் திரும்பி ஓடினான்.

ரீதா பொட்டில் சுட்டுக் கொண்டிருந்தாள். இரத்தம் அனேகமாக வரவில்லை. குண்டுத் துளையைச் சுற்றி நீல வெடி மருந்துத் துகள்கள் விளிம்பு கட்டியிருந்தன. வஸ்கோவ் எதனாலோ அவற்றை நெடு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு ரீதாவை ஒரு புறம் கொண்டு வைத்துவிட்டு அவள் அதுவரை படுத்திருந்த இடத்தில் குழி தோண்டலானான்.

இங்கே தரை மென்மையாக இருந்தது, எளிதில் தோண்ட முடிந்தது. அதைக் கம்பால் குத்தித் தோண்டிக் கைகளால் மண்ணை வாரி வெளியே போட்டான். வேர்களைக் கத்தியால் வெட்டினான். மளமளவென்று குழி தோண்டி, இன்னும் விரைவாக ரீதாவின் உடலை அதில் அடக்கம் செய்தான்.

பின்பு ஒய்வு எடுத்துக் கொள்ளாமல், ழேனியா கிடந்த இடத்துக்கு ஓடினன். கை ஓயாமல் வலித்தது, கடுமையாக வலித்தது, அதில் குத்தல் எடுத்தது. ழேனியாவை மோசமாகவே அடக்கம் செய்தான். இதைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தான், வருந்தினன், வறண்ட உதடுகளால் கிசுகிசுத்தான்:

''மன்னித்துக் கொள், ழேனியா, மன்னித்துக் கொள்...''

தள்ளாடி, இடறி விழுந்தவாறு ஜெர்மானியர்களை எதிர்கொண்டு சினியூஹின் குன்றுத் தொடருக்கு நடந்தான். கடைசிக் குண்டு இருந்த கைத்துப்பாக்கியை இறுகப் பிடித்திருந்தான். ஜெர்மானியர் விரைவில் எதிர்ப்பட வேண்டும், தான் இன்னும் ஒருவனைச் சுட்டு வீழ்த்த வேண்டும் என்பது ஒன்றே இப்போது அவன் விரும்பியது. ஏனென்ருல் திராணி இல்லை. கொஞ்சங்கூடத் திராணி இல்லை. வலிதான் இருந்தது. உடம்பு முழுவதிலும்...

சூடேறிய குன்றுகளுக்கு மேலே அமைதியாகப் படர்ந்தது வெளிர் மங்குல். மூடுபனி தாழ் நிலத்தில் அடர்ந்து விட்டது. காற்று அடங்கிப் போயிற்று. கொசுக்கள் சார்ஜண்டு மேஜருக்கு மேலே படலங்களாகப் பறந்தன. அவனுக்கோ இந்த வெளிர் மூட்டத்தில் தென்பட்டார்கள் அவனுடைய பெண்கள் ஐவரும். அவன் ஓயாமல் ஏதோ முணுமுணுப்பதும் தலையை ஏக்கத்துடன் ஆட்டுவதுமாக இருந்தான். ஜெர்மானியரைக் காணும். அவன் வெளிப்படையாக, ஓசையுடன் அடிவைத்து நடந்தான், ஜெர்மானியரைச் சந்திக்க விரும்பினன். ஆனல் அவர்கள் அவனுக்கு எதிர்ப்படவும் இல்லை,

அவன் மீது குண்டு சுடவும் இல்லை. இந்தச் சண் டைக்கு முடிவு கட்ட வேளை வந்து விட்டது, முற்றுப் புள்ளி வைக்க நேரம் வந்து விட்டது. அந்தக் கடைசிப் புள்ளி அவனது கைத்துப்பாக்கி யின் சாம்பல் நிறக் குழாயில் இருந்தது.

வெடித் திரி இல்லாத கைக்குண்டும் இருந்தது. இரும்புத் துண்டு. இந்தத் துண்டை அவன் எதற் காக எடுத்துச் செல்கிறுன் என்று யாராவது கேட் டால் அவனுல் பதில் சொல்ல முடிந்திராது. இரா ணுவச் சொத்தைக் காப்பற்றி வைக்கும் சார்ஜண்டு மேஜருக்கு உரிய பழக்கத்தால் வெறுமே எடுத்துச் சென்றுன்.

இப்போது அவனிடம் எந்த நோக்கமும் இல்லை. விருப்பம் மட்டுமே இருந்தது. அவன் சுற்றி நடக்க வில்லை, அடிச் சுவடுகளைத் தேடவில்லை. முடுக்கி விடப்பட்ட இயந்திரம் போல நேரே சென்றுன். ஜெர்மானியர்களோ, எதிர்ப்படவே காணும்...

தேவதாரு மரச் சோலையைக் கடந்து, காட்டின் வழியே நடந்தான். காலையில் தான் அவ்வளவு சுளு வாக ஆயுதத்தைக் கைப்பற்றிய லெகோன்தவ் மடத்தை நெருங்கினுன். எதற்காக அங்கே போ கிறேம் என்று அவன் எண்ணிப் பார்க்கவில்லை. ஆனுல் அவனுடைய தவருத வேட்டைக்கார இயல் பூக்கம் அவனை இந்த வழியிலேயே நடத்திச் சென் றது. அவன் அதற்குக் கீழ்ப்பட்டான். அதற்கு மட்டுமே கீழ்ப்பட்டவனுக அவன் திடீரென்று நடை வேகத்தைக் குறைத்து உற்றுக் கேட்டவாறு புதர் களில் மறைந்தான்.

கிணற்றின் உளுத்த மரச் சுவரும் பழைய குடிலும் இருந்த திறப்பு வெளி ஒரு நூறு மீட்டர்

தூரத்தில் தொடங்கியது. இந்த நூறு மீட்டர்களை யும் வஸ்கோவ் ஓசையின்றி மெல்லடி வைத்து நடந் தான். அங்கே பகைவன் இருப்பதை அவன் தெரிந்து கொண்டான். முயல் எங்கிருந்து வெளியே பாயும் என்று ஓநாய் தெரிந்து கொள்வது போன்று நிச்சய மாகவும் விளக்கமுடியாத வகையிலும் அவன் அறிந்து கொண்டான்.

திறப்பின் அருகில் இருந்த புதர்களின் மறை வில் அவன் அசையாது நீண்டநேரம் நின்று கிணற் றின் மரச் சுவற்றையும் சாய்ந்த மடத்தையும் மூலை களிலிருந்த கருண்ட புதர்களையும் விழிகளால் துழா விஞன். கிணற்றின் அருகே அவன் கொன்ற ஜெர் மானியனின் உடல் இல்லை. சுற்று முற்றும் குறிப் பாக எதுவும் இல்லை, ஒன்றும் கவனத்தை ஈர்க்க வில்லை, ஆயினும் சார்ஜண்டு மேஜர் பொறுமை யுடன் காத்திருந்தான். குடிலின் மூலையிலிருந்து மங்கலான கறை ஒன்று சற்றே நகர்ந்ததைக் கண்டு அவன் வியப்பு அடையவில்லை. பாராக்காரன் அங்கே நிற்பதை அவன் முன்பே அறிந்திருந்தான்.

பாராக்காரனை நோக்கி அவன் வெகு நேரம், முடிவின்றி நீண்ட நேரம் நடந்தான். கனவில் போன்று மெதுவாக ஒரு பாதத்தை உயர்த்திஞன், மெல்லென அதைத் தரையில் வைத்தான். அடுத்த அடியை உடனே எடுத்து வைக்கவில்லை. உடல் கனத்தைத் துளித் துளியாக மறு காலுக்கு மாற்றி ஞன்—ஒரு கிளை கூட நெறுநெறுக்கக் கூடாது என் பதற்காக. இவ்வாறு விந்தையான பட்சி நடனம் ஆடிய வண்ணம் அவன் திறப்பு வெளியைச் சுற்றிப் போய், அசையாமல் நின்ற பாராக்காரன் முதுகுப் புறத்தை அடைந்தான். அகன்று கறுத்த அந்த

முதுகை முன்னிலும் மெதுவாக, முன்னிலும் மென் மையாக அடிவைத்து நெருங்கினன். அவன் நடக்க வில்லை, நீந்தினன்.

ஓர் அடி தூரத்தில் நின்று விட்டான். வெகு நேரம் மூச்சை அடக்கிக் கொண்டிருந்தான். இப் போது இருதயம் நிதானத்துக்கு வருவதற்காகக் காத்திருந்தான். வெகு நேரம் முன்பே கைத்துப் பாக்கியை உறையில் வைத்து விட்டான். இப்போது கட்டாரியை வலக்கையில் பிடித்துக் கொண்டு வேற்று உடலின் கடு நெடியை முகர்ந்தவாறு, ஒரே ஒரு முடிவான குத்துக்கு வாக்காகக் கட்டாரியை உயர்த்தினன்.

மேலும் சக்தியைத் திரட்டிக் கொண்டான். சக்தி கொஞ்சந்தான் இருந்தது. மிக மிகக் கொஞ்சம். இடது கையோ, எதற்கும் உதவும் நிலையில் இல்லை.

அந்தக் குத்தில் அவன் தன் பலத்தை எல்லாம் செலுத்தினன். கடைசித் துளிவரை பலம் முழுவதை யும். ஜெர்மானியன் அனேகமாகக் கத்தவில்லை. விந் தையான நீண்ட பெருமூச்சு மட்டும் விட்டு முழங் கால்களை மடித்துச் சரிந்தான். சார்ஜண்டு மேஜர் ஒரு பக்கம் சாய்ந்த கதவைத் தடாலெனத் திறந்து குடிலுக்குள் தாவிக் குதித்தான்.

''கைகளை உயர்த்துங்கள்!''

ஜெர்மானியர் உறங்கிக் கொண்டிருந்தார்கள். இருப்புப் பாதைக்குக் கடைசி நடை புறப்படு முன் உறங்கி இளைப்பாறினர்கள். ஒருவன் மட்டும் தூங்க வில்லை. துப்பாக்கியை எடுக்க மூலைக்குப் பாய்ந்தான். வஸ்கோவ் இந்தப் பாய்ச்சலைக் கண்டு கொண்டு அனேகமாக நேராகத் தாக்கி ஜெர்மானி யனைக் குண்டுக்கு இரையாக்கினன். தாழ்ந்த விட்

டம் குண்டு வெடிப்பால் அதிர்ந்தது, ஜெர்மானியன் சுவற்றில் மோதி விழுந்தான். சார்ஜண்டு மேஜர் திடீரென்று எல்லா ஜெர்மன் வார்த்தைகளையும் மறந்துவிட்டான். கரகரத்த குரலில் கத்தினன்:

''கீழே படு!.. கீழே படு!.. கீழே படு!..''

பின்பு ருஷ்ய மொழியில் ஆபாச வசவுகளைப் பொழிந்தான். தனக்குத் தெரிந்த கோரத்திலும் கோரமான வசைச் சொற்களால் திட்டி நொறுக்கினன்.

இல்லை, ஜெர்மானியர் பயந்தது இந்தக் கூச்சலுக்கோ சார்ஜண்டு மேஜர் வீசி ஆட்டிய எறி குண்டுக்கோ அல்ல. அவன் தனியன், பல கிலோ மீட்டர் தொலைவுக்கு அவன் தன்னந் தனி ஆள் என்று எண்ண, கற்பனை செய்ய அவர்களால் முடியவில்லை. அவர்களுடைய பாசிஸ்டு மூளைகளில் இந்தக் கருத்து இடம் பெற முடியவில்லை, அதனுல்தான் அவர்கள் தரையில் கிடந்தார்கள். அவன் ஆணையிட்டபடியே முகம் குப்புற. மிஞ்சிய நான்கு பெயரும் கிடந்தார்கள். ஐந்தாமவன் தான் பாய்ந்தவன். அவன் ஏற்கெனவே மறு உலகில் இருந்தான்.

ஒருவருடைய கைகளை மற்றவர் இடைவார்களால் இறுக்கிக் கட்டினர்கள். கச்சிதமாகக் கட்டினர்கள். கடைசி ஜெர்மானியனின் கைகளை வஸ்கோவ் தானே கட்டினன், பின்பு கண்ணீர் பெருக்கினன். அழுக்கேறிய, மழிக்காத முகத்தில் பெருகிற்று விழி நீர். வஸ்கோவ் குளிரால் நடுங்கினன், கண்ணீருக்கு இடையே சிரித்தான்.

''என்ன, பிடித்து விட்டீர்களா? பிடித்து விட்டீர்களா, ஊம்? ஐந்து பெண்கள், மொத்தம் ஐந்தே

பெண்கள் இருந்தார்கள், எல்லோருமாக ஐந்தே பெயர்!.. ஆனாலும் உங்களால் அவர்களைக் கடந்து போக முடியவில்லை. எங்குமே போக உங்களால் முடியவில்லை! இங்கேயே செத்து மடிவீர்கள் நீங் கள், எல்லோரும் சாவீர்கள்!.. என் கையாலேயே உங்கள் ஒவ்வொருவனையும் கொல்லுவேன்! தலைமை அதிகாரிகள் மன்னித்துவிட்டாலும் நானே கொல்லுவேன்! அப்புறம் என்மேல் வழக்கு தொடுக் கட்டும்! தொடுக்கட்டும் வழக்கு!..''

கையில் குத்தல் எடுத்தது. அது விண் விண் என்று தெறித்தது. அந்த வலியால் அவனுக்குள் தீப்பற்றி எரிந்தது. எண்ணங்கள் குழம்பின. எனவே தான் அவன் நினைவை இழந்து விடுவோமோ என்று வெகுவாக அஞ்சினான். நினைவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தான். எஞ்சிய சக்தி அனைத் தையும் ஈடுபடுத்திப் பிடித்துக் கொண்டிருந் தான்...

அந்தக் கடைசி நடையை அவனால் பின்பு ஒரு போதும் நினைவுபடுத்திக் கொள்ள முடியவில்லை. ஜெர்மானியரின் முதுகுகள் அவன் முன்னே எழுந்து எழுந்து தணிந்தன, இடமும் வலமுமாக அசைந் தாடின. ஏனென்றால் வெறியேறக் குடித்தவன் போலத் தள்ளாடினான் வஸ்கோவ். இந்த நான்கு முதுகுகளைத் தவிர வேறு எதையும் அவன் காண வில்லை. நினைவை இழக்க நேர்ந்தால் அதற்குமுன் இந்த நால்வரையும் சுட்டுத்தள்ளி விட வேண்டும் என்ற ஒரே எண்ணம் தான் அவன் மனத்தில் இருந் தது. நினைவோ, கடைசி இழையில் ஊசலாடிக் கொண்டிருந்தது. உடம்பு முழுவதும் காந்திக் காந்தி வலித்தது. இந்த வலியால் அவன் கதறினான்.

கதறி அழுதான், கடைசியில் வலு இழந்து விட்டான் போலும்.

அவர்களை யாரோ கூவி அழைத்தார்கள். தன்னவர்கள், ருஷ்யர்கள் எதிரே வருகிறார்கள் என்பதை அவன் புரிந்து கொண்டான். அப்போது தான் நினைவு தப்புவதற்கு அவன் அனுமதித்தான்...

**பின்னுரை**

...வணக்கம், நண்பா!

நீ அங்கே வேலையில் முனைந்திருக்கிறாய், நாங்களோ, தூசி தும்பு இல்லாத ரம்மியமான இடத்தில் மீன் பிடித்துக் கொண்டு பொழுதைக் கழிக்கிறோம். பாழும் கொசுக்கள் பிடுங்கித் தின்கின்றன என்பது உண்மைதான், ஆனாலும் வாழ்க்கை சுவர்க்க போகம் தான் போ! நான் சொல்வதைக் கேள். பேசாமல் விடுமுறை எடுத்துக் கொண்டு இங்கே வந்துசேர். இங்கே கார்களும் கிடையாது, ஆள் கூட்டமும் கிடையாது. ஒரே நிம்மதி. வாரத்துக்கு ஒரு தரம் மோட்டார்ப் படகு ரொட்டி எடுத்துக்கொண்டு வருகிறது, அவ்வளவுதான். மற்ற பொழுதெல்லாம் அம்மணமாய்த் திரிந்தாலும் கேட்பார் இல்லை. உல்லாசப் பயணிகளின் பொழுது போக்குக்கு இரண்டு பெரிய ஏரிகளும் ஓர் ஆறும் இருக்கின்றன. ருசியான மீன்கள் நிறைந்தவை அவை. குடைக் காளான்களையோ, வருணித்து மாளாது!..

நிற்க, இன்றைக்கு மோட்டார்ப் படகில் வந்தார் யாரோ கிழவனார். நரைமுடி, கட்டுக் குட்டான மேனி, ஒரு கை இல்லை. அவரோடு வந்தார் ராக்கெட் படைக் காப்டன். காப்டன் பெயர் ஆல்

பெர்ட் பெதோத்திச் (எப்படி இருக்கிறது?) கிழவனுரை அவர் நாட்டுப்புறப் பாணியில் ''ஐயா'' என்று அழைத்தார். அவர்கள் இங்கே எதையோ தேடினுர்கள். என்ன என்று நான் துருவிக் கேட்கவில்லை...

...நேற்று கடிதத்தை முடிக்க நேரமில்லை. காலையில் முடிக்கிறேன்.

இங்கேயும் சண்டை நடந்ததாம்... நீயும் நானும் பிறப்பதற்கு முன் நடந்தது இந்தச் சண்டை...

ஆல்பெர்ட் பெதோத்திச்சும் அவருடைய தகப்பனும் சலவைக்கல் பாளத்தை எடுத்து வந்திருந்தார்கள். நாங்கள் கல்லறையைத் தேடினேம். அது ஆற்றின் மறு கரையில், காட்டில் இருக்கிறது, காப்டனின் தகப்பனுர் தமக்குத் தெரிந்த எவையோ குறிகளைக் கொண்டு அதைக் கண்டு பிடித்தார். பாளத்தை எடுத்துப் போக அவர்களுக்கு உதவ விரும்பினேன், ஆனுல் தயக்கமாய் இருந்தது.

இங்கேதான் காலை நேரம் எவ்வளவு அமைதியாய் இருக்கிறது! இன்றுதான் கவனித்தேன்.

## வாசக நேயர்களுக்கு

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் யோசனைகளை வரவேற்கவும் **ராதுகா பதிப்பகம்** மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களைத் தயை செய்து Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41, பி. சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,*
*சென்னை—600098*

**ஷோ-ரூம்**

*136, மவுண்ட் ரோடு, சென்னை—600002*

**கிளைகள்**

*80, மேலக் கோபுர வீதி, மதுரை—625001*
*87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர்—641001*
*சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி—620008*
*செர்ரி ரோடு, சேலம்—636001*

**விற்பனை நிலையங்கள்**

*3—22—75—D, மதுரை சாலை; திருநெல்வேலி ஜங்ஷன்*
*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*

## அன்புடையீர்!

*1982 ஜனவரி முதல் தேதியன்று* **ராதுகா பதிப்பகம்** *அமைக்கப் பட்டது.* **முன்னேற்றப் பதிப்பகம்** *மாபெரும் வளர்ச்சியடைந் திருப்பதால்* **ராதுகா பதிப்பகம்** *தனியான நோக்கங்களோடு தனி ஸ்தாபனமாக அமைக்கப்பட்டிருக்கிறது.*

**ராதுகா பதிப்பகம்** *மூலச்சிறப்புடைய ருஷ்ய இலக்கியங்களை யும், சோவியத் இலக்கியங்களையும் குழந்தைகளுக்குரிய புத் தகங்களையும் வெளியிடும். இலக்கிய ஆராய்ச்சி, கலை, மொழி யியல், விளையாட்டு மற்றும் சுற்றுப்பயணத்துறை பற்றிய நூல்களை இப்பதிப்பகம் வெளியிடும்.*

*வெளிநாடுகளைச் சேர்ந்த நவீன எழுத்தாளர்கள், இலக் கிய ஆராய்ச்சியாளர்கள், மொழியியல் அறிஞர்கள், கலைஞர் கள், சுற்றுலா நிபுணர்களுடைய நூல்களை* **ராதுகா பதிப்பகம்** *ருஷ்ய மொழியில் வெளியிடும்.*

*மேலே கூறப்பட்ட தலைப்புக்களில் புத்தகங்களை வெளியிடு வது பற்றி* **முன்னேற்றப் பதிப்பகத்தின்** *எல்லாப் பொறுப்புக் களையும்* **ராதுகா பதிப்பகம்** *நிறைவேற்றும். இதற்கு முன்பு சர்வ தேசப் புத்தகக் கண்காட்சிகளிலும் புத்தகச் சந்தைகளிலும்* **முன்னேற்றப் பதிப்பகம்** *செய்துள்ள ஒப்பந்தங்களையும்* **ராதுகா பதிப்பகம்** *நிறைவேற்றும்.*

*ராதுகா பதிப்பகத்தின் முகவரி:* 17, Zubovsky Boulevard, Moscow 119021, USSR.

"அதிகாலையின் அமைதியில்" என்பது, பரீஸ் வசிலி யெவ் (பிறப்பு 1924) எழுதிய முதல் நவீனம். ஆசிரியருக்குப் பெரும் புகழ் தேடித் தந்த இந்த நவீனம், இளைஞர்களுக் கான சிறந்த நூலுக்கு உரிய பரிசைப் பெற்றது. ஹிட்ல ரின் பாசிஸத்தை எதிர்த்து சோவியத் மக்கள் நடத்திய மாபெரும் தேசபக்தப் போர்க் காலத்தில் சோவியத் இளை ஞர்கள் ஆற்றிய வீரத்தை இந்த நூலில் வருணிக்கிறார் பரீஸ் வசிலியெவ்.

...பதினாறு பாசிஸ்டுகளை எதிர்த்து நின்றனர் அவர் கள் அறுவர்—விமான எதிர்ப்புப் படைப்பிரிவைச் சேர்ந்த ஐந்து பெண்களும் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவும். இவர்கள் ஒவ்வொருவரது போர்க்கால வாழ்க்கையும் தனி வகை யானது. ஒவ்வொருவரும் தனிப்பட்ட காரணத்தால் பாசிஸ்டு களைப் பழிவாங்கத் துடித்துக் கொண்டிருந்தார்கள். போர் முனையை அடுத்த பின்புலப் பகுதியில் பிடிக்கப்பட்ட பாசிஸ்டு அழிவுப் படையினரை இவர்கள் எப்படித் தடுத்து நிறுத்தி அவர்களுடைய திட்டத்தைக் குலைத்தார்கள் என்பதே "அதிகாலையின் அமைதியில்" என்னும் இந்த நவீனத்தின் கதைக் கரு.